


இருமல், தொண்டைப்புண், பிராங்கைடிஸ் ஆஸ்த்மா மற்றும் கக்குவான் இருமல் இவைகளினின்று நிவாரணம் அளிப்பதால்தான் டாக்டர்கள் 60 வருஷகாலமாக பெர்டுஸின் டெஷ்னரைச் சாப்பிடும்படி சொல்லிவருகிருர்கள். துரித நிவாரணம், யாதொரு கெடுதியுமின்றி நிவாரணம். சாப்பிடுவதற்கு ஆனந்தம். ஆகவே நீங்களும் பெர்டுஸின் வாங்குங்கள்.

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கிறது.

இடாபா லிமிடெட், ஷான், வீடென்ஸ்வல் ஸ்விஸ் கண்டம் அண்ட் இகுமிக் டெரிடெரி இவர்களின் அனுமதியின் பேரில் இன்பா லிமிடெட் தபால் பெட்டி 1041, பம்பாய் - 1 இவர்களால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

மலர் 14 :: இதழ் 23
ஜய ௵ :: மார்கழி 18



# கல்கி

## பொருளடக்கம்

1955 ஜனவரி ௨



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

இதோ இருப்பது
மைசூர் சாந்தா



ருசியான உணவை
பரிமாறினால்
அவள்
கணவருக்கு
அதிக
ஆனந்தம்

ருசியான உணவை சமைக்க
ஏற்றது...




துங்கபத்ரா இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட். கர்நூல்.
துஷார் சுத்திகரித்த எண்ணெயும் கிடைக்கும்




தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார்

# நாடகக் கலைக்குப் பாதுகாப்பு

தமிழ்ப் பெருமக்கள் சட்டசபைகளுக்கு அனுப்பிய பிரதிநிதிகள் இந்தத் தடவை நடந்த சபைக் கூட்டத்தில் தமிழ் நாட்டின் பண்பாட்டுக்கும் பெருமைக்கும் உகந்த ஒரு நல்ல காரியத்தைச் செய்து முடித்தனர்.

கம்பர் பிறந்த தமிழ் நாட்டுக்கும் வள்ளுவர் வகுத்த வழியைப் பின்பற்றும் தமிழ் மக்களுக்கும் ஆரம்பமான விபத்து முற்றி விடாமல் தடுப்பதற்கான சட்டம் ஒன்றைக் காலம் கடத்தாமல் நிறைவேற்றி வைத்தனர்.

மக்களின் பண்பாட்டை, அறிவை, ஒழுக்கத்தைப் பாழ்படுத்தும் ஆட்சேபகரமான நாடகங்களைத் தடுப்பதே புதிய சட்டத்தின் நோக்கம் ஆகும்.

நடிக்கும் விஷயம் எந்த வகுப்பினரின் மத உணர்ச்சியையும் புண்படுத்துவதாக இருக்கக் கூடாது; எம் மதத்தையும் அவமதிப்பதாக இருக்கக் கூடாது; யாருடைய சமய நம்பிக்கையையும் இழிவுபடுத்துவதாக இருக்கக் கூடாது; இதுதான் ஜனப் பிரதிநிதிகள் நிறைவேற்றியுள்ள புதிய சட்டத்தின் சாரம்.

நீதி நெறியை அடிப்படையாகக் கொண்ட நேர்மையான நாடகங்களுக்குப் புதிய சட்டத்தினால் எத்தகைய பாதகமும் ஏற்படாது.

ஆனால், சீர்திருத்தம் என்ற பொய்ப் பெயரால் மக்களின் அறிவைக் குட்டிச் சுவராக்கும் ஆபாசமான, கீழ்த்தரமான 'கீடகங்களிலிருந்து'ம் கூத்துக்களிலிருந்தும் மக்கள் சமுதாயத்தைப் பாதுகாப்பதற்காகப் புதிய சட்டம் ஏற்பட்டிருக்கிறது. சமுதாயத்தில் உன்னதமான ஸ்தானத்தை அடைந்துள்ள நாடகக் கலை மறுபடியும் கூத்து மேடையாகி விடாமல் பாதுகாப்பதற்கே அந்தச் சட்டம் பயன்படும்.

இப்போது அத்தகைய சட்டம் இயற்றும்படியான அவசியம் என்ன நேர்ந்தது என்பது தமிழகம் சிரித்த கதையாதலால், அதை விளக்க வேண்டிய அவசியம் எதுவுமில்லை.

சட்டத்தைக் கொண்டு வந்து நிறைவேற்றிய சென்னை சர்க்காரை ராஜாஜி மேல் சபையில் மிகவும் பாராட்டிப் பேசினார்.

"சமுதாயச் சீர்திருத்தம், நாடகக் கலை, இலக்கியம் இவற்றிற்கு இந்தச் சட்டத்தினால் யாதொரு தீங்கும் நேராது என்பது திண்ணம். ஒரு புத்தகம் அல்லது சினிமாப் படம் இவற்றிற்கும் நாடகத்துக்கும் பெரிய வேற்றுமை உண்டு. புத்தகத்திலோ சினிமாவிலோ தணிக்கை அதிகாரிகள் ஏதாவது திருத்தம் செய்தால், அதைப் பிறகு யாரும் இஷ்டப்படி மாற்றுவது முடியாத காரியம்.

"ஆனால், நாடக விஷயம் வேறு. குறிப்பிட்ட நாடக வசனங்களின் எழுத்துப் பிரதியைப் பல கனவான்கள் சேர்ந்து வாசித்துத் தணிக்கை செய்திருக்கலாம். ஆனால், நாடகம் நடக்கும்போது அதில் வரும் வசனங்களுக்கும் தணிக்கை அதிகாரிகள் வாசித்த எழுத்துப் பிரதியின் வசனங்களுக்கும் மாறாக இருக்கலாம். எனவே, நாடகக் கட்டுப் பாட்டுச் சட்டம் என்று பிரத்தியேகமாகச் சட்டம் இருக்க வேண்டியது அவசியம்.

"ஜனங்களின் மனத்திலிருந்து சமயப் பற்றுதலை அகற்றுவதில் ருஷ்ய சர்க்கார் தீவிர மாக இருந்து வருகிறார்கள். அவர்கள்கூட, மத நம்பிக்கை யுள்ளவர்களின் உணர்ச்சிகளைப் புண்படுத்தக் கூடாதென்று எச்சரித்து வருகிறார்கள். எனவே, சமய உணர்ச்சிகளைப் புண் படுத்துவது ஆபத்தாக முடியும். அதன் விளைவாக உதிரம் பெருகும்."

இவ்வாறு, சட்டசபையில் பேசிய ராஜாஜி நாடகக் கட்டுப்பாட்டுச் சட்டத்தின் அவசி யத்தைத் தெளிவாக்கினார்.

இறுதியாக, "நெருப்புடன் விளையாடாதீர்கள்" என்று ரத்தினச் சுருக்கமாகக் கூறி முடித்தார்.

சரித்திர காலந் தொட்டு இந்தப் பூவுலகில் நடந்த யுத்தங்களில் பலியானவர்களின் கணக்கில், மதப் போரில் ஈடுபட்டு மாண்டவர்களின் தொகைதான் மிகவும் அதிகம்.

# கார்ட்டூன்

## திரை விழுகிறது!

ஆபாச நாடகங்கள்

நாடகக் கட்டுப்பாடு மசோதா

நாடகக் கட்டுப்பாடு மசோதா சென்னைச் சட்டசபையில் நிறைவேறியது

## அபாயம், ஜாக்கிரதை!




## நவீன விசுவாமித்திரர்







உணவுப் பொருள்களின் விலைவாசிகள், அளவுக்குக் கீழே இறங்காமல் இருக்க இந்திய சர்க்கார் முயற்சித்து வருகிறார்கள்!

## உரிமைப் போர்!



# கதம்பம்










கதையின் ஆச்சரிய முடிவு!

பலமாதங்களாக நேருஜி முகம்மது அலியைச் சந்தித்துப் பேச விரும்பினார்! முகம்மது அலியும் நேருஜியைப் பார்த்துப் பேச ஆசைப்பட்டார்— ஆனால் இருவரும் யாரும் எதிர் பாராத வண்ணம் கல்கத்தாவில் சந்தித்தனர்!






ஐரோப்பாவில் சுமார் 1100-ம் ஆண்டில் ஆரம்பமான மத யுத்தம் 1300-ம் ஆண்டு வரையில், அதாவது 200 வருஷ காலம் நடந்தது.

பாரத நாட்டில் உக்ரமான மதப்போர் நடந்ததில்லை யெனில் அதற்குக் காரணம் ஹிந்து மதத்தின் சிறப்பும் பரந்த நோக்கமுமே ஆகும்.

எனினும், அந்தச் சகிப்புத் தன்மைக்கு எல்லையுண்டு அல்லவா! இன்று பாரத நாட்டில் அரசியல் துறையிலும், பொருளாதாரத் துறையிலும், சமுதாயத் துறையிலும் தொண்டு செய்வதற்கு, உண்மையான, அவசியமான சீர்திருத்தங்கள் செய்து நாட்டின் நலனை மேம்படச் செய்வதற்கு எவ்வளவோ இடமிருக்கிறது. ஆனால், சிலர் பாரத நாட்டின் சிறந்த நாகரிகத்துக்கும் பெருமைக்கும் அடிப்படையான ராமாயணம், பாரதம் போன்ற இதிகாசங்களை இழிவுபடுத்த முற்பட்டிருப்பதை என்னவென்று வர்ணிப்பது?

# உண்டு என்றால் இல்லை என்பார்!

அத்தகையோரை, தீர்க்கதரிசியான தமிழ் மறை மாமுனிவர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வர்ணித்துச் சென்றிருக்கிறார்!

**உலகத்தார் உண்டென்ப தில்லென்பான், வையத்து அலகையா வைக்கப் படும்.**

உலகத்தார், உலகில் உள்ள பேரறிஞர்கள் உண்டு என்று சொல்லும் உண்மையை அவர்கள் இல்லை என்கிறார்கள்!

ருஷ்யா உள்பட உலகிலுள்ள பல நாடுகளின் அறிஞர்கள் இணையற்ற பொக்கிஷங்கள் என்று கருதி மொழிபெயர்த்துள்ள புனிதமான இந்திய இதிகாசங்களை இவர்கள் இழிவுபடுத்துகிறார்கள்! அவ்விதம் இழிவுபடுத்துவது தங்களைத் தாங்களே இழிவுபடுத்திக்கொள்வதாகும் என்பதை இவர்கள் அறியாதது விபரீதமான அதிசயந்தான்! ஜாதித் துவேஷம் மக்களின் மதியை எவ்வளவு தூரம் கெடுக்கும் என்பது இதனால் விளங்குகிறது.

* * *

ராமாயணத்தில் உள்ள சம்பவங்கள் உண்மையாக நடந்தவையா அல்லவா என்ற பிரச்னையே எழுவதற்குக் காரணம் இல்லை. இதைப் பற்றிய கதைகளும், காட்சிகளும், காவியங்களும், ஓவியங்களும், சிற்பங்களும், சிலாசாசனங்களும் பல நாடுகளில் மலிந்து கிடக்கின்றன.

பாரத நாட்டில் மாத்திரமல்ல, இலங்கை, இந்தோனேஷ்யா, சயாம் முதலிய நாடுகளிலும் பல்வேறு உருவங்களில் ராமாயணக் காட்சிகளை இன்றும் காண்கிறோம்.

கடவுள் அவதாரம் என்பதை விட்டுவிட்டாலும் ஓர் ஆதர்ச புருஷரான ஸ்ரீ ராமபிரானையும் பெண் திலகமான சீதா பிராட்டியாரையும் மகா கவி வால்மீகியின் சிருஷ்டியாகவாவது வைத்துக் கொள்ளலாம் அல்லவா!

பாரத மக்களின் வாழ்க்கைக்கு மாத்திரமல்ல, உலக மக்களின் வாழ்க்கைக்கே, மானிட வர்க்கத்தின் உத்தாரணத்துக்கே வழிகாட்டியாக விளங்கும் அத்தகைய அவதார திலகங்களின் புனித சரித்திரத்தை மாற்ற விரும்புவதோ, இழிவுபடுத்த முற்படுவதோ சகிக்க முடியாத செயல் என்பதை நியாய புத்தியும் நேர்மையும் உள்ள எவரும் ஒப்புக் கொள்வர்.

தன் அன்னையிடத்தில், தந்தையிடத்தில், சகோதரரிடத்தில், மனைவியிடத்தில், மக்களிடத்தில் ஸ்ரீ ராமனைப் போல் நடந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் இல்லாத மனிதர் குறிப்பாகப் பாரத புண்ணிய பூமியில் இருக்க முடியுமா?

துன்பக் கடலில் தவித்த போதும் கற்பின் சிகரமாக விளங்கிய சீதா பிராட்டியாரை, பாரதப் பெண் திலகங்கள் பூஜித்து வருகிறார்கள்; என்றென்றும் பூஜித்து வருவார்கள் என்பதில் ஐயம் உண்டோ!

ராவணன் பிராமண குலத்தில், பிரம்மாவின் வம்சத்தில் பிறந்தவன்! ஸாம வேதத்தைக் கரை கண்டவன்; தவ வலிமையால் மகோன்னதமான ஸ்தானத்தை அடைந்தவன்; குபேர சம்பத்தைக் காட்டிலும் அதிக செல்வத்தைப் பெற்றவன். அவ்வளவு மகத்துவம் வாய்ந்தவனாக இருந்தும், தான் அடைந்த பலத்தின் மதிமயக்கம் காரணமாக நேர் வழியை விட்டு நெறி தவறியதால், அதோகதியாகி அழிந்தான் என்ற கதையில் மகத்தான வாழ்க்கைத் தத்துவம் அடங்கி யிருக்கிறது.

கல்வியறிவற்ற வேடனாக இருந்த வால்மீகி தம்முடைய உறுதியினால், உழைப்பினால், பக்தியினால் சிரஞ்சீவித் தன்மை வாய்ந்த மகா கவியானார் என்ற உண்மையைக் கண்டு மெய் சிலிர்க்காதவர்கள் இருக்க முடியுமா!

பல்லாண்டு பல்லாண்டாகப் பாரத நாட்டின் பெருமைக்கும் உயர்ந்த பண்பாட்டுக்கும் எடுத்துக் காட்டாக விளங்கும் இதிகாசத்தை மாற்றியும் கேலிக் கூத்துச் செய்து இழிவு படுத்தியும் வருவதை உடனே தடுக்காவிடில், அது எத்தகைய விபரீதத்தில் வந்து முடியுமோ, யாரும் சொல்ல முடியாது.

விபரீதத்துக்குத் தமிழ் நாடு இலக்காகி விடக் கூடாது என்ற சீரிய நோக்கம் கொண்டு நாடகக் கட்டுப்பாட்டுச் சட்டத்தை நிறைவேற்றியுள்ள சென்னை ராஜ்ய சர்க்காரைப் பாராட்டுகிறோம்.

# கூட்டு அறிக்கை காட்டும் பாதை!

**1914**-ம் வருஷம் முதலாவது உலக மகா யுத்தம் ஆரம்பமான போது, அதை, "இது உலகத்தில் யுத்தத்தை ஒழிக்கப் போகும் யுத்தம்" என்று உலக ராஜதந்திரிகள் வர்ணித்தார்கள். அந்த யுத்தம் நடந்த காலத்தில் பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்த லாயிட் ஜார்ஜ் மேற்படி யுத்தத்தின் போது நிகழ்ந்த சம்பவங்களை விவரித்துப் பல புத்தகங்கள் எழுதினர். ஆனால், அந்த யுத்தம், உலகில் யுத்தத்தைத் தடுக்கும் யுத்தமாக முடியவில்லை. மற்றொரு கொடிய மகா யுத்தத்துக்கு விதையாக அமைந்தது!

அதற்குப் பிறகும் சர்வ தேச ராஜ தந்திரிகள் தங்களுடைய பல்லவியைக் கைவிட வில்லை. உலகத்தில் யுத்தத்தை ஒழிக்க வேண்டுமாயின் மற்றொரு மகா யுத்தம் ஏற்பட்டுத் தீரவேண்டும் என்று திருவாய் மலர்ந்து அருளினார்கள்.

# சந்தர்ப்பம் எதுவாயினும் கோடக் ஸ்னப்ஷாட்டுக்கு அரிய வாய்ப்பு கிடைக்கும்



எவ்வளவு க்ஷணம் வருடங்கள் பறந்தோடுகின்றன! இன்னும் சில ஆண்டுகளில், நீங்கள் பார்த்திருக்கவே, உங்கள் சின்னப்பையன் வளர்ந்து பெரியவனாகிவிடுவான். இருந்தாலும், என்ன ஆச்சரியம், 'கோடக்' ஸ்னப்ஷாட்டுகள்மட்டும் எடுத்துவைத்திருந்தால் அவை அவனது குழந்தைப் பருவத்தின் அருமையான க்ஷணங்கள்ஒவ்வொன்றையும் உங்களுக்கு நினைப்பூட்டும் .... தவிர, 'கோடக்' பிலிம்களைக் கொண்டு சிறந்த படங்கள் எடுப்பதும் மிகச்சுலபமே.




**வெரிக்ரோம்:** வெளிக்காட்சிகளோ, சகஜமான வெளிச்சத்தில் எந்த காமிராவைக் கொண்டும் எடுப்பதற்கு உகந்த பிலிம் இது.




**ப்ளஸ் – X:** விளக்கமான பெரிய என்லார்ஜ்மெண்டுகள் தரவல்ல தெளிவான படங்கள் எடுப்பதற்கு மிகச்சிறந்தது.




**ஸூப்பர் – X X:** துரிதமான வேகம் காட்சிகளுக்கும், மங்கிய வெளிச்சத்தில் அல்லது வீட்டினுள் படம்பிடிக்கவும் இணையற்றது.

## ஒவ்வொரு வகைப் படத்திற்கும் உகந்த ஒரு 'கோடக்' பிலிம் கிடைக்கும்

கோடக் லிமிடெட்
(இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது)
பம்பாய் – கல்கத்தா – டில்லி
மதராஸ்

K. 9939

இரண்டாவது மகா யுத்தமும் ஒரு வழியாக முடிந்தது. அந்தப் பயங்கரமான யுத்தத்தைப் பற்றி அன்றும் இன்றும் பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருக்கும் ஸ்ரீ வின்ஸ்டன் சர்ச்சில் அத்தியாயம் அத்தியாயமாகவும், படலம் படலமாகவும், புத்தகம் புத்தகமாகவும் எழுதித் தள்ளினர்.

அந்த யுத்தமும் யுத்தத்தை ஒழிக்கும் யுத்தமாக அமையவில்லை. அதற்கு மாருக, அது மூன்ருவது மகாயுத்தத்துக்கு, அதிலும் அணுகுண்டு, ஜலவாயு குண்டு யுத்தத்துக்கு விதை என்று எதிர்கால சரித்திராசிரியர்கள் கூறும்படியான நிலைமையை உண்டாக்கி விடுமோ என்று உலக மக்கள் கலங்கும்படி செய்திருக்கிறது.

அதாவது யுத்தத்தினுல் எந்தப் பிரச்னையையும் தீர்க்க முடியாது; அதனுல் புற்றுக்குள்ளிருந்து ஈசல்கள் கிளம்புவது போல் புதிய புதிய பயங்கரமான பிரச்னைகளே கிளம்புகின்றன என்ற உண்மையைச் சென்ற இரண்டு மகா யுத்தங்களின் மூலம் உலக மக்கள் நன்கு அறிந்து கொண்டனர். எனவே, வல்லரசுகள் போர்த் தளவாடங்களைப் பெருக்குவதாலோ, கட்சிகளாகப் பிரிந்து நிற்பதாலோ யுத்தத்தைத் தடுக்க முடியாது என்பது தெளிவாகி விட்டது.

இந் நிலையில், உலகம் யுத்தக் கொடுமையிலிருந்து உய்வது எப்படி!

இந்தக் கேள்விக்கு, பாரத நாட்டின் அரும் பெரும் தலைவரான நேருஜி உற்ற பதில் அளித்திருக்கிருர். அதாவது போரைத் தடுக்கும் பஞ்ச சீலக் கொள்கையை வகுத்திருக்கிருர்.

1. ஒவ்வொரு நாடும் பிற நாட்டின் எல்லைக்கும் சுதந்திர உரிமைக்கும் எவ்விதக் குந்தகமும் விளைவிக்காமல் அவற்றைப் பெரிதும் மதித்து நடக்க வேண்டும்.

2. உலக நாடுகள் பரஸ்பரம் யுத்த ஆக்கிரமிப்பைக் கைவிட்டு விட வேண்டும்.

3. எந்த நாடும் மற்ருெரு நாட்டின் உள்நாட்டுப் பிரச்னைகளில் தலையிடக் கூடாது.

4. ஒன்றுக் கொன்று ஏற்றத் தாழ்வு பாராட்டாமல் சமத்துவமாக மதித்து, பரஸ்பரம் லாபகரமான முறையில் நடந்து கொள்ள வேண்டும்.

5. எந்த நாடும் தான் அமைதியாக வாழ்வதுடன், பிற நாடுகளையும் அமைதியாக வாழ்வதற்கு விட வேண்டும்.

இவைதான் பஞ்ச சீலக் கொள்கையாகும். இந்தக் கொள்கையை ஏற்கெனவே குடியரசு சீனப் பிரதமர் சூ என் லாயும், பர்மா பிரதமர் தாகின் நூவும் ஒப்புக் கொண்டுள்ளனர்.

இந்தியாவுக்கு விஜயம் செய்த யூகோஸ்லேவியா ஜனதிபதி மார்ஷல் டிட்டோவும் நேருஜியும் சேர்ந்து சென்ற வாரம் வெளியிட்டுள்ள கூட்டு அறிக்கையிலும் மேற்படி கொள்கை ஒப்புக் கொள்ளப் பட்டிருக்கிறது.

*　　*　　*

புது டில்லியில் ஐந்து நாட்கள் வரையில் தங்கியிருந்து, நேருஜியுடன் பல தடவை, பல மணி நேரம் பேசிய மார்ஷல் டிட்டோ, இந்தியாவைப் போல் படாதபாடு பட்டுச் சுதந்திரம் பெற்ற யூகோஸ்லேவியாவும் பிற நாடுகளைச் சமமாகக் கருதுகிறது; மற்ற நாடுகளுடன் நட்பும் நல்லுறவும் வைத்துக் கொள்ள விரும்புகிறது என்பதைத் தெளிவு படுத்தினர்.

சர்வதேச உறவுக்கும் ஐக்கிய நாடுகள் சபையின் கொள்கைக்கும் மேலே குறிப்பிட்ட ஐந்து அம்சங்களே அடிப்படையாக இருக்க வேண்டும் என்று நேருஜி - டிட்டோ கூட்டு அறிக்கை கூறுகிறது.

உலகில் யுத்தத்தை வெறுக்கும் நாடுகள் அடங்கிய சமாதான மண்டலத்தை அமைப்பதே தங்களுடைய நோக்கம்; ருஷ்ய வல்லரசுக் கட்சி, அமெரிக்க வல்லரசுக் கட்சி, இவற்றைப் போல் மூன்ருவது கட்சி ஒன்றை அமைப்பது தங்கள் உத்தேசம் அல்ல என்பதையும் மேற்படி அறிக்கை தெளிவாக்கி யிருக்கிறது.

உலக சமாதானத்தின் அவசியத்தைப் பற்றியும், அதற்கான வழிகளைப் பற்றியும் இதற்கு முன் எத்தனையோ பிரமுகர்களும் பேராசிரியர்களும் மேடை மேடையாக ஏறிப் பேசி யுள்ளனர்; பத்தி பத்தியாக எழுதி யுள்ளனர். பல நூல்கள் இயற்றி யுள்ளனர். ஆனல் அவைகளால் இதுவரையில் உலகத்துக்கு எவ்வித உருவான பலனும் ஏற்பட்டதாகத் தெரிய வில்லை.

ஆனல் உலக சமாதானத்துக்கு நேருஜி காட்டியுள்ள பஞ்ச சீலக் கொள்கையாகிற அருமையான வழி சர்வதேச ராஜ தந்திரிகளின், உலக மக்களின் மனத்தில் பெரும் புரட்சியை உண்டாக்கி யிருக்கிறது என்பதில் ஐயமில்லை. இந்தக் கொள்கையை மற்ற நாடுகளும் பின்பற்ற முற்படுமாயின் உலகில் 'யுத்தமே போ' என்று யாரும் கூருமலேயே யுத்தம் போய் விடும், 'சமாதானமே வா' என்று அழைக்காமலேயே உலக சமாதானம் ஏற்பட்டு விடும் என்பது நிச்சயம்.

அட்டைப் படம்

# அமர தாரா

1955-ம் ஆண்டு பிறந்திருக்கிறது. இந்தப் புத்தாண்டில் வெளியாகும் முதலாவது கல்கி இதழின் அட்டையில் ஏசுநாதரின் திருவுருவப் படமும், அந்தப் படம் அலங்கரிக்கிற அறையோடு கூடிய 'அமர தாரா'க் காட்சியும் மூவர்ணங்களிலே திகழ்கின்றன. ஏசுநாதரின் உபதேசங்களில் ஆழ்ந்த ஈடுபாடுடைய உபாத்தியாயினி சுசீலா தேவியும் அவருடைய அன்புக்குப் பாத்திரமான அருமை மாணவி இந்துமதியும் சித்திரத்தின் முகப்பிலே காட்சி தருகிருர்கள். மேஜையின் மேல் உள்ள புனித பைபிள் நூல், அந்த அறையின் புனிதத் தன்மையையும், ஆசிரியை மாணவி இருவருக்கும் உள்ள நேச உறவின் பரிசுத்தத்தையும் நன்ருக எடுத்துக் காட்டுகிறது.

அன்பு என்ற பண்புக்கே விளக்கமாக அமைந்துள்ள இந்த ஓவியத்தைப் புத்தாண்டு இதழின் வர்ண சித்திரமாக வழங்குகிருர் நமது ஓவியர் 'மணியம்' அவர்கள்.

# வையகம் உய்ய வழி!

## ராஜாஜி கூறும் யோசனை

'நியூயார்க் டைம்ஸ்' பத்திரிகையின் டிஸம்பர் 26ந் தேதி இதழில் விடுத்துள்ள ஒரு நிருபத்தில் ராஜாஜி அவர்கள், அணு குண்டின் விளைவுகளை ஆராய்ந்து, இந்தப் பயங்கர ராக்ஷஸனை ஒழித்து உலக சமாதானத்தை நிலைநாட்டுவதற்குரிய ஒரே வழியைத் தெளிவாகக் கூறுகிறார்.



அற நெறியை மனத்திற் கொண்டு, நோய்க் கிருமிப் போரை விடுத்தோம் அல்லவா? அதைப் போலவே அணு குண்டுப் போரையும் மறந்தால் ஒழிய அமைதியில்லை என்று கூறுகிறார் ராஜாஜி.

பிறரை எதிர்பார்த்துக் காத்திராமல் மனிதன் தானே தன்னை நல்லவனாகச் செய்து கொள்ள எப்படி முயற்சிக்க வேண்டுமோ அப்படியேதான் உலக நாடுகளும் இவ்விஷயத்தில் நடந்துகொள்ள வேண்டும் என்பதே ராஜாஜியின் அறிவுரை. சாதாரண மனிதப் பண்பாடு எப்படித் தொழிற்பட வேண்டுமோ அப்படியேதான் உலக நாடுகளின் அரசியல் நீதியும் என்கிறார். அமெரிக்காவும் ரஷ்யாவும் ஒருவரை யொருவர் எதிர்பார்த்துக் காத்திராமல் நல்ல காரியத்தைச் செய்வதில் தயக்கமின்றி உடனே ஈடுபட வேணும். இதற்கு மாநாடுகள் தேவையில்லை. வல்லரசுகள் சந்தித்து மாதக் கணக்கில், வருஷக் கணக்கில் ஆலோசனைகள் செய்ய வேண்டியதில்லை. தீமையோடு உறவு கொண்டாடிச் சைத்தானோடு ஒப்பந்தம் செய்து கொள்ள வேண்டியதில்லை. அப்படிச் செய்தால் அணுகுண்டும் மற்ற குண்டுகளைப் போலவே உபயோகத்தில் வந்து விடும். மறு பேச்சில்லாமல் ஆழ் கடலிலே கொண்டு அணு குண்டுக் குவியல்களை எறிந்து கொட்டிவிட வேண்டியது ஒன்றே வழி. இதை அமெரிக்காவே முன்னின்று தைரியமாக நடத்தலாம் என்பதே ராஜாஜியின் யோசனை.



'தவற்றை முதலில் செய்தவர்களே இதைமுதலில் ஆரம்பிக்கவும் வேண்டும். தவற்றுக்குத் தண்டனையாக அல்ல, கண்யமான ஒரு உரிமையாக! ...அமெரிக்க தேச சரித்திரமே நாம் இம்மாதிரி எதிர்பார்க்கும் நம்பிக்கைக்கு ஆதாரமாகும். அமெரிக்கா இந்த உன்னதமான காரியத்தைச் செய்தால், ஒரு மாபெரும் வீரனை அல்லது ஒரு தெய்வ மூர்த்தியைச் சார்ந்து நிற்பதைப் போல மானிட வர்க்கமே அமெரிக்காவைக் கொண்டாடி நிற்கும்'' என்கிறார் ராஜாஜி.

# பண்டிதமணியின் பிரிவு

*கொழும்பு, டிஸம்பர் மீ 28உ.*

*தமிழ்ப் பேரறிஞர் கல்கியின் மறைவினால் ஏற்பட்ட அதிர்ச்சியிலிருந்து தமிழ் உலகம் விடுபடுவதன் முன்னால் தமிழ் கூறும் நல்லுலகுக்கு இவ்வாரம் இன்னொரு பெரிய துக்கம் ஏற்பட்டு விட்டது. ஈழத்தின் மாபெரும் தமிழ்ப் புலவரான பண்டிதமணி ஸ்ரீ நவநீத கிருஷ்ண பாரதியார் சென்ற புதன் கிழமை இரவு 1-30 மணிக்கு மாரடைப்பினால் திடீரென்று காலமாகி விட்டார். ஸ்ரீ பாரதியார் சில மணி நேரத்துக்கு முன்னால் சுகவீனத்தினால் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டுப் பிராணவாயு சிகிச்சை அளிக்கப் பட்டார். சிகிச்சைகள் பயனளியாமல் தமது 64 வது வயதில் அவர் சிவலோகப் பிராப்தியடைந்து விட்டது. மந்திரி ஸர் கந்தையா வைத்தியநாதனும் மந்திரி ஸ்ரீ எஸ். நடேசனும் கூறியதைப் போல, தமிழுக்கும் தமிழர்களுக்கும் ஈடு செய்ய முடியாத பெரு நஷ்டமென்பதில் சந்தேகமில்லை.*

*சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு முன்னால் பண்டிதமணியைக் காலஞ் சென்ற ஸர் பொன்னம்பலம் ராமநாதன் ஈழத்துக்கு அழைத்து வந்து ராமநாதன் கல்லூரியில் தமிழ்ப் பண்டிதராக நியமித்து அவரது புலமையும் பெருமையும் ஈழத்துத் தமிழ் மக்களுக்குத் தெரியச் செய்தார். பண்டிதமணி பிறவியில் இந்தியரானாலும் ஈழ நாட்டைத் தாய் நாடாகக் கொண்டு அரிய பல கவிதைகளை இயற்றி இந் நாட்டில் தமிழ் மறுமலர்ச்சிக்கு வெகுவாகச் சேவை செய்தார். திருவாசகத்துக்குப் பண்டிதமணி இயற்றிய அருளுரை அவரது அழியாத ஞாபகச் சின்னமாகும்.*

*சென்ற புதன் கிழமை மாலை கொழும்பு தமிழ்ச் சங்க ஆதரவில் கல்கியின் பிரிவுக்கு அனுதாபம் தெரிவிக்க மந்திரி ஸ்ரீ நடேசன் தலைமையில் ஒரு பொதுக் கூட்டம் நடைபெற்ற பொழுது, அதில் ஸ்ரீ கே. கனகரத்தினம் பேசியபொழுது பல தமிழ் மணிகளும் திடீரென்று மறைந்து வருவதைக் குறிப்பிட்டார். அவர் இப்படிக் கூறிய சில*

மணி நேரத்துக்குள்ளாகப் பண்டிதமணி நம்மை விட்டுப் பிரிந்து போய் விடுவாரென்று யார் எதிர் பார்த்திருப்பார்கள்!

* * *

காலஞ்சென்ற கல்கியைத் தலைசிறந்த எழுத்தாளர் என்ற முறையிலேயே இலங்கையில் பெரும்பாலோர் அறிவார்கள். அருங்கலைகளான இயல், இசை, நாடகத்துக்கு அவர் செய்த சேவைகளைப் பற்றி இங்கு பலருக்குத் தெரியாது. கல்கியின் இந்தச் சேவையைச் சென்ற புதன்கிழமை இரவு இலங்கை வானொலியில் கான மஞ்சரி என்ற நிகழ்ச்சியில் பண்டிட் கே. முருகேசு வெகு அழகாக எடுத்துச் சொன்னர். இசைப் பிரியர்கள் வெகு ஆசையாகக் கேட்கும் அனேக பாட்டுகளின் சாகித்திய கர்த்தா கல்கிதான் என்பதைப் பண்டிட் முருகேசு எடுத்துச் சொல்லியதோடுமட்டுமல்லாமல் அந்தப் பாட்டுகளையும் ஒலி பரப்பிக் 'கல்கி'யின் சேவைகளைப் பாராட்டினர். சாகித்திய மேதையான கல்கி மறைந்து விட்ட பொழுதிலும் அவர் ஸ்தாபித்த "கல்கி" பத்திரிகை நம்மிடையில் அவரது அழியாச் சின்னமாக விளங்கி வருகிறது. தமிழ் கூறும் நல்லுலகம் எங்கும் விரிந்து பரந்து உலாவி வரும் தமிழ்ப் பத்திரிகை கல்கிப் பத்திரிகை. தமிழ் மக்களின் சொந்தப் பத்திரிகை என்று சொன்னல் அது வெறும் உபசார வார்த்தையாகாது.

கல்கி பத்திரிகை எல்லாப் பத்திரிகையைப் போல மக்களிடம் உள்ள சாதாரணமான உணர்ச்சிகளைத் தூண்டி விட்டுப் பிரபலமடையவில்லை. தமிழ் மக்களின் பண்பாடு, தமிழ் நாட்டின் கலை, தமிழ்ப் பெரியார்களின் உயர்ந்த குணங்கள் எல்லாவற்றையும் தமிழ் மக்களுக்கு எடுத்துக் கூறித் தமிழ் மக்களை உயர்த்தி வரும் பத்திரிகை.

இலங்கையில் இருந்து அஜந்தா வரையில் உள்ள சித்திரங்களின் சிறப்புகளையெல்லாம், வீட்டை விட்டு வெளியில் செல்ல முடியாத பெண்மணிகளில் இருந்து சித்திரங்களைப் பார்த்தும் அதன் சிறப்பை அறிய முடியாதவர்கள் வரையில் ஒவ்வொருவரையும் சித்திரக்கலையின் செழிப்பை உணரும்படி செய்த பெருமை கல்கிப் பத்திரிகை ஒன்றையே சாரும்.

இப்படிப்பட்ட தமிழ் நாட்டின் தனிப்பெரும் சிறப்புகளைத் தமிழ் மக்கள் உணர்ந்து அதன் வழியில் மனத்தைத் திருப்பி விடும் உத்தமத் திருப்பணியைச் செய்யும்படி கல்கி பத்திரிகையை வளர்த்து விட்டிருக்கிருர் கல்கி ஆசிரியர் ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள்.

அந்த ஸ்தாபனம் என்றும் சிரஞ்சீவியாக இருந்து சேவை புரிய உதவி செய்வது தமிழர் ஒவ்வொருவருடைய கடமையுமாகும் என்று பண்டிட் முருகேசு முடிவில் சொல்லியதைத் தமிழ் மக்கள் ஏகோபித்து ஆமோதிப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை. இதற்கு அடையாளமாகக் "கல்கி" விட்டுச் சென்ற "அமர தாரா"வை அவரது புதல்வி ஸ்ரீமதி ஆனந்தி எழுதுவது பொதுவாக எல்லோருக்கும் திருப்தியை அளித்திருக்கிறது.

— ரஜனி

## திருவாவடுதுறைத் திருமணம்



அகில உலக நாதஸ்வர சக்கரவர்த்தி ஸ்ரீ டி. என். இராஜரத்தினம் பிள்ளையின் குமாரன் செல்வன் டி. என். ஆர். சிவாஜிக்கும், திருவாரூர் நாதஸ்வர வித்வான் ஸ்ரீ வீதிவிடங்கம் பிள்ளையின் குமாரத்தி செல்வி ஹேமமாலினிக்கும், திருவாவடுதுறை, "சிவாஜி மஹாலில்" நவம்பர் முப்பதாம் தேதி முதல் டிஸம்பர் மூன்றும் தேதி வரை நான்கு நாட்கள் திருமணம் கோலாகலமாக இனிது நடந்தேறியது. நான்கு நாட்களிலும், பிரபல சங்கீத வித்வான்களின் சங்கீதக் கச்சேரிகளும் பிரபல நாதஸ்வர வித்வான்களின் கச்சேரிகளும் சிறப்பாக நடைபெற்றன.

வாழ்க, மணமக்கள்!





# எங்கள் ஊர் சங்கீதப் போட்டி



**கல்கி**





"கேட்டீரா, சங்கதியை!" என்று கேட்டுக் கொண்டே காபாலி சுந்தரமய்யர் விஜயம் செய்தார்.

அவர் விஜயமாகும் விஷயத்தை ஐவ்வாது 'செடி' அரை நாழிகைக்கு முன்னமே தெரிவித்து விட்டது. அந்த செடியினால் நான் திக்குமுக்காடிக் கொண்டிருக்கும் போது, "கேட்டீரா சங்கதியை!" என்றார் மறுபடியும்.

"போட்டால்தானே கேட்கலாம்!" என்றேன் எரிச்சலுடன்.

"என்னத்தைப் போட்டால் கேட்கலாம்!" என்று சுந்தரமய்யர் முகத்தைச் சுளுக்கினார்.

"சங்கதியைப் போட்டால் கேட்கலாம். நம் ஊர் சங்கீத சபையில் கச்சேரி நடந்துதான் ஒரு யுகம் ஆகிறதே! பாட்டு என்கிற நாமதேயத்தையே காணோம்; சங்கதிக்கு எங்கே போகிறது!" என்றேன்.

"அதைத்தானே சொல்ல வந்தேன்!" என்றார் சுந்தரமய்யர்.

"சொல்லி விட்டுப் போங்களேன்!" என்றேன்.

"நம் சங்கீத சபைக்கு நல்ல காலம் பிறக்கப் போகிறது, ஸார்! அனந்தராமன் ஐ. ஸி. எஸ். நம் ஊருக்கு மாற்றலாகி வரப் போகிறாராம்!" என்றார்.

நான் உட்கார்ந்தபடியே ஒரு குதி குதித்து, "எந்த அனந்தராமன்? ஆபோஹி அனந்தராமனா!" என்று கேட்டேன்.

"ஆமாம்; ஆபோஹி அனந்தராமனே தான்!"

"சபாஷ்! அப்படியானால் என் ஆறு மாதத்துச் சந்தா பாக்கியையும் எடுத்துக் கொள்ளும்!" என்றேன்.

சுந்தரமய்யர் போய் விட்டார். அவர் போன பிறகு, ஒரு புட்டி மண்ணெண்ணெய் கொண்டு வரச் சொல்லித் தெளித்த பிறகுதான், ஐவ்வாது வாசனை போயிற்று. எனக்கும் வேலையில் மனத்தைச் செலுத்த முடிந்தது!

காபாலி சுந்தரமய்யருக்குச் சங்கீத வித்வான்களுடைய பழக்கத்தினால்தான் ஐவ்வாதுப் பழக்கமும் ஏற்பட்டது. சென்ற முப்பது வருஷ காலமாக அவர் எங்களூர் சங்கீத சபையின் காரியதரிசி. பொறாமை கொண்ட சிலர் அவ்வப்போது அவரை அந்தப் பதவியிலிருந்து விரட்டிவிட முயற்சி செய்ததுண்டு. ஆனால், மூன்று மாதத்துக்கெல்லாம் அவர்களே சுந்தரமய்யரிடம் சென்று காரியதரிசிப் பதவியை ஒப்புக் கொள்ளும்படி கெஞ்சுவார்கள்.

சுந்தரமய்யரைச் சங்கீத உலகின் ஜாம்பவான் என்றே சொல்ல வேண்டும். "கோனேரி ராஜபுரம் வைத்தாவுக்கு இந்தக் கையினால் பதினேழுரை ரூபாய் எண்ணிக் கொடுத்தேன். இப்போது என்னடா என்றால், தம்பூரை சுருதி கூட்டத் தெரியாதவன்களெல்லாம் வித்வான்கள் என்று வந்து நூறு வேணும், நூற்றைம்பது வேணும் என்று கேட்கிறார்கள்" என்று சுந்தரமய்யர் அடிக்கடி புகார் சொல்லுவார். ஆனால் அந்த "தம்பூர் சுருதி கூட்டத் தெரியாத வித்வான்கள்" வந்து விட்டால், அவர் படுத்துகிற பாடும், செய்கிற உபசாரமும், பக்கத்திலிருப்பவர்களை மிரட்டும் மிரட்டலும் அசாத்தியமாயிருக்கும். "காலத்துக்கேற்ற கோலம் போட வேண்டியிருக்கு, ஸார்! நாய் வேஷம் போட்டால் குலைக்காமல் முடியுமா!" என்று சமாதானம் சொல்வார்.

எப்போதும் சுந்தரமய்யருடைய சங்கீத மோகம் ஒரே மாதிரியாயிருந்தாலும், எங்களூர் சங்கீத சபை சில சமயம் ரொம்ப ஜோராய் நடக்கும்; சில சமயம் படுத்துத் தூங்கிப் போய் விடும். சபை ஜோராய் நடப்பதும், தூங்கி வழிவதும் அவ்வப்போது எங்கள் ஊருக்கு வரும் பெரிய உத்தியோகஸ்தர்களைப் பொறுத்தது என்று சொல்லலாம். ஜில்லா கலெக்டரோ, ஸெஷன்ஸ் ஜட்ஜோ, சங்கீத அபிமான முள்ளவர்களாய் வந்துவிட்டால், அப்போது சபை நடக்கிற விதமே ஒரு தனிதான். மற்ற உத்தியோகஸ்தர்கள், வக்கீல்கள், எல்லாரும் சபையில் சேர்வார்கள்; சந்தாவும் கொடுப்பார்கள். பெரிய பெரிய வித்வான்களின் கச்சேரிகள் நடக்கும். சபைக்கு ஒரு கட்டடம் கட்ட வேண்டுமென்று யோசனை கூடக் கிளம்பும்.

ஆகவே, ஆபோஹி அனந்தராமன் எங்களூருக்கு வரப்போகிறார் என்று தெரிந்ததில் சுந்தரமய்யருக்குப் பிரமாதமான குதூகலம் உண்டானதில் ஆச்சரியமில்லையல்லவா!

## 2

மிஸ்டர் அனந்தராமன் ஐ. ஸி. எஸ். ஸுக்கு 'ஆபோஹி' ராகம் என்றால் பிராணன். ஒரு கச்சேரியில் வித்வான் ஆபோஹி ராகம் பாடவில்லையென்றால், அன்றையக் கச்சேரிக்கு முக்கால் பங்கு மார்க்குதான் கொடுப்பார். ஆபோஹியில் அப்படி என்ன விசேஷமென்று எனக்குத் தெரியாது.

---

* 1941ம் ஆண்டில் ஆசிரியர் ரா. கி. அவர்கள் 'லாங்கூலன்' என்ற புனை பெயரில் "கல்கி" இதழில் எழுதிய கதை.

'ஆ' எழுத்தில் ஆரம்பிப்பது விசேஷமென்றால், 'ஆரபி', 'ஆஹிரி', 'ஆனந்த பைரவி' முதலிய ராகங்கள் இருக்கின்றன. என்னைப் பொறுத்த வரையில், பாடுகிறவர்கள் பாடினால் எந்த ராகம் பாடினாலும் நன்றாய்த் தானிருக்கிறது. ஆனால், அனந்தராமன் அபிப்பிராயம் அப்படியில்லை. அவர் ஒரு சமயம் ஒரு கச்சேரியில் பாராட்டுச் சொல்லும்படி நேர்ந்தது. அப்போது அவர் கூறியதாவது :—"என்னமோ இந்தக் காலத்தில் சிலர் சுயராஜ்யம் வேண்டும், சுதந்திரம் வேண்டும் என்றெல்லாம் கூத்தாடுகிறார்கள். இதிலெல்லாம் எனக்கு நம்பிக்கை இல்லை. எனக்கு ஆபோஹி ராகத்தில்தான் நம்பிக்கை. 'இந்தியா தேசம் வேண்டுமா, ஆபோஹி ராகம் வேண்டுமா!' என்று என்னை யாராவது கேட்டால், சிறிதும் தயக்கமின்றி 'எனக்கு ஆபோஹியைக்கொடுங்கள்; இந்தியாவை நீங்களே வைத்துக் கொள்ளுங்கள்' என்பேன். என்னமோ சோஷலிஸம் என்கிறார்கள், பொது உடைமை–அபேதவாதம் என்றெல்லாம் பிரமாதமாய்ப் பேசுகிறார்கள். ஆபோஹியை நானும் அநுபவிக்கிறேன்; நீங்களும் அநுபவிக்கிறீர்கள்; நடுத்தெரு நாராயணனும் அநுபவிக்கிறான்! இதைவிட மேலான சோஷலிஸம் வேறெங்கே இருக்கிறது என்று கேட்கிறேன். அரசியல்வாதிகள் பதில் சொல்லட்டும்!" (சபையில் பிரமாதமான கரகோஷம்.)

இந்தப் பிரசங்கம் செய்த பிறகுதான் அவருக்கு ஆபோஹி அனந்தராமன் என்று பெயர் வந்தது. இதெல்லாம் எனக்கு முன்னமேயே தெரியும். ஆகவே சுந்தரமய்யரைப் போலவே நானும் எங்களூர் சங்கீத சபைக்கு நல்ல காலம் பிறந்து விட்டது என்று நம்பினேன். எங்களுடைய நம்பிக்கை பொய்யாக வில்லை. அனந்தராமன் ஐ. ஸி. எஸ். வந்த உடனேயே எங்களூர் சங்கீத சபை எழுந்துட்கார்ந்து, 'என்ன சேதி!' என்று கேட்கத் தொடங்கியது.

சங்கீத அபிமான முள்ள உத்தியோகஸ்தர்கள் இதற்கு முன்னாலும்தான் எங்களூருக்கு வந்திருக்கிறார்கள். ஆனால் அனந்தராமன் விஷயத்தில் விசேஷம் என்னவென்றால், அவருடைய மனைவியும் சங்கீதத்தில் அபிமானம் உள்ளவராயிருந்ததுதான்.



ஒரு வேளை ஏதாவது தலை போகிற காரியம் இருந்தால், அனந்தராமனாவது கச்சேரிக்கு வராமலிருப்பார். மிஸ்ஸஸ் அனந்தராமன் ஒரு கச்சேரிக்காவது வரத் தவறுவதில்லை. கலெக்டர் சம்சாரம் சங்கீதத்தில் எப்போது சிரத்தை கொண்டாரோ, அப்போது ஜட்ஜின் மனைவி, முனிசிப்பின் பத்தினி, எல்லாருக்குமே அந்தத் தொத்து வியாதி பிடித்துக் கொண்டது. வக்கீல்களின் மனைவிமார் இவர்களுக்குப் பின்வாங்கி விடுவார்களா! கொஞ்ச நாளில் சபையில் ஸ்திரீகளுக் கென்று ஒதுக்கியிருந்த இடத்தை இரண்டு பங்கு விஸ்தரிக்க வேண்டியதாகி விட்டது. அப்படியும் இடம் போதவில்லை.

சில ஸ்திரீகள் தைரியமாகப் புருஷர்களுக்கு மத்தியில் வந்து உட்கார ஆரம்பித்தனர்; இதைக் கேள்விப் பட்டதும் சில வயதான ஸனாதனிகள் "கலி முற்றி விட்டது; ஆகையால் நாமும் இனிமேல் சங்கீதக் கச்சேரிக்குப் போக வேண்டியதுதான்" என்று தீர்மானித்துச் சபைக்கு வரத் தொடங்கினர்.

சுந்தரமய்யர் வீடு வீடாய்ப் போய்ச் சந்தாவுக்குக் கெஞ்சிக் கூத்தாடிய காலம் மாறி, சுந்தரமய்யரிடம் போய் 'ஸீட் ரிசர்வ்' செய்வதற்காகக் கெஞ்ச வேண்டிய காலம் வந்தது.

மிஸ்ஸஸ் அனந்தராமன் கலை வளர்ச்சியில் ரொம்பவும் ஆர்வமுடையவர். வெறுமே கச்சேரிக்கு வந்து கேட்பதுடன் அவர் இருந்துவிடவில்லை. ஒவ்வொரு வீட்டிலும் குழந்தைகளுக்குச் சங்கீதம் கற்றுக் கொடுக்க வேண்டும், பரத நாட்டியம் கற்றுக் கொடுக்க வேண்டும் என்றெல்லாம் பிரசாரம் செய்து வந்தார். இதன் பயனாக ஊரில் வீட்டுக்கு வீடு தம்புரா சுருதி, பிடிலைக் கர்புர் என்று இழுக்கும் சத்தம், 'தா தை' சப்தம் எல்லாம் கேட்க ஆரம்பித்தன.

இவ்வளவு தூரம் கலை வளர்ச்சிக்குக் காரணமாயிருந்த மிஸ்ஸஸ் அனந்தராமன் அவ்வளவுக்கும் சிகரம் வைத்தது போல் ஒரு காரியம் செய்யத் தீர்மானித்தார். சபை அங்கத்தினரின் வீட்டுக் குழந்தைகளுக்காகச் சங்கீத–நாட்டியப் போட்டிகள் ஏற்படுத்திப் பரிசுகள் வழங்க வேண்டுமென்று சொன்னார். ஊரில் உற்சாகம் கரை புரண்டு ஓடத் தொடங்கியது. கலெக்டர் அனந்தராமன் சிறந்த பாட்டுப் பாடும் குழந்தைக்கு ஒரு வெள்ளிக் கோப்பை தருவதாகச் சொன்னார். இன்னொருவர் பரத நாட்டியத்துக்குப் பரிசு கொடுப்பதாக முன் வந்தார். ஒருவர் வீணைக்கு, ஒருவர் பிடிலுக்கு, இம்மாதிரி ஏகப்பட்ட பரிசுகள் ஏற்பட்டு விட்டன. சங்கீதப் போட்டிப் பரீட்சையில் கலெக்டர் அனந்தராமன் கட்டாயம் ஒரு ஜட்ஜாயிருப்பார் என்று எல்லோரும் எதிர்பார்த்தார்கள். ஆகவே, ஒவ்வொரு வீட்டிலும் 'மனஸா ஸிஞ்ச... மதுரகண்ட' என்று ஆபோகி அலறல் கேட்கத் தொடங்கியது.

## 3

நவராத்திரிக்கு இன்னும் ஒன்றரை மாதம் இருந்த போது ஒருவரும் எதிர்பாராத ஒரு துர்ச் சம்பவம் நேர்ந்தது.

எங்கள் நகருக்கு முப்பது மைல் தூரத்தில்

ஒரு கிராமத்தில் மாரியம்மன் கோவில் உற்சவம் சம்பந்தமாக ஹிந்து-முஸ்லிம் சச்சரவு ஆரம்பித்தது. அது வெகு சீக்கிரமாகப் பரவிற்று. அடிதடி, வெட்டுக் குத்து, வீட்டில் நெருப்பு வைத்தல், வைக்கோல் போரில் நெருப்பு வைத்தல் — இப்படி யெல்லாம் செய்திகள் வரத் தொடங்கின. இது என்னமாய் முடியுமோ என்று எல்லாரும் கதிகலங்கினோம். நகரில் பரபரப்பு அதிகமாகிக் கடைகள் எல்லாம் மூடப்பட்டன.

“நவராத்திரி வரைக்கும் இப்படியே இருந்து விடுமோ, என்னமோ! இவ்வளவு ஏற்பாடுகள் செய்து சங்கீதப் போட்டி நடக்காமல் போய் விடுமோ!” என்று மிஸ்ஸஸ் அனந்தராமன் கவலைப் பட்டார். “நீ சும்மா இரு” என்றார் அனந்தராமன். கலகம் நடக்கும் இடத்துக்கு நேரில் கிளம்பிப் போனார்.

அனந்தராமன் போய் இருபத்து நாலு மணி நேரத்துக்குள் கிராமங்களில் பூரண அமைதி நிலவியது. அவர் விரட்டிய விரட்டலில் போலீஸார் அதி தீவிரமாக வேலை நடத்தவே ‘கப்சிப்’ என்று கலகம் அடங்கி விட்டது. தடைப்பட்ட மாரியம்மன் உற்சவத்தைக் கிட்ட இருந்து நடத்தி விட்டு வந்தார்.

கலெக்டர் அனந்தராமன் கலகம் அடக்கிய திறமையைக் குறித்துத் தேசமெல்லாம் புகழ்ந்தது. அனந்தராமனும் வெகு குதூகலமா யிருந்தார்; நாலு நாளைக்கெல்லாம் அவருக்கு மாற்றல் உத்தரவு வந்தது! வடக்கே மழை, மாரி, ஆறு, குளம், சங்கீத சபை ஒன்று மில்லாத ஒரு வறட்டு ஜில்லாவுக்கு அவர் அனுப்பப்பட்டார். இருபத்து நாலு மணி நேரத்துக்குள்ளே போய் ‘சார்ஜ்’ ஒப்புக் கொள்ள வேண்டு மென்று உத்தரவு!

இந்த மாற்றல் அநேகருக்கு ரொம்பவும் ஆச்சரியமா யிருந்தது. ஆனால் எனக்கு அவ்வளவு ஆச்சரியம் தரவில்லை. அனந்தராமன் செய்தது பிரிட்டிஷ் அரசியல் தர்மத்துக்கு முற்றும் விரோதமான காரியம் அல்லவா! ஓரிடத்தில் ஹிந்து-முஸ்லிம் சச்சரவு வந்தால் அதை உடனே அடக்கிப் போடுவது யாருக்குப் பிரீதி! நாலு நாள், பத்து நாள் கலகம் நடந்து ஆடி ஓடி ஓய்ந்தால், சிரங்கைக் கீறி ஆற்றியது போலாகும். சட்டென்று ஒரே நாளில் அடக்கி விட்டால், கலகம் உள்ளடங்கிப் போகிறது. துவேஷம் உள்ளே கிடந்து குமுறுகிறது. இதனால் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியமே அல்லவா ஆடிப் போய் விடும்!

மிஸ்ஸஸ் அனந்தராமன் அரைக்குறையாக எங்கள் ஊரை விட்டுப் போனார். ஆனால் போகும் போது கடைசி வார்த்தையாகச் சுந்தரமய்யரிடம், “நான் எங்கே போனாலும் உங்கள் சபையை மறக்கவே மாட்டேன். நவராத்திரி சங்கீதப் போட்டியை மட்டும் சிறப்பாக நடத்தி விடுங்கள்” என்று சொன்னார். ஆபோஹி அனந்தராமனும் தாம் எப்போதும் எங்கள் சபையின் போஷகரா யிருந்து வருவதாக வாக்களித்தார்.

## 4

நவராத்திரியில் குழந்தைகளின் சங்கீத—நாட்டியப் போட்டி நடத்துவதற்குப் பலமான ஏற்பாடுகள் சுந்தரமய்யர் செய்து வந்தார். ஜட்ஜுகளாக யாரை ஏற்படுத்துவது என்பதில்தான் சிரமம் ஏற்பட்டது. சங்கீத வித்துவான்கள் எல்லோருக்கும் தனித்தனியே எழுதிப் பார்த்ததில் அவர்கள் எல்லாரும் சாக்குப் போக்குச் சொல்லி மறுத்து விட்டார்கள்.

சுந்தரமய்யர் எங்களோடெல்லாம் கலந்தாலோசித்தார். கடைசியில் சென்னைப் பட்டணத்திலிருந்து இரண்டு பிரமுகர்களை ஜட்ஜுகளாக வரவழைக்கத் தீர்மானித்தோம். ஒருவர் பெயர் கைலாஸ சாஸ்திரி. இன்னொருவர், வைகுண்டாச்சாரியார். ஒருவர் பிரசித்தமான மாஜி ஸப் ஜட்ஜு; இன்னொருவர் ஒரு காலத்தில் பிரசித்தமா யிருந்த வக்கீல். இரண்டு பேரும் ‘சங்கீத நிபுணர்’கள் என்று பேர் பெற்றவர்கள். சங்கீதத்தைப் பற்றி ஏதாவது விவாதம் கிளம்பினால், உடனே இவர்கள் தினசரிப் பத்திரிகையில் தங்களுடைய அபிப்பிராயத்தை எழுதாமலிருக்க மாட்டார்கள். முடிவாக, இந்த இரண்டு பேரில் ஒருவருடைய கடிதத்துக்குக் கீழேதான், “இந்த விவாதம் சம்பந்தமான கடிதங்கள் இனிமேல் பிரசுரிக்கப்படமாட்டா” என்று போட்டுப் பத்திரிகாசிரியர்கள் விவாதத்தை முடிவு கட்டுவது வழக்கம்.

அந்த இரண்டு பேரையும் ஜட்ஜுகளாக வரவழைத்து விடுவதென்று தீர்மானமாயிற்று. அவர்களும் நல்ல வேளையாகச் சம்மதித்தார்கள். எல்லா ஏற்பாடுகளும் ஜரூராக நடந்து வந்தன.

கடைசியில் எல்லாராலும் வெகு ஆவலுடன் எதிர்பார்க்கப்பட்ட தினம் வந்தது. அன்று காலையில் கைலாஸ சாஸ்திரிகளும் வைகுண்டாச்சாரியாரும் ரயிலில் வந்திறங்கினார்கள். அவர்களுக்கு வேண்டிய வசதிகள் செய்து தரப்பட்டன. மத்தியானம் மூன்று மணியிலிருந்து மாலை ஏழு மணி வரையில் போட்டி நடத்திப் பிறகு பரிசளிப்பது என்று ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது.

சரியாக இரண்டரை மணிக்கு என் மருமாள் ஸொஜ்ஜியையும் அழைத்துக் கொண்டு நான் சபா மண்டபத்துக்குப் போய் விட்டேன். (‘ஸொஜ்ஜி’யின் முழுப் பெயர் சுலோசனா.) அவளுக்கு அவள் தாயார் பரதநாட்டியம் கற்பித்திருந்தாள். எல்லாம் மிஸ்ஸஸ் அனந்த ராமனின் வேலைதான் என்று சொல்ல வேண்டியதில்லை.

மூன்று மணிக்குச் சபா மண்டபத்தில் ஜே ஜே என்று கூட்டம் நிறைந்து விட்டது. ஆனால் ஜட்ஜுகள் வந்தபாடில்லை. மூன்றரை மணிக்குக் கைலாஸ சாஸ்திரிகள் மட்டும் வந்து சேர்ந்தார். வைகுண்டாச்சாரியின் மூக்குக் கண்ணாடி கெட்டுப் போய் விட்டதாகவும், அதை அவர் தேடிக் கொண்டிருப்பதாகவும் தெரிந்தது. போட்டிக்கு ரொம்பப் பேர் வந்திருந்த படியால் அவர் வரும் வரையில் காத்திராமல் கைலாஸசாஸ்திரியின் தலைமையில் சங்கீதப் போட்டி ஆரம்பிக்கப் பட்டது.

சங்கீதப் போட்டி ஏறக்குறைய முடியும் சமயத்தில் வைகுண்டாச்சாரியார் வந்தார். அவர் பரத நாட்டியப் போட்டிக்கு ஜட்ஜாக இருந்து நடத்தினார்.

எல்லாம் முடிந்ததும் இரண்டு ஜட்ஜுகளும் சபைக் காரியதரிசியை அழைத்துக் கொண்டு தனி ஆலோசனைக்குப் போனார்கள். கொஞ்ச நேரத்துக்கெல்லாம் வந்து பரிசு பெற்ற குழந்தைகளின் பெயர்களைச் சொன்னார்கள். பரிசு பெற்ற குழந்தைகளின் வீட்டுக்காரர்களுக்கெல்லாம் பரம சந்தோஷம்; மற்றவர்களுக்கெல்லாம் ரொம்ப உற்சாகக் குறைவு. “இந்த ஜட்ஜுகளைப் போல் பொறுக்கி எடுத்த முட்டாள்கள் உலகத்தில் இருக்க முடியாது” என்பது அவர்களுடைய அபிப்பிராயம். இந்தப் பெரும்பான்மை அபிப்பிராயத்தை நான் ஒத்துக் கொள்ளவில்லை. ஏனெனில், பரதநாட்டியத்துக்கு என் மருமாளுக்குப் பரிசு கிடைத்து விட்டபடியால் எனக்கு ரொம்ப உற்சாகமா யிருந்தது. ஆனால் ஒரு விஷயம்

மட்டும் கொஞ்சம் சிந்தனையைத் தூண்டிற்று. அதாவது பரிசு பெற்ற குழந்தைகளெல்லாம் பெரும்பாலும் சங்கீத சபைக்குச் சரியாகச் சந்தா செலுத்துவோர் குழந்தைகளாகவே இருந்தன!

வைபவத்தின் முடிவில் காபாலி சுந்தரமய்யர் என்னைச் சென்னைப் பிரமுகர்களுக்கு அறிமுகம் செய்துவைத்தார். வைகுண்டாச்சாரியார் "உங்கள் மருமாளுக்குத்தான் பரத நாட்டியத்தில் முதற் பரிசு என்று மிஸ்ஸஸ் அனந்தராமன் அப்போதே சொல்லி விட்டாளாமே! அந்த அம்மாளுக்குத் தெரியாதது உண்டா! மகா புத்திசாலி" என்றார். எனக்கு ஆச்சரியம் அதிகமாயிற்று; மிஸ்ஸஸ் அனந்தராமன் அப்படி ஒன்றும் சொன்னதே கிடையாது!

அன்று ராத்திரி எனக்கு அவசர காரியமாகச் சென்னைக்குப் போக வேண்டியதாயிருந்தது. ரயிலில் வேறு இடம் கிடைக்காதபடியால் கைலாஸ சாஸ்திரிகளும் வைகுண்டாச்சாரியாரும் இருந்த வண்டியிலேயே நானும் ஏற வேண்டியதாயிற்று.

வண்டி ஏறியதும் வைகுண்டாச்சாரியைப் பார்த்து, "நமஸ்காரம்" என்றேன். அவர் கண்ணைச் சுளித்துக் கொண்டு "யாரையா நீர்?" என்றார். அரை மணி நேரத்துக்குள்ளேயே என்னை மறந்து விட்டாரே என்று நான் ஆச்சரியப்பட்டு, கைலாஸ சாஸ்திரியைப் பார்த்தேன். அவர் ஒரு காதைக் கையால் மடித்துக் கொண்டு "என்ன சொல்கிறீர்!" என்றார்.

விஷயம் இன்னதென்று புரிவதற்கு எனக்கு ஐந்து நிமிஷம் ஆயிற்று. விஷயம் புரிந்த பின் அதை ஜீரணம் செய்து கொள்வதற்கு இன்னும் ஐந்து நிமிஷம் ஆயிற்று.

அதாவது, அன்று சங்கீத—நாட்டியப் போட்டிகளில் ஜட்ஜுகளாயிருந்தவர்களில் ஒருவருக்குக் கண் தெரியாது; இன்னொரு ஆசாமிக்குக் காது கேளாது; குருடரும் செவிடருமாய்ச் சேர்ந்து சங்கீத நாட்டியப் போட்டியில் தீர்ப்பளித்து விட்டார்கள்!

காபாலி சுந்தரமய்யருக்கு எல்லாம் தெரிந்துதானிருக்க வேண்டும். எமகாதகர்! எப்படியோ காரியத்தை ஒப்பேற்றி விட்டார்.

இதையெல்லாம் நினைக்க நினைக்க என்னையறியாமல் எனக்குச் சிரிப்புப் பீறிக் கொண்டு வந்தது.

விஷயம் எனக்குத் தெரிந்து விட்டதென்று அவர்களுக்கும் தெரிந்து போயிற்று. உடனே அவர்களும் சிரிக்கத் தொடங்கினார்கள்.

சென்னை போய்ச் சேரும் வரையில் நினைந்து நினைந்துச் சிரித்துக் கொண்டே போனோம்.

ரயிலும் எங்களுடன் சேர்ந்து சிரித்தது!

# பம்பாயில் கான மழை!

புகழ் பெற்ற பம்பாயில் பிரசித்தமான மாதுங்காப் பகுதியில், நமது கலைகளையும் இலக்கியங்களையும் வடதேசத்தில் நிலைபெறுன வகையில் பாதுகாத்துப் போற்றி வருகிறார்கள் 'ஷண்முகானந்தா பைன் ஆர்ட்ஸ் அண்டு சங்கீத சபா' என்ற பெயரில் ஒளி வீசும் கலை மன்றத்தார்.

கடந்த பல ஆண்டுகளாகத் தென்னாட்டுக் கலைகளுக்கு, முக்கியமாக, தென்னாட்டு சங்கீதத்துக்கும் பரத நாட்டியத்துக்கும் — பேராதரவு தந்து, தெற்கிலிருந்து செல்லும் சங்கீதக் கலைஞர்களுக்கு எல்லாம் பரிவோடு உரிய சிறப்புக்களை அளித்துக்கௌரவித்து, நமது இசையின் மகோன்னத சிறப்பைப் பாரதநாடு முழுதும் வியந்து பாராட்டும் முறையில் விழாக்கள் கொண்டாடிவருகிறார்கள் இந்த சபையினர். இந்தியாவில் வேறெங்குமே காணாத வகையில் கோலாகலமான வைபவ மாட்சியுடன் இந்த விழாக்களை நடத்திப் பம்பாய் மக்கள் எல்லாரும் ஒரே அதிசயத்தில் மூழ்கும்படியாகத் தென்னாட்டின் புகழை நிலைநாட்டி வருகிறார்கள். இந்த சபையின் அங்கத்தினர்கள் சுமார் இரண்டாயிரத்துக்கும் மேற்பட்டவர். இந்த இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட அங்கத்தினர்களின் சலியாத உழைப்பினாலும், தளராத ஊக்கத்தினாலுமே ஷண்முகானந்த சபை சங்கீதானந்தத்தைக் குறைவின்றி வருஷந்தோறும் வழங்கி வருகிறது. இந்த 1955-ம் வருஷம் ஜனவரி முதல் வாரத்திலும் ஷண்முகானந்த சபையின் சங்கீத விழா பம்பாய் 'கிங்ஸ் சர்க்கிள்' ரயில்வே ஸ்டேஷனுக்குச் சமீபத்தில் உள்ள சபாவுக்குச் சொந்தமான மைதானத்தில் நடைபெற ஏற்பாடாகியிருக்கிறது. ஐயாயிரம் பேருக்கு மேல் உட்கார்ந்து கேட்கும்படியான மாபெரும் கொட்டகை போடப்பட்டிருக்கிறது.

"சங்கீத வித்வான்களில் ஒரு மந்திரியாகவும் மந்திரிகளுக்குள் ஒரு சங்கீத வித்வானாகவும் விளங்குகிறார்" என்று அழகான முறையிலே முசிரி சுப்பிரமணிய ஐயர் அவர்களால் வியந்து பாராட்டப்பட்ட மத்திய சர்க்கார்கைத்தொழில் வர்த்தக மந்திரி கனம் டி. டி. கிருஷ்ணமாச்சாரி அவர்கள் இந்த விழாவை ஜனவரி மாதம் மூன்றாந் தேதி தொடங்கி வைக்கிறார்கள். மூன்றாந் தேதியிலிருந்து தொடங்கிப் பதினைந்தாந் தேதி முடியத் தொடர்ச்சியாக ஒவ்வொரு நாளும் பிரபல கலைஞர்களின் இசைவிருந்து நடைபெறும் விவரங்களை இன்னொரு பக்கத்தில் காணலாம்.



இந்த விழாவில் வசூலாகும் தொகையைக் கொண்டு சபைக்கென ஒரு கட்டடம் கட்டுவது என்று தீர்மானித்திருப்பது பொருத்தமான காரியம். இந்த வாய்ப்பை, பொது ஜனங்கள் நன்கு பயன்படுத்திக் கொண்டு, கட்டடம் நிறுவுவதற்கான இம்முயற்சியில் ஷண்முகானந்த சபையினரோடு பூரணமாக ஒத்துழைக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறோம். சங்கீதத்தை அநுபவித்துக் கொண்டே, ஒரு சங்கீத சபையின் கட்டட நிதிக்கு உதவி செய்தோம் என்ற திருப்தியும் உண்டாகும். கலையன்பர்கள் இதற்கு உதவுவார்களாக!

# கல்கியின் அமர தாரா

மணியம்

## அத்தியாயம் 29

## சிவப்பு பங்களா

என் அன்னை எங்களை விட்டுப் பிரிந்த சமயத்தில் எனக்கு மிகவும் ஆறுதல் கூறியவர் சுசீலாதேவி. ஏற்கெனவேயே என்னிடம் மிகுந்த வாஞ்சை யுடையவர். இப்பொழுது இன்னும் கனிவாக, உள்ளன்புடன் எனக்கு ஆறுதல் கூறினார். பைபிள் புஸ்தகத்திலிருந்து பல கதைகள் சொன்னார். பிறருக்கு நன்மை செய்ததற்காக இயேசுநாதர் அடைந்த சொல்லொணாத கஷ்டங்களைப் பற்றியெல்லாம் சுசீலாதேவி சொன்னார்.

"இந்து! எது எப்படி இருந்தாலும் மனத்தைத் தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டும். அர்த்தமில்லாத ஆசைகளுக்கு உள்ளத்தில் இடம் கொடுக்கக் கூடாது. மற்றப்படி என்ன நேர்ந்தாலும் அது இறைவன் பொறுப்பு என்று விட்டுவிட வேண்டும். நமக்கு என்ன வேண்டும் என்பது நாம் கேட்காமலேயே இறைவனுக்குத் தெரியும். இந்த எண்ணம் நம் மனத்தில் எப்போதும் இருந்தால் சந்தோஷம் வரும்போது நிதானமாக அனுபவிப்போம். துன்பம் வரும்போது தைரியமாகத் தாங்கிக் கொள்வோம்" என்றார்.

இதையெல்லாம் என் தந்தையும் கேட்டுக் கொண்டிருந்தார். "எங்கள் மதத்திலும் இதே மாதிரி உபதேசங்கள் நிறைய இருக்கின்றன. பார்க்கப் போனால் அடிப்படையில் எல்லா மதங்களும் ஒன்றுதானே. பகவத் கீதையில் முழுதும் இதே மாதிரிதான் உபதேசம் செய்யப்பட்டிருக்கிறது. பலனை எதிர்பாராமல் கடமையைச் செய்ய வேண்டும் என்ற விஷயம்தான் அதில் அடங்கியிருக்கிறது" என்றார்.

இவர்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டே நான் பள்ளியில் படித்த திருவிருத்தப் பாடல் ஒன்றை ஞாபகப்படுத்திக் கொண்டிருந்தேன். அதையே அவர்களிடம் சொன்னேன்.

"வணங்கும் துறைகள் பலபல வாக்கி
மதிவிகற்பால்
பிணங்கும் சமயம் பலபல வாக்கி அவை
அவைதோறு
அணங்கும் பலபல வாக்கிநின் மூர்த்தி
பரப்பி வைத்தாய்
இணங்கு நின்னோரை இல்லாய் நின்கண்வேட்கை
எழுவிப்பனே."

என்று பாடிக் காட்டினேன்.

மந்திரமூர்த்தி மிகச் சந்தோஷப்பட்டார். அதைச் சுசீலா தேவிக்கு விளக்கிப் பொருள் கூறினார்.

"'வணங்குகிற துறைகள் பலவற்றை உண்டாக்கி, மனிதர்களின் அறிவு வேறுபாட்டால் மாறுபடுகிற மதங்கள் பலவற்றை உண்டாக்கி, அந்த மதங்களுக்கு மூர்த்திகள் பலவற்றையும் உண்டாக்கி உன் வடிவத்தை எங்கும் பரவச் செய்துள்ளாய். ஈடு இணையற்றவனே! உன் மேல் பக்தியை நான் வளரச் செய்வேன்' என்று இந்தப் பாடலுக்கு அர்த்தம்.

"என்ன இருந்தாலும் இந்து ரொம்பக் கெட்டிக்காரிதான்!" என்றார்.

"ஆனால் எனக்கு ஒன்றுதான் புரியவில்லை. ஒரே கடவுள்தானே எல்லோரையும் படைக்கிறார். ஒருவர் அன்பே உருவாக இருப்பதும், இன்னொருவர் கொடுமையே உருவாக இருப்பதும் எதனால்? சொக்கையாவைப் போன்ற மனிதர்களைக் கடவுள் ஏன் படைக்கிறார்?" என்று நான் கேட்டேன்.

அதற்குச் சுசீலா தேவி சிரித்துக் கொண்டே "இந்து! நீ ரொம்பப் பெரிய கேள்வியாகக் கேட்கிருயே? இறைவனுடைய படைப்புத் தொழிலின் உண்மையை இன்னும் யாரும் கண்டு பிடிக்கவில்லை. நமக்குப் புரியவில்லை என்பதனல் அதில் குற்றம் சொல்லக் கூடாது. உனக்குக் கணக்குப் பாடமே புரியவில்லை. அதனல் கணக்குப் போடுவதே தவறு என்று சொல்ல முடியுமா?" என்ருர்.

மந்திரமூர்த்தி ஏதோ காரியம் இருக்கிறதென்று வெளியில் போய் விட்டார். பிறகு சுசீலா தேவியிடம் நான் மனம் விட்டுப் பேசினேன். என் தாயாரின் ஆசையைப் பற்றிச் சொன்னேன். சுசீலா தேவி மிகவும் மகிழ்ச்சி அடைந்தார்.

"இந்துமதி! உன்னைப் பற்றி எனக்கு ரொம்பக் கவலையாக இருந்தது. இந்தச் செய்தி கேட்டதும் எனக்கு ரொம்ப மன நிம்மதி ஏற்படுகிறது. ரங்கதுரையைப் பார்த்துப் பேசியது முதல் எனக்கு அவரிடம் நல்ல மதிப்பு ஏற்பட்டிருக்கிறது. உன்னை அவர் மணந்து கொண்டால் மிக மிக நன்ருக இருக்கும் என்று பல தடவை நினைத்துக் கொண்டேன். ஆனல் மந்திரமூர்த்தி தம் சகோதரி மகனுக்கு உன்னைக் கொடுக்க விரும்புவாரே என்று சற்று வருத்தமாகக் கூட இருந்தது. இதற்கு அவர் சம்மதித்து விட்டாரா?" என்று கேட்டார்.




"அப்பாவும் ரொம்ப சந்தோஷமாகத் தான் இருக்கிருர் டீச்சர். அவருக்கு இதில் சிறிதும் ஆட்சேபணை கிடையாது. ரங்கதுரையிடம் அவருக்கு ரொம்ப மதிப்பும் அன்பும் ஏற்பட்டிருக்கிறது."

"எல்லோரையும் கவரும்படியான வசீகரத் தோற்றத்துடனும், பணிவான பேச்சுடனும், நிறைந்த அறிவுடனும் சிலர்தான் இருக்கிருர்கள். நான் எத்தனையோ பேரைப் பார்த்திருக்கிறேன். ஆனல் ரங்கதுரை மாதிரி எல்லோரிடமும் மிக மரியாதையாக நடந்து கொள்பவரைப் பார்த்ததே யில்லை. ஆனல் இவ்வரைக்கூட அந்தப் படுபாவி சொக்கையாவுக்குப் பிடிக்கவில்லையே?"

"என்ன ஆயிற்று? சொக்கையா என்ன சொன்னர்?"

"ஒன்றும் ஆகி விடவில்லை. தங்கபாண்டியனுக்கும் சொக்கையாவுக்கும் மறுபடியும் சண்டை. ரங்கதுரை இங்கே இருப்பது அவன் கண்ணை உறுத்துகிறதாம். 'ரங்கதுரையை ஒழித்துக் கட்டி விட வேண்டும்' என்று சொக்கையா சொன்னனும். தங்கபாண்டியன், 'அப்படி மறுபடியும் சொன்னல் உன்னை ஒழித்துக் கட்டிவிடுவேன்' என்ருனும். இப்படி ஒரே ரகளையாகி விட்டது. பாவம்! தங்கபாண்டியன் உண்மையிலேயே தங்கமான பிள்ளை. அவன் தங்கை லக்ஷ்மி இதையெல்லாம் சொல்லி வருந்தினள். 'இப்படிப்பட்ட கம்ஸனைக் கொல்ல யார் வரப்போகிருனே?' என்று கூடச் சொன்னள். நான்தான் 'வலது கன்னத்தில் அடித்தவர்களுக்கு இடது கன்னத்தையும் காட்டு' என்று கிறிஸ்து மகானின் உபதேசத்தைச் சொல்லி, 'நமக்குக் கேடு நினைப்பவர்களுக்கும் நல்லது நினைக்க வேண்டும். அவருக்கு நல்ல புத்தி வர வேண்டுமென்று பிரார்த்தனை செய்' என்று சொல்லிவிட்டு வந்தேன்."

"எங்கம்மாகூட எப்பொழுது பார்த்தாலும் 'சொக்கையா நாசமாய்ப் போக வேண்டும்' என்று வைது கொண்டே இருப்பாள் டீச்சர். அவரால் தான் எங்கப்பா எங்களை விட்டுப் பிரிந்து போய் விட்டதாக அவளுக்கு அசைக்க முடியாத தீர்மானம் ஒன்று மனதில் ஏற்பட்டு விட்டது. எத்தனை பொறுமைசாலி என் தாயார்? அவளே அப்படி நினைக்க வேண்டுமானல் அவன் படுபாதகனகத் தான் இருக்க வேண்டும். ஆனல் சொக்கையா எப்படிப் போனல் எனக்கென்ன? டீச்சர்! அம்மா போய் விட்டாள். இனிமேல் நீங்கள் தான் எனக்கு அம்மா மாதிரி இருந்து வர வேண்டும். என் அப்பாவைத் தவிர வேறு மனிதர்கள் யாரும் எனக்குக் கிடையாது. என் சொந்தத் தந்தையே என்னைக் கவனிக்க வில்லையே. வேறு யார் இருக்கிருர்கள்?" என்று சொல்லி விம்மி விம்மி அழுதேன்.

"சே! அப்படிச் சொல்லாதே, அம்மா! மந்திரமூர்த்தியைப் போன்ற தங்கமான மனிதரை நீ வளர்ப்புத் தந்தையாக அடைய ரொம்ப அதிர்ஷ்டம் செய்திருக்கிருய். மேலும் ரங்கதுரையை மணந்து கொள்ளப் போகிருய். உனக்கு என்ன குறைவு?" என்று புன்சிரிப்புடன் கூறினர் அவர்.

நான் நாணத்துடன், "உங்கள் மாதிரி ஒருவரை டீச்சராக அடையவும் நான்



பாக்கியம் செய்திருக்க வேண்டும்" என்றேன்.

"இந்து! நான் இத்தனை நேரம் ஒரு விஷயத்தைச் சொல்ல முடியாமல் தவித்துக் கொண்டிருக்கிறேன். ஆனால் சொல்லித்தான் ஆகவேண்டும். நான் புதுச்சேரிக்குப் போகப் போகிறேன்" என்றார்.

நான் கலவரத்துடன், "ஏன் டீச்சர்? என்னை விட்டு விட்டு நீங்கள் போகலாமா? எதற்காகப் போக வேண்டும்?" என்று கேட்டேன்.

"நான் போய்த்தான் ஆக வேண்டும், அம்மா! இந்தச் சொக்கையாப் பாண்டியன் படுத்தும் பாட்டை என்னால் சகிக்கவில்லை. எனக்கோ பள்ளிக்கூட வேலையில்லை. அரண்மனையில் மானமாகப் பாடஞ் சொல்லிக் கொடுப்போம் என்ற நம்பிக்கைக்கே இடமில்லாமலிருக்கிறது. சொக்கையாவின் வெறித்த பார்வையைக் கண்டாலே பசியோடு இருக்கும் வேட்டை நாயின் நினைவு வருகிறது. ஈசுவரன் அவனை ரக்ஷிக்கட்டும். ஆனால் நான் வலியப் போய்ச் சங்கடத்தில் அகப்பட்டுக் கொள்ள விரும்பவில்லை. என் தாய் தந்தையருக்கும் ரொம்ப வயதாகி விட்டது. அவர்களுக்கும் ஏதேனும் நேர்ந்து விட்டால் இந்த ஊரில் நான் மானத்துடன் வாழவே

முடியாது, அம்மா. அதனால்தான் நான் இந்த ஊரை விட்டே போய் விடுவது என்று தீர்மானித்திருக்கிறேன்.''

"டீச்சர்! நீங்களும் என்னை விட்டுப் போகப் போகிறீர்களா? இனிமேல் நீங்கள்தான் என்னுடைய அம்மா என்று நினைத்துக் கொண்டிருந்தேனே!'' என்று கண்ணீர் மல்கக் கேட்டேன்.

அவரும் துயரத்துடன், "இந்த சிவப்புப் பங்களாவையும் பாதிரித் தோட்டத்தையும் அந்தப் பாவி சொக்கையா வாங்கி விட்டானாம். இத்தனை நாள் அந்த அழகிய சோலையில் இருக்க எனக்குக் கொடுத்து வைத்திருந்தது. இனிமேல் சொக்கையாவுக்குச் சொந்தமான பிறகு அதில் இருக்க ஒரு நாளும் என் மனம் இடங் தராது'' என்று கூறினார்.

இந்தச் செய்தி எனக்கு மிக்க வியப்பை அளித்தது. ஜமீனில் ரொம்பச் சண்டை பூசல்கள் இருப்பதாகவும், ஜமீனுக்கு ஏக நஷ்டமாகி விட்டதாகவும், கடன் வேறு ஏராளமாய்ப் பெருகி விட்டதாகவும் கேள்விப் பட்டிருந்தேன். இந்தச் சமயத்தில் சொக்கையா அத்தனை பெரிய தோட்டத்தையும் வீட்டையும் வாங்கப் பணத்துக்கு என்ன செய்திருப்பார்?

நான் வியப்புடன், "ஏன் டீச்சர்! சொக்கையாவுக்கு அவ்வளவு பணம் ஏது?'' என்று கேட்டேன்.

"ஆகா! அவனுக்குப் பணத்துக்கு என்ன குறைச்சல்? எத்தனை விவசாயிகளுக்குக் கண்ணில் மண்ணைத் தூவி யிருக்கிறான். எத்தனை தடவைகள் ஜமீன் நிலத்தைத் தெரியாமல் விற்றிருக்கிறான். தங்கபாண்டியனுக்கு இந்த ஒரு வருஷமாகத்தானே இதெல்லாம் தெரிகிறது. இதற்கு முன்னால் அவனைக் கேட்க யாருக்குத் தைரியம் இருந்தது? அவன் சேர்த்திருக்கும் பணத்தைக் கொண்டு இன்னொரு ஜமீனையே வாங்கி விடலாம். அவ்வளவு சேர்த்திருப்பான். சிவப்புப் பங்களாவைக் கட்டிய மகானுக்கு இந்தப் பாதகன் அதை வாங்குவது தெரிந்தால், துடித்துப் போவார். அவர் நல்ல எண்ணத்துடன் கட்டிய வீட்டில் இவன் என்ன பாப காரியங்கள் செய்யப் போகிறானோ? நெஞ்சு கொதிக்கிறது'' என்றார் சுசீலா தேவி.

என் மனம் எவ்வளவு வருந்தினாலும் சுசீலா தேவி இனி இந்த ஊரில் இருப்பது நடக்காத காரியம் என்று நன்றாகத் தெரிந்து விட்டது. அவர் சொன்னதிலும் மிகுந்த உண்மை இருந்தது. ஆதலால் என்னாலும் மறுத்து ஏதும் சொல்ல முடியவில்லை.

இதற்குள் என் தந்தையும் வீட்டுக்கு வந்தார். அவரும் இந்தச் செய்தியைக் கேட்டு வியப்பும், வருத்தமும் அடைந்தார். "இந்துவுக்கு நீங்கள்தான் உற்ற துணையென்று நானும் நினைத்து வந்தேன். இப்படியெல்லாம் சேர்ந்து வருவது ஒரு துரதிர்ஷ்டம்தான். சந்திராவின் பிரிவினால் ஏற்பட்ட வருத்தம் மறைவதற்குள் உங்களைப் போன்ற நல்ல மனிதர்களையும் பிரிய வேண்டி யிருக்கிறது. இந்து தான் ரொம்ப சிரமப் படுவாள். இந்தக் கிழவனோடு அவளுக்குப் பொழுது போவது ரொம்பக் கஷ்டமாக இருக்கும்'' என்றார்.

"அதெல்லாம் இனிமேல் கஷ்டமாக இராது. பகற் கனவுகள் காண்பதற்கே அவளுக்கு நேரம் போதாம லிருக்கும். உங்களைக் கவனிக்கக் கூட நேரமிராது பாருங்கள்'' என்று சொல்லிக் கொண்டு விடைபெற்றுக்கொண்டார் சுசீலாதேவி.

"நானும் தோட்டம் வரை போய் விட்டு வருகிறேன், அப்பா'' என்று சொல்லிக் கொண்டே நானும் பின்னால் ஓடினேன். தோட்டத்துக்கு அருகில் நெருங்கிய போதே சண்பக மலரின் குளுமையான மணம் தென்றலில் தவழ்ந்து வந்தது. தோட்டத்தில் நுழையும்போதே இனந் தெரியாத சோர்வு என்னுடைய உள்ளத்தைக் கௌவியது. சற்று நேரத்துக்கு முன் மழை பெய்திருந்தது. எத்தனையோ மழை நாட்களில் நான் அந்தத் தோட்டத்தைச் சுற்றி யிருக்கிறேன். ஆனால் அன்று என்ன காரணத்தாலோ, மழைத் தண்ணீர் மரங்களிலிருந்து சொட்டியபோது, அவை மனம் வருந்திக் கண்ணீர் வடிப்பதாகவே எனக்குத் தோன்றியது.

சுசீலா தேவி எனக்குப் பல ஆறுதல் மொழிகளையும், உபதேச மொழிகளையும் கூறிக் கொண்டே வந்தார். ஆனால் என் காதில் ஒன்றுமே ஏறவில்லை. ஏதோ இனந் தெரியாத ஒரு துயரத்தில் என் உள்ளம் வெம்பியது. அழுகையும் வராமல், அடக்கவும் முடியாமல் ரொம்பத் துன்பமாக இருந்தது.

என் தந்தை தெய்வப் புலவர் வள்ளுவரின் குறள் பாக்கள் சிலவற்றை எனக்குச் சொல்லுவதுண்டு. அதில் ஒரு குறள் நினைவுக்கு வந்தது. அதைச் சுசீலா தேவியிடம் கூறினேன்.

**"பேரினிது பேதையார் கேண்மை; பிரிவின்கண்**
**பீழை தருவதொன்று இல்."**

இந்தச் சின்னஞ் சிறு இரு அடிகளில் எத்தனை பெரிய, மகத்தான விஷயம் அடங்கி யிருக்கிறது? 'சாதாரணமானவர்களிடம் சிநேகமாக இருப்பதே நல்லது. ஏனென்றால் பிரியும் போது அதனால் துன்பம் ஏற்படாதிருக்கும் அல்லவா?' டீச்சர்! நீங்கள் மிக உயர்ந்தவராக இருப்பதனால்தானே எனக்கு இப்போது இத்தனை துயரம் ஏற்படுகிறது?"

நாங்கள் இருவரும் புன்னை மரத்தடிக்கு வந்து விட்டோம். மழைத் தண்ணீர் சொட்டுச் சொட்டாக மேலே விழுந்தது. டப் டப் என்று சொட்டும் நீரின் சத்தம் மாத்திரம் கேட்டுக் கொண்டே இருந்தது. சில குருவிகள் கீச் மூச்சென்று கத்திக் கொண்டிருந்தன. சுசீலா தேவியின் கண்களில் நீர் நிறைந்திருந்ததைக் கவனித்தேன்:

"இந்து! நீ இப்போது சொன்னதை விட ஒரு உபாத்தியாயினிக்குப் பெரிய பெருமை வேறு ஒன்றும் இடையாது. தன் மாணவிகளுடைய அன்பைப் பெறுவதுதான் உபாத்தியாயினியின் தகுதிக்கு அடையாளம். நீ சொன்னதை நான் என்றும் மறக்கவே மாட்டேன். என்னுடைய நோட்டுப் புத்தகத்தில் நீ இந்தக் குறளை எழுதி உன் கையெழுத்தைப் போட்டுத் தரவேண்டும்" என்றார்.

பிறகு மிகவும் கனிவோடு, "இந்து! ரங்கதுரையின் படிப்பு இன்னும் முடியவில்லை. நீ ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். நீ சிறு குழந்தை. கூடியவரை, ஏன் எப்போதுமே, இந்தச் சொக்கையாவின் கண்ணில் படாமல் நீ விலகி யிருக்க வேண்டும் அம்மா......" என்று கூறிக் கொண்டே இருக்கையில் சிவப்புப் பங்களாவின் பின்புறத்திலிருந்து மூன்று பேர் வந்தார்கள். சொக்கையா இரண்டு ஆட்களை ஏதோ வேலை ஏவிக்கொண்டே வந்து கொண்டிருந்தார்.

"ஒரு சருகு, இலை கீழே இருக்கக் கூடாது. எல்லாவற்றையும் பெருக்கிக் குவித்து எரித்து விட வேண்டும். சுத்தமாக இருக்க வேண்டும்" என்று உரத்த குரலில் கூறியது காதில் விழுந்தது.

சுசீலா தேவி தணிவான குரலில், "அந்தப் பாவியே வந்து விட்டான். புதிதாக வாங்கிய வீட்டை மேற்பார்வையிடுகிறான் போலிருக்கிறது. சரி, நீ வீட்டுக்கு ஓடு. நான் நாளை புறப்பட்டு விடுகிறேன். காலையில் என்னை வந்து பார்" என்று சொல்லி விட்டு விரைந்து சென்றார். நான் சொக்கையாவை ஒரு கணம் பார்த்தேன். அவர் கண்கள் சுசீலா தேவியைத் தொடர்வதைக் கண்டேன். என்ன விகாரமாக இருந்தது அந்த முகம்? சுசீலா தேவி சொன்னது உண்மை என்று அப்போதுதான் நிச்சயமாகத் தெரிந்தது. அங்கிருந்து வீட்டுக்குப் பறந்தோடிச் சென்றேன். வீட்டில் நுழைந்தபோது என்னுடைய உடலும் மனமும் மிகவும் சோர்ந்து போயிருந்தன.

## அத்தியாயம் 30

## அன்புப் பரிசு

திரும்பிய போது எனக்குச் சிரிப்பு வரும்படியான சம்பவம் ஒன்று நடந்து கொண்டிருந்தது. ரங்கதுரையும் அப்பாவும் அடுப்பின் அருகில் உட்கார்ந்திருந்தனர். ரங்கதுரை வேகமாக விசிறிக் கொண்டிருந்தார். புகைதான் குப் குப் பென்று எழும்பியதே தவிர ஒரு பொறி நெருப்பைக்கூட அதில் காணோம். கடைசியில் அந்தப் புகையும் வரவில்லை.

அம்மா மறைந்த தினத்திலிருந்து பத்து நாட்களாக என் தந்தைதான் சமையல் செய்யும் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருந்தார். நான் செய்யப் புகுந்த போது என்னைத் தடுத்து விட்டுத் தாமே செய்தார். எனக்கும் மூன்று நாட்கள் துக்கத்தினாலும் சோர்வினாலும் ஒன்றுமே செய்ய முடியாமலிருந்தது. அவர் எல்லாவற்றிலுமே திறமைசாலி. ரங்கதுரையே அவர் ரொம்ப நன்றாகச் சமைப்பதைப் பார்த்து ஆச்சரியப்பட்டார். "உங்களுக்குத் தெரியாத விஷயமே இடையாதோ?" என்று வியந்தார்.

ஆனால் அன்று நான் உள்ளே சென்ற போது மழையில் நனைந்துபோன விறகை வைத்துக் கொண்டு இருவரும் மாலைச் சமையலுக்காக அடுப்பைப் பற்ற வைத்துக் கொண்டிருந்தார்கள். என்ன செய்தும் அடுப்புப் பற்றிக் கொள்ளவில்லை. என்னைப் பார்த்ததும் அப்பா, "நல்ல வேளை இந்து வந்து விட்டாள். இந்து அடுப்பு எரிய மாட்டேனென்கிறது. நீ கொஞ்சம் பாரேன்" என்றார்.

"அது அப்படிச் சொல்லுமோ? இதோ பாருங்கள் 'எரிகிறேன் எரிகிறேன்' என்று கதறச் சொல்லுகிறேன்" என்று சொல்லிக்கொண்டே கொஞ்சம் காகிதத்

தைப் பற்ற வைத்து அடுப்பை மூன்று நிமிஷங்களில் எரிய வைத்து விட்டேன்.

நான் சமைக்கும் வரை இருவரும் சமையலறையிலேயே உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அப்பாவுக்கு நான் எங்கேயாவது துணியைப் பற்ற வைத்துக் கொண்டு விடுவேனோ, அல்லது கையைச் சுட்டுக் கொண்டு விடுவேனோ என்று எப்போதும் பயம். நான் அடுப்பின் அருகில் போய் விட்டால் பெரிதாகக் கத்துவார். நான் சமைத்தால் அருகிலேயேதான் உட்கார்ந்திருப்பார். அவருடைய குழந்தை ஒன்று சிறு வயதில் நெருப்புப் பற்றிக் கொண்டு உடலெல்லாம் புண்ணாகி இறந்து விட்டதாம். அதனால்தான் அவருக்கு நெருப்பு என்றால் அத்தனை பயம்.

ரங்க துரையிடம் "நான் இந்தப் பெண்ணை இப்படி அருமையாக வளர்க்கிறேன். என்னை மாதிரியே அவளைக் கவனித்துக் கொள்ளக் கூடியவனாகப் பார்த்து அவளை ஒப்படைத்து விட வேண்டும் என்று ஆசை. என் ஆசை உன் மூலமாகத்தான் நிறைவேறப் போகிறது. நீ எப்போதும் என்னைப் போலவே என் குழந்தையைக் கவனித்துக் கொள்வாயா?" என்று கேட்டார் அப்பா.

"அதற்காகத்தான் உங்கள் மாதிரி எனக்குச் சமைக்கச் சொல்லிக் கொடுங்கள் என்று கேட்கிறேன்!" என்றார் ரங்கதுரை.

நான் கோபத்தை வரவழைத்துக் கொண்டு, "நீங்கள் இப்படியெல்லாம் பேசுவதாக இருந்தால் நான் வெளியே போய் விடுவேன். பிறகு நீங்கள்தான் சமைக்க வேண்டும்" என்றேன்.

பிறகு ரங்கதுரையிடம் சுசீலா அம்மாள் புதுச்சேரி போகும் விஷயத்தைக் கூறினேன். சிவப்புப் பங்களாவைச் சொக்கையா வாங்கியிருப்பதாகக் கேட்டதும் திடுக்கிட்டுப் போனார்.

"ஏன் தங்கபாண்டியன் உங்களுக்கு உயிர் நண்பராயிற்றே. அவர் சொல்லவில்லையா?" என்று கேட்டேன்.

"இல்லை, இந்து! அவனுக்கே தெரிந்திருக்காது. தெரிந்திருந்தால் கட்டாயம் சொல்லியிருப்பான். அதிலும் இன்று காலை அவன் சொக்கையாவைப் பற்றி என்னிடம் சொல்லிப் புலம்பி விட்டான். ஜமீன் நிலங்களையெல்லாம் ஒருவருக்குந் தெரியாமல் விற்றிருக்கிறானாம். பல தடவைகள் தங்க பாண்டியனுக்கு அனுப்புவதாகச் சொல்லி எடுத்த பணத்தை விழுங்கி இருக்கிறான். தங்க பாண்டியனுக்கோ ஒரே கோதிப்பாக இருக்கிறதே தவிர, அவனை எதிர்க்கத் துணிவு இல்லை."

"அவருக்குத்தான் மந்திரியாக நீங்கள் இருக்கிறீர்களே. எப்படி இதையெல்லாம் சீர்திருத்துவது என்று சொல்லிக் கொடுப்பதுதானே?"

"அப்படி உடனே சீர்திருத்தி விட முடியுமா? எத்தனையோ காலமாகச் சொக்கையா சாமர்த்தியமாகத் திட்டம் போட்டுச் செய்திருக்கும் காரியங்களை ஒருநாளில் கண்டு பிடித்து விட முடியுமா? அப்படியே கண்டு பிடித்தாலும் அதை நிரூபிக்க முடியுமா? எந்த சாட்சியைத் தேட முடியும்? யம காதகனாயிற்றே அவன். நாம் கண்டு பிடிக்கும்படி அவ்வளவு சுலபமாகக் காரியங்கள் செய்திருப்பானா? மேலும் இதில் தலையிட்டுக் கொண்டால் பிறகு படிப்பின் கதி என்ன ஆவது? தங்க பாண்டியனுக்குப் பரீட்சை வேறு நெருங்கி வந்து கொண்டிருக்கிறது. இந்தப் பரீட்சையில் தங்கபாண்டியன் தேறி விட்டால் பிறகு ஜமீன் விஷயங்களை இங்கேயே இருந்து கவனித்துக் கொள்வான். அதுவரை இப்படித்தான் இழுத்துப் பறித்துக் கொண்டிருக்கும்."

மந்திரமூர்த்தி குறுக்கிட்டு, "ரங்க துரை! தங்க பாண்டியன் படிப்பை முடித்துக் கொண்டு வந்தாலும் இங்கே ஒன்றும் சரியாகாது. அவன் அனுபவமற்ற சிறு பையன். இவனோடு சண்டை பிடித்துக் கொண்டால் தங்க பாண்டியனையே சொக்கையா தொலைக்க வழி தேடுவான். கூடிய வரையில் சண்டை ஏற்படாமல் பார்த்துக் கொள்வதுதான் நல்லது. அல்லது தங்க பாண்டியனும் தானே உழைத்துப் பிழைக்க வழி தேடிக் கொள்ள வேண்டும். ஜமீனைப் பற்றியே மறந்துவிட வேண்டும்" என்றார்.

"அது எப்படிச் சாத்தியம்? அந்த துராத்மா எல்லாவற்றையும் அட்டூழியம் செய்வது, அதைப் பார்த்துக் கொண்டு இவன் உட்கார்ந்திருப்பதா? எப்படியேனும் இதை மீட்டுத்தான் ஆகவேண்டும். தங்க பாண்டியனுக்கும் சீமைக்கு என்னோடு வரவேண்டும் என்று ரொம்ப ஆசை. ஆனால் இந்த ஜமீனையும், இந்த ஊரில் உள்ள ஏழை ஜனங்களையும் பாதுகாத்து, நியாயம் வழங்குவது தன் கடமை என்று தங்க பாண்டியன் நினைக்கிறான். சொந்த நலத்தைக் கூட அதற்காகத் தியாகம் செய்யத் தயாராக இருக்கிறான்."

# குடிசைத் தொழிலின் முன்னேற்றம்

காந்திய முறைப்படி தினம்
தயாராகும் 5 லக்ஷம் தீப்பெட்டி
களும் எங்கள் டிப்போக்களில்
செலவாகி வருகின்றன. தலை மருந்து.
சைடு மருந்து, கடற்கரை, குளிர்
பிரதேசங்களுக்கு உகந்தது. சிறந்த சரக்கு
உற்பத்தி - சிறப்பான பொதுஜன ஆதரவு.

○●○

டிப்போக்கள் :

அருப்புக்கோட்டை ○ ஆத்தூர் ○ ஈரோடு ○ உடுமலைப்பேட்டை ○ ஊட்டி ○ கருநாகப்பள்ளி ○ கள்ளக்குறிச்சி ○ கள்ளிக்கோட்டை ○ கண்ணனூர் ○ காயங்குளம் ○ கும்பகோணம் ○ கொல்லம் ○ கோயமுத்தூர் ○ சீர்காழி ○ சேலம் ○ தலைச்சேரி ○ தர்மபுரி ○ திண்டுக்கல் ○ திருச்சி ○ திருத்துறைப்பூண்டி ○ திருவாரூர் ○ தூத்துக்குடி ○ தென்காசி ○ பரமக்குடி ○ பழனி ○ பாலக்காடு ○ பொள்ளாச்சி ○ மங்களூர் ○ மதுரை ○ மன்னார்குடி ○ மாயவரம் ○ விருதுநகர் ○ விழுப்புரம்

சிங் பிரதர்ஸ், 50, தர்மதோலா தெரு, கல்கத்தா

*

தீக்குச்சிகள் செய்ய பிரேம்களில் குச்சிகள் அடுக்கப்படுகின்றன

*

தீப்பெட்டிகளுக்கான உள், மேல் உறைகள் தயாராகின்றன



சிம்கோ 

சிவகாசி.

தந்தி: 'SIMCO' போன். 63.

# ஸ்ரீ ஷண்முகானந்தா பைன் ஆர்ட்ஸ் அண்டு சங்கீத சபா

(ரிஜிஸ்டர்டு)

ஸயான் – மாதுங்கா எஸ்டேட், பம்பாய்-22

**சங்கீத விழா 1955 - கட்டிட நிதிக்காக**

கனம் டி. டி. கிருஷ்ணமாச்சாரி அவர்கள்

3-1-55 தேதி இரவு 7-30 மணிக்கு விழாவைத் துவக்கி வைப்பார்கள்

நிகழ்ச்சி நிரல் (D. V.)

| | | |
|---|---|---|
| 3—1—55 திங்கள்<br>மாலை 6-30 மணிக்கு | ஸ்ரீ தியாகராஜ பூஜை | |
| இரவு 8 மணிக்கு | ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாள் | ... பாட்டு |
| | ,, திருவன்னூர் சுப்ரமண்யம் | ... வயலின் |
| | ,, பாலக்காடு குஞ்சுமணி | ...மிருதங்கம் |
| | ,, தஞ்சாவூர் பாலப்பா | ... டோலக் |
| 4—1—55 செவ்வாய்<br>இரவு 8 மணிக்கு | ஸ்ரீ எஸ். பாலசந்தர் | ... வீணை |
| | ,, திருவன்னூர் சுப்ரமண்யம் | ... வயலின் |
| | ,, பழனி சுப்பிரமணிய பிள்ளை | ...மிருதங்கம் |
| 5—1—55 புதன்<br>இரவு 8 மணிக்கு | ஸ்ரீ கே. வி. நாராயணசுவாமி | ... பாட்டு |
| | ,, டி. என். கிருஷ்ணன் | ... வயலின் |
| | ,, பழனி சுப்ரமணிய பிள்ளை | ...மிருதங்கம் |
| 6—1—55 வியாழன்<br>இரவு 8 மணிக்கு | ஸ்ரீ ஜி. என். பாலசுப்ரமணியம் | ... பாட்டு |
| | ,, டி. என். கிருஷ்ணன் | ... வயலின் |
| | ,, பழனி சுப்ரமணிய பிள்ளை | ...மிருதங்கம் |
| 7—1—55 வெள்ளி<br>இரவு 8 மணிக்கு | ஸ்ரீ ஆலத்தூர் சகோதரர்கள் | ... பாட்டு |
| | ,, லால்குடி ஜெயராமன் | ... வயலின் |
| | ,, பாலக்காடு மணி அய்யர் | ...மிருதங்கம் |
| | ,, பழனி சுப்ரமணிய பிள்ளை | ... கஞ்சிரா |
| 8—1—55 சனி<br>மாலை 6 மணிக்கு | ஸ்ரீ மதுரை மணி அய்யர் | ... பாட்டு |
| | ,, லால்குடி ஜெயராமன் | ... வயலின் |
| | ,, பாலக்காடு மணி அய்யர் | ...மிருதங்கம் |
| 9—1—55 ஞாயிறு<br>மாலை 5-30 மணிக்கு | ஸ்ரீமதி சாவித்திரி கணேசன் & பார்ட்டி... | பாட்டு |
| இரவு 9 மணிக்கு | ஸ்ரீமதி லக்ஷ்மி சங்கர்<br>& பின்னணிப் பாடகர்கள் | -ஹிந்துஸ்தானி சங்கீதம் |
| 10—1—55 திங்கள்<br>இரவு 8 மணிக்கு | ஸ்ரீ டி. என். ராஜரத்தினம் பிள்ளை | -நாகஸ்வரம் |
| 11—1—55 செவ்வாய்<br>இரவு 8 மணிக்கு | ஸ்ரீமதி எம். எல். வசந்தகுமாரி | ... பாட்டு |
| | ,, எம். எஸ். கோபாலகிருஷ்ணன் | ... வயலின் |
| | ,, கே. எம். வைத்தியநாதன் | ...மிருதங்கம் |
| | ,, டி. எஸ். வில்வாத்திரி அய்யர் | ... கடம் |
| 12—1—55 புதன்<br>இரவு 8 மணிக்கு | கான் சாஹிப் படே குலாம் அலிகான் | ... பாட்டு<br>ஹிந்துஸ்தானி சங்கீதம் |
| 13—1—55 வியாழன்<br>இரவு 8 மணிக்கு | குமாரி தங்கமணி | பரத நாட்டியம் |
| 14—1—55 வெள்ளி<br>இரவு 8 மணிக்கு | குமாரி சுசிலா | பரத நாட்டியம் |
| 15—1—55 சனி<br>மாலை 6 மணிக்கு | குமாரி வைஜயந்திமாலா | பரத நாட்டியம் |

இடம்: சபா மைதானம் (கிங்ஸ் சர்க்கிள் ரயில்வே ஸ்டேஷன் சமீபம்) பம்பாய்

சீசன் டிக்கட்டுகள்: (மெம்பரல்லாதவர்களுக்கு) ரூ. 100/- 50/- 25/- 15/-
தினசரி டிக்கட்டுகள்: ரூ. 20/- 10/- 5/- 3/.

கச்சேரிகள் முடிந்ததும் திரும்பிச் செல்வதற்குப் பஸ் வசதிகள் செய்யப்பட்டிருக்கின் றன

"காலஞ் சென்ற ஜமீன்தாரும் இப்படியேதான் நல்ல எண்ணம் கொண்டவராக இருந்தார். எனக்கும் அவருக்கும் இருந்த கோர்ட் விவகாரங்களையெல்லாம் சமரஸமாகத் தீர்த்துக் கொள்ள விரும்பினார். ஆனால் காலன் அதில் குறுக்கிட்டு அதை இன்னும் சிக்கலாக்கி விட்டான். இப்போது இருக்கும் கோர்ட்டு விவகாரங்கள் எத்தனை என்று எனக்கே தெரியவில்லை. எத்தனை விவசாயிகள் இவனுடைய கொடுமையினால் கஷ்டப்படுகிறார்கள் தெரியுமா? ஜமீன் ஆட்களே என்னைப் பார்க்கும் போதெல்லாம் கண்ணீருடன் தங்கள் கஷ்டத்தைச் சொல்லி முறையிடுகிறார்கள். தங்க பாண்டியனிடம் எல்லோருக்கும் ரொம்ப விசுவாசம் இருக்கிறது. ஆனால் சொக்கையாவுக்குப் பயந்து கொண்டிருக்கிறார்கள்."

"தங்க பாண்டியனுக்கு இன்னும் ஆறு மாதத்துப் படிப்புத்தான் பாக்கியிருக்கிறது. அது முடிந்து அவன் இங்கு வந்து விட்டால் நிச்சயமாய் விவசாயிகளின் கஷ்டங்களைத் தீர்த்து விடுவான் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. நேற்றிரவு அவனுடன் வெகுநேரம்வரை பேசிக் கொண்டிருந்தேன். நான் சீமையிலிருந்து திரும்பி வந்தவுடன் இந்த ஊருக்கு வந்துவிட வேண்டுமென்றும், விவசாயத் துறையில் ஈடுபட்டு உழைக்க அவனுக்கு உதவியாக இருக்க வேண்டுமென்றும், அதற்குள் சொக்கையாவின் அக்கிரமங்களுக்கு ஒரு முடிவு தேடி விடுவதாகவும் கூறினான். 'நீ இந்த ஊருக்கு வந்து சேருவதற்கு இன்னொரு முக்கியமான காரணம் ஏற்பட்டிருப்பது பற்றி எனக்கு ரொம்ப மகிழ்ச்சி' என்று கூடக் கூறினான்."

"அது தங்க பாண்டியனுக்கு எப்படித் தெரியும்? நான் அவருக்கு இது பிடிக்காது என்றல்லவா எண்ணினேன்? நீங்கள் இங்கு வருவதுகூட அவருக்குப் பிடிக்க வில்லையோ என்று எனக்குத் தோன்றியது" என்றேன் நான்.

"முதலில் தங்க பாண்டியனுக்கு அவ்வளவு இஷ்டமிருக்க வில்லைதான். சொக்கையாவுக்கு விரோதமானவர்களிடம் நான் தொடர்பு வைத்துக் கொண்டால் வீண் மனஸ்தாபங்களுக்கு இடமேற்படலாம் என்று எண்ணினான். வேறு காரணம் இருந்தாலும் இருந்திருக்கும். மனித உள்ளத்தின் ஆழத்தை அளக்க எந்த அளவுகோல் இருக்கிறது?"

"ஏன், அன்பு என்னும் அளவுகோல் இருக்கிறதே" என்றேன்.

ரங்கதுரை புன்முறுவலுடன், "அந்த அன்பை எதைக் கொண்டு நிர்ணயிப்பது? ஒரே அன்புதான் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு விதமாய் வெளிப்படுகிறது. குழந்தையிடம் வைக்கும் அன்பு தாயன்பு ஆகிறது. தோழனிடம் அன்பு வைத்தால் நட்பு என்கிறோம். கணவனிடம் உள்ள அன்பைக் காதல் என்கிறோம். கடவுளிடம் வைத்தால் பக்தி என்கிறோம். ஆகவே இடத்தைப் பொறுத் திருக்கிறது அன்பின் தரம். ஏன்! பிடிவாத குணத்தை எடுத்துக் கொள். நல்ல காரியம் செய்வதற்குப் பிடிவாதம் செய்தால் சாமர்த்தியம் என்கிறோம். தீய காரியத்தில் பிடிவாதம் செய்தால் மூடத்தனம் என்கிறோம்" என்று சொன்னார்.

"இந்துவுக்குப் பதில் சொல்ல ஏற்றவளாக நீ கிடைத்தாயே. ஏதோ என்னுடைய நல்ல காலந்தான். என்னைக் கேள்வி கேட்டுத் திணற அடித்து விடுவாள்" என்றார் என் தங்கை.

மறு நாள் காலையில் தந்தையிடம் சென்று, "அப்பா! நேற்று மாலை டீச்சருடன் பேசிக் கொண்டிருந்தபோது ஒரு குறள் நினைவுக்கு வந்தது. அதைச் சொன்னவுடன் அவர் ரொம்ப சந்தோஷமடைந்தார். அதனால் அவருக்கு நான் ஒரு திருக்குறள் புஸ்தகத்தை அன்பளிப்பாகக் கொடுக்க விரும்புகிறேன்" என்று கூறினேன்.

என் தந்தையும் மிக்க மகிழ்ச்சியுடன் தன்னிடமிருந்த ஒரே திருக்குறள் பிரதியை எடுத்துக் கொடுத்தார். அதில் அந்தக் குறளை எழுதி எடுத்துக்கொண்டு பாதிரித் தோட்டத்துக்கு ஓடினேன்.

நான் சுசீலா தேவியின் வீட்டை அடைந்த போது அவர் மண்டியிட்டு உட்கார்ந்து கண்களை மூடிக் கொண்டு பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார். அவருடைய தாயார் சாமான்களையெல்லாம் சேர்த்து மூட்டை கட்டிக்கொண்டிருந்தார். பத்திரிகை பார்த்துக்கொண்டிருந்த சுசீலா தேவியின் தந்தை என்னை உட்காருமாறு புன்னகையுடன் சமிக்ஞை செய்தார். அதற்குள் பக்கத்திலிருந்த பிரம்பு மேஜையின்மீது என் கவனம் சென்றது. அதன் மேல் ஒரு புதிய பைபிள் புத்தகம் இருந்தது. கறுப்பு அட்டைமேல் பொன் எழுத்துக்களால் ஆங்கிலத்தில் 'புனித பைபிள்' என்று எழுதி யிருந்தது.

இதற்குள் சுசீலாதேவி எழுந்து வந்து விட்டார். "வாம்மா இந்து! இரண்டு மணிக்குப் புறப்படுகிறோம். அப்போது தான் திருநந்திபுரத்துக்கு ஆறு மணிக்குப் போய்ச் சேர முடியும். ஆறரை மணிக்கு ரயில் வருகிறதாம். இன்று நான் புறப்படும் வரை என்னோடு இருப்பாயல்லவா? அல்லது வேறு ஏதேனும் காரியம் இருக்கிறதா?"

"ஒரு காரியமும் இல்லை, டீச்சர். உங்களோடுதான் இருக்கப் போகிறேன். ஏதாவது உதவி செய்யட்டுமா?" என்று கேட்டுக்கொண்டே கொடிகளில் தொங்கிக்கொண்டிருந்த புடவைகளை எடுத்து மடிக்கத் தொடங்கினேன்.

"முதலில் இங்கே வா" என்று என்னைக் கூப்பிட்டார் சுசீலா தேவி. நான் மேஜை மீது கொண்டு வைத்த திருக்குறள் புத்தகத்தைப் பிரித்துக் கையில் எடுத்துக் கொண்டு சந்தோஷமாக, "இந்து! உன்னுடைய பரிசுக்கு ரொம்ப வந்தனம். நானே இந்தப் புத்தகத்தை வாங்கிப் படிக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டிருந்தேன். நீயே கொடுத்து விட்டாய். நானும் உனக்கு ஒரு பரிசு வைத்திருக்கிறேன், தெரியுமா?" என்று சொல்லிக் கொண்டே அந்தப் புதிய பைபிள் புத்தகத்தை எடுத்து என் கையில் கொடுத்தார்.

அதைப் பிரித்துப் பார்த்தேன். "கண்மணி இந்துவுக்கு! வாழ்க்கையில் அன்பும் இன்பமும் பொங்கிப் பெருக வேண்டும் என்ற பிரார்த்தனையுடன்—சுசீலா தேவி" என்று எழுதப் பட்டிருந்தது.

"இப்போது கூட உனக்காகத்தான் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தேன், இந்து. நீ சந்தோஷமாக இருக்க வேண்டும் என்பதுதான் என் ஆசை. இந்த பைபிள் புத்தகத்தை ஜாக்கிரதையாக வைத்துக் கொள். உனக்கு அறிவில் சிறந்த கணவர் கிடைக்கப் போகிறார். அவர் மூலம் நீ இந்தப் புத்தகம் முழுவதையும் படித்துப் பயனடைய வேண்டும். இதுவே நீ என்னிடம் வைத்திருக்கும் அன்புக்கு அடையாளம்" என்றார். நானும் உணர்ச்சி வசமாகி "அப்படியே செய்கிறேன், டீச்சர்" என்று கூறினேன்.

அந்த அரிய அன்பளிப்பை நான் ஒரு பொக்கிஷமாகக் கருதி, போற்றி வந்திருக்கிறேன். அதிலுள்ள ஏசுநாதரின் படத்தையும், கன்னி மேரியின் படத்தையும் பார்த்து வியந்திருக்கிறேன். லியனார்டோ டா வின்சி என்ற இத்தாலிய சைத்ரிக மேதாவியின் "கடைசி விருந்து" என்னும் படத்தை அடிக்கடி பார்த்திருக்கிறேன். ஆனால் அதை முழுதும் படித்துப் பயனடையும்படியான பாக்கியம் இன்று வரை எனக்குக் கிடைக்கவில்லை. அவ்வளவு ஆங்கில ஞானம் எனக்கு ஏற்படாமலேயே போய் விட்டது. ஆனாலும் சுசீலா தேவியின் அந்த அன்பளிப்பு எனக்குப் பல சமயங்களில் பொறுமையை உபதேசம் செய்திருக்கிறது. எனக்கு யார்மேலும் துவேஷம் ஏற்படாமல் என் அறிவைப் பாதுகாத்து வந்திருக்கிறது. சொல்லொணாத துன்பங்களுக்கு மத்தியில் நான் தவித்தபோதெல்லாம் அது எனக்கு ஆறுதல் அளித்திருக்கிறது. எத்தனையோ பெருமையாக நான் வாழ்ந்த காலத்தில் கர்வங் கொள்ளாமலிருக்கச் செய்திருக்கிறது. அன்பினால் இயேசு பெருமான் அடைந்த துன்பங்களை எண்ணிப் பார்த்து நான் என்னுடைய துன்பங்கள் தூசிக்குச் சமமானவை என்று பல சந்தர்ப்பங்களில் சமாதானம் அடைந்ததுண்டு. இப்போதும் அதை எண்ணியே மனம் தேறுகிறேன்.

அன்று சுசீலா தேவி புறப்பட்டு மாட்டு வண்டியில் ஏறிச் செல்லும் வரை நானும் அங்கேயே இருந்தேன். லக்ஷ்மி கண்ணீர் விட்டு அழுததாக சுசீலாதேவி கூறினார். அவரைப் போன்று அன்பைப் பொழிபவர்களைப் பிரிய யாருக்குத்தான் மனம் வரும்?

ரங்கதுரையும், தங்க பாண்டியனும் கூடப் பன்னிரண்டு மணிக்கு வந்து விட்டுப்போனார்கள். சுசீலாதேவி எல்லாரிடமும் விடைபெற்றுக் கொண்டார். இரண்டு மாட்டு வண்டிகள் வந்திருந்தன. ஒன்றில் சாமான்களை யெல்லாம் ஏற்றி விட்டு இன்னொன்றில் மூவரும் ஏறிக் கொண்டார்கள். அதுவரை சும்மாயிருந்த எனக்குக் கண்ணீர் பொத்துக் கொண்டு வந்தது. சுசீலா தேவியும் முகத்தை மறுபுறம் திருப்பிக் கொண்டார். 'ஜல்ஜல்' என்ற சதங்கைச் சத்தத்துடன் வண்டிகள் புறப்பட்டன. வீடு வரும் வரைக்கும் கூடவே நானும் நடந்து வந்தேன். என் தந்தை வாசலில் நின்று கொண்டிருந்தார். "போய் வருகிறேன்" என்று சுசீலா தேவி அவரிடமும், கடைசித் தடவையாக என்னிடமும் விடை பெற்றுக் கொண்டார். பிறகு நான் அவரைக் காணவேயில்லை! (தொடரும்)

# கவர்ச்சி மிக்கது
# சக்தி வாய்ந்தது
# நம்பகமானது




# ராயல் என்பீல்ட்

| | | | |
|---|---|---|---|
| | 125 C.C. | | G 350 C.C. |
| என்ஸைன் | 150 C.C. | புல்லெட் | 350 C.C. |
| | 250 C.C. | மீடியார் | 700 C.C. |

மற்றும் இதர மாடல்களுமுண்டு.

எங்கெல்லாம் மோட்டார் சைகிள்கள் காணப்படுகின்றனவோ அங்கெல்லாம் பெரும்பாலும் இவைகளையே காண்பீர்கள்

சுலபமான தவணைகளில் பணம் செலுத்தலாம்

பரிவர்த்தனை வேண்டுமானாலும் ஆலோசிக்கப்படும்.

**தி மதராஸ் மோட்டார்ஸ் லிமிடெட்**
(மோட்டார்சைகிள் நிபுணர்கள்)
36-C, மவுண்டு ரோட் :: மதராஸ்-2.

★★★ யோகாசன நிபுணர் ஸ்ரீ வி. என். குமாரசாமி அவர்களின் அருமை மனைவி ஸ்ரீமதி சீதாலக்ஷ்மி குமாரசாமி. அவர், ஸ்ரீ குமாரசாமியின் வாழ்க்கையில் எல்லாத் துறைகளிலும் அருந்துணையாக இருந்து வந்தது போல யோகாசனத் துறையிலும் தம் கணவருக்குத் துணையாக நின்று தொண்டாற்றி வந்தவர். யோகாசனக் கலையில் ஸ்ரீ குமாரசாமிக்கு உள்ள அளவு அனுபவ ஞானம் பெற்றவர். தம் அருமைக் கணவர் ஆற்றிய தொண்டைத் தொடர்ந்து செய்ய இசைந்துள்ளார். "ஆரோக்கிய வாழ்வு" என்ற தலைப்பில் யோகாசன சம்பந்தமாகக கல்கியில் வாரந்தோறும் எழுதி வருவார்கள்.

# யோகாசன நேயர்களுக்கு

**சீதாலக்ஷ்மி குமாரசாமி**

யோகாசனக்கலையையே மூச்சாகக்கொண்ட என் கணவரும், பல்லாயிரக்கணக்கான யோகாசன அன்பர்களின் வழிகாட்டியுமான ஸ்ரீ வி. என். குமாரஸ்வாமி அவர்களின் மறைவினால் உண்டான அதிர்ச்சி இன்னமும் நீங்கினபாடில்லை. இதற்குள் ஆசிரியர் கல்கி அவர்களும் நம்மை விட்டுப் பிரிந்து விட்டார் என்ற செய்தி எல்லோரையும் கலங்கச் செய்து விட்டது.

ஒரு சிலர் மட்டும் உரிமை கொண்டாடி, குடத்தில் இட்ட விளக்கென இருந்த யோகாசனக் கலையை, யோகாசன ஆசிரியர் ஸ்ரீ குமாரசாமி அவர்கள் சாதாரண மக்களும் புரிந்து கொள்ளும் வகையில், எளிய நடையில், விஷயத்தில் ஒளிவு மறைவு வைக்காமல், இரகசியம், மூடு மந்திரம், மூடக் கொள்கை என்பதற்கு இடம் தராமல் எழுதி வந்ததை எல்லோரும் அறிவர். ஆசிரியர் கல்கி அவர்கள் யோகாசன ஆசிரியருடைய கட்டுரைகளுக்கு நல்ல மதிப்பு தந்து, குன்றின்மேல் இட்ட விளக்காகப் பொது மக்களுக்குப் பயன்படும் வகையில் கல்கிப் பத்திரிகையில் பிரசுரித்து வந்தார். ஆசனக் கலை தமிழ் கூறும் நல்லுலகம் எங்கும் பரவுவதற்குக் காரணம் ஆசிரியர் கல்கி அவர்கள்தான். பல்லாயிரக்கணக்கான மக்கள் ஆசனங்களைப் பயிலவும், தங்கள் குறைகளைத் தீர்த்துக் கொள்ளவும், ஆசனக் கலையின் மேன்மையை உணரவும் தலைப்பட்டு விட்டனர். ஆனால் இன்று இவ்விரு மணிகளையும் இழந்து நிற்கின்றோம்.

இவ்விரு ஆசிரியர்கள் விட்டுச் சென்ற பணியைத் தொடர்ந்து செய்வதுதான் அவர்களின் ஆன்ம சாந்திக்காகவும், நினைவுச் சின்னத்துக்காகவும் செய்யும் சிறந்த தொண்டாகும்.

யோகாசன ஆசிரியருடன் இருபது வருடங்கள் பணியாற்றி வந்த அனுபவத்தைக் கொண்டு, அவர் விட்டுச் சென்ற ஆசனப் பணியைத் தொடர்ந்து செய்ய நான் துணிந்துள்ளேன். 'யோகாசனச் சிகிச்சை' என்ற தலைப்பில் அவர் எழுதி வந்த ஆஸ்துமா கட்டுரைகளும், உணவுக் கட்டுரைகளும், 'ஆரோக்கிய வாழ்வு' என்ற தலைப்பில் இனித் தொடர்ந்து எழுதுகிறேன்.

"எல்லோரும் ஆரோக்கியமாய், சுகமாய், ஆனந்தமாய், நோயின்றி வாழ வகையுண்டு; அதற்கு ஆசனங்களே சிறந்த மார்க்கம் என்று பறைசாற்றி வந்தவரே மறைந்து விட்டார்; நாம் எல்லாம் செய்து என்ன பயன்!" என்ற சோர்வு மனப்பான்மை சிலரிடம் குடிகொள்ளுவது இந்தச் சந்தர்ப்பத்தில் இயற்கையே.

இதற்குத்தான் கல்கி ஆசிரியர் அவர்கள் 'விதி வென்றது' என்று எழுதினர்கள். ஆனால் அந்த விதி கல்கி ஆசிரியரையும் வென்று விட்டது என்று நினைக்கும்போது, ஏதோ ஒரு சக்தி நம்மை அறியாமல் ஆட்டுவிக்கின்றது, அதனை அறியவோ அடக்கவோ மனித சக்தியால் முடிவதில்லை என்ற முடிவுக்கு வரவேண்டியதாய் இருக்கிறது.

யோகாசனம் செய்வதினால் ஆயுள் வளர வேண்டாமா! யோகாசன ஆசிரியர் ஐம்பத்து நாலு வயதில் மறையக் காரணமென்ன! ஆசனம் செய்ததினால் ஆயுள் குறைந்து விட்டதா! ஒருகால் ஆசிரியர் உற்சாக மிகுதியினால் அதிகப்படியான ஆசனங்கள் செய்து, அதனால் கோளாறு ஏதாவது ஏற்பட்டு விட்டதோ என்பதைப் போன்ற சந்தேகங்கள் எழுவது இயற்கையே.

ஆயுள் என்பது பலவிதத்தில் ஏற்படுவது. பரம்பரை முதல் தாய் தந்தையர் தந்த உடல், சூழ்நிலை, வாழ்க்கை வசதி, தன் முயற்சி, இத்தனைக்கும் மேலாக ஒரு சக்தி; ஆகியவற்றை யெல்லாம் கொண்டுதான் ஒருவரின் ஆயுள் அமைகின்றது. ஆசன ஆசிரியர் பிறந்தது வறுமை மிகுந்த குடும்பத்தில். பதினறு வயது வரைக்கும் வயிறு நிறைய தமக்கு இஷ்டமானதை உண்ணச் சௌகரிய மிருந்த தில்லை. அப்பொழுதே உடல் நலிவு ஏற்பட்டு விட்டது. பின் பல இடங்களில் வேலைக்கு அமர்ந்து தம் இருபத்தேழாம் ஆண்டிற்குப் பின் சொந்த முயற்சியால் சாய நூல் வியாபாரத்தில் சிறிது சிறிதாக முன்னேறி வந்தார். வியாபாரம்

முன்னேறியதே அன்றி, அவர் ஆரோக்கியம் பின்னேறியே வந்தது. தற்சமயம் சாப்பிடச் சக்தியிருந்தும், சாப்பிட்டதை ஜீரணமாக்கச் சக்தியிருந்ததில்லை. அடிக்கடி ஜுரம், வயிற்றுக் கோளாறுகள், வழக்கமாய் வரும் தலைவலி இம்மாதிரி சதா கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார். சதா மருந்து புட்டியும் கையுமாக வாழ்ந்தார்.

இவ்வாறு இருந்த போதுதான் தன் முப்பத்து ஐந்தாவது வயதில் யோகாசனத்தைத் தொடர்ந்தார். ஒரு நாளும் ஆசனம் செய்யத் தவற மாட்டார். தன் உடல் கோளாறுகள் மறையத் தலைப்பட்டன. கூடிய சீக்கிரம் வாழ்க்கையில் ஒரு தெம்பு, எவ்விஷயத்திலும் ஒரு ஆர்வம், திறமை முதலியன ஏற்பட்டன. ஏதோ தம்மிடம் ஒரு புது சக்தி உண்டாவதை அறிந்தார். இம்மாதிரி ஆசனம் பழகி வரும் அன்பர்கள் அனைவரும் அறிந்திருப்பார்கள். தாம் பெற்ற ஆரோக்கிய ஆனந்த வாழ்வை மற்றவர்களும் அடைய வேண்டும் என்று தம்மைச் சேர்ந்தவர்களையும் ஆசனம் பயிலத் தூண்டுவார். தொடர்ந்து பயின்று வந்ததால் அவர் நலிந்த உடல் தேறியது. உடல் மாசற்றுத் திகழ்ந்தது. ஆயுளும் வளர்ந்தது என்று திட்டமாய்ச் சொல்ல வேண்டும்.

அதன் பின் 'கல்கி' பத்திரிகையின் மூலம் லக்ஷக்கணக்கான மக்களின் குறைகளைத் தீர்த்து வந்தார். சந்தேகங்களுக்குப் பதில் எழுதி வந்தார். யோகாசன சம்பந்தமாக யார் எழுதினாலும் அவர்களின் நூல்களை வாங்கி வாசிக்கவும், வந்த கடிதங்களுக்குப் பதில் எழுதவும், சிகிச்சை எழுதவும், நேரில் காண வந்தவர்களுடன் பேசவும், மற்றப் பொதுநலப் பணிகளை ஆற்றவும் அவர் சர்வ சதா காலமும் உழைத்து வந்தார். இரவு மூன்று நான்கு மணி நேரம் தூங்குவது தவிர மற்ற நேரங்களிலெல்லாம் இவைகளுக்கே செலவாக்கி வந்தார். சோர்வு, பலஹீனம் என்பது அவருக்கு மறந்து போன ஒரு விஷயம். இவ்வளவுக்கும் காரணம் யோகாசன சக்தியே என்பதில் ஐயமில்லை.

முதன் முதலில் மிகத் தீவிரமாக எல்லா ஆசனங்களையும் செய்தாலும், உடல் சீர் அடைந்து இனி, பிணிக்குப் பயமில்லை என்ற நிலைமைக்கு வந்த பின் சர்வாங்காசனம் இருபது நிமிஷம், மத்ஸ்யாசனம் ஐந்து நிமிஷம், சிரசாசனம் பத்து அல்லது பதினைந்து நிமிஷம் என்று ஆசனங்களைக் குறைத்துக் கொண்டு விட்டார். வாரத்துக்கு ஒரு நாள் மற்ற ஆசனங்களையும் செய்வார். ஆனால் காலை மாலை பிராணாயாமத்தை ஒழுங்காகச் செய்வார். தியானத்தில் அதிக நேரம் மூழ்கி விடுவார். அவருக்கு உடலைப் பற்றிய ஞானம் பூரணமாய் உண்டு. ஆகாரத்திலாவது, வேலைத் தொந்தரவினாலாவது ஏதாவது உடலுக்குச் சிறிது மாறுதல் ஏற்பட்டாலும் ஓரிரண்டு நாட்களில் சரிசெய்து கொண்டு விடுவார். அவருக்கு இருதயக் கோளாறு என்பது இருந்ததே கிடையாது. அடிக்கடி டாக்டர்களிடம் சென்று தம் உடலைப் பரிசோதனைகள் செய்து அதன் அபிவிருத்தியைப் பற்றித் தெரிந்து திருப்தி அடைவார். கடைசிவரை நோயோ, நொடியோ அவரை அணுகியது கிடையாது.

இருதய ஆபரேஷனிலும் இருதயக் கோளாற்றைக் கண்டு பிடித்துத் திருத்துவதிலும் மகா நிபுணரான ஒரு டாக்டர் இருந்தார். முன் அறிகுறி எதுவும் இன்றி இருதயம் நின்று விட்டது. அவருக்கென்ன தம் உடல் நிலை தெரியாதா! தம் இருதய நிலையைப் பற்றி அறியாரா! இவைகளைப் பற்றி யெல்லாம் நினைக்கும் போதுதான் ஏதோ சக்தி நம்மை யெல்லாம் ஆட்டுகிறது என்று தீர்மானிக்க வேண்டியதாய் இருக்கிறது. "ஆட்டுவித்தார் ஆடாதார் யாரே" என்று ஸ்ரீ இராமலிங்க அடிகள் சொல்லியது போல், எல்லாம் ஒரு சக்திக்குக் கட்டுப்பட்டு நடக்கிறது.

ஸ்ரீ ஆதி சங்கராச்சாரியார் முப்பது வயதுதான் வாழ்ந்தார். அந்த வயதுக்குள் அவர் சாதித்த காரியங்கள் பலர் பல நூற்றாண்டுகள் வாழ்ந்தாலும் சாதித்திருக்கவே முடியாது. ஸ்ரீ விவேகானந்தர் தம் முப்பத்தாறு வயதுக்குள் நம் நாட்டையும், நம் கலாசாரத்தையுமே உலகோர் முன் உயர்த்தினார். ஸ்ரீ ராமதீர்த்தர் முப்பது வயது தான் உலகத்தில் இருந்தார். அவர் அள்ளி வீசிய ஞான ஒளி என்றும் சுடர் விட்டுப் பிரகாசிக்கும். ஆசிரியர் 'கல்கி' அவர்கள் தம் ஐம்பத்தைந்து வயதுக்குள் தமிழுக்கும், தமிழ் மக்களுக்கும், பாரத தேசத்துக்கும் செய்த பணி யாரே செய்ய வல்லார்! தமிழில் எந்த விஷயத்தையும் எடுத்துச் சொல்ல முடியும் என்று வழி காட்டியவர் அவரன்றோ! அவரவர்கள் செய்த பணிகளைக் கொண்டே அவரவர்களின் ஆயுள் மதிப்பிடப்படுகிறது. இந்த மகான்களின் உடல் மறைந்தாலும் அவர்கள் புகழ் என்றும் மறையாது. வாழ்கின்ற வாழ்க்கையில் நோய் நொடி இல்லாமல் வாழ்ந்து மேலே சொன்ன பெரியவர்கள் விட்டுச் சென்ற தொண்டை ஒவ்வொருவரும் செய்ய வேண்டும். இதற்கு உதவியான முறையில் யோகாசன ஆசிரியர் ஸ்ரீ வி. என். குமாரசாமி விட்டுச் சென்ற கட்டுரைத்தொடரை, மேலும் தொடர்ந்து எழுதுவதை ஒரு சேவையாகக் கருதுகிறேன்.

பொங்கற்
பரிசு

விஜயாவின்

# மிஸ்ஸியம்மா

சாவித்திரி... கணேஷ்
சாரங்கபாணி...தங்கவேலு
நம்பியார்...ஏழுமலை
கருணாநிதி...ரங்காராவ்
ஸ்ரீ
ஜமுனா

டைரக்ஷன்...பிரசாத்



தயாரிப்பு....நாகிரெட்டி & சக்ரபாணி




## 33. என்ன கோரம்?

சாந்தா கௌரி அவருடைய அந்தப் பார்வைக்காக அதிகம் பயந்து விடவில்லை. கேட்ட கேள்விக்குப் பதில் சொன்னாள். "எத்தனை காலம் உயிர் வாழ வேண்டும் என்று என் தலையில் எழுதியிருக்கிறதோ, அத்தனை காலம் நான் உயிர் வாழ்ந்துதானே ஆக வேண்டும்? வேண்டாம் என்றால் விட்டு விடுமா?" என்றாள் வேதாந்தமாக.

"ஆமாம், ஆமாம்!" என்று சொன்ன நாத் பாபா எள்ளி நகையாடும் தோரணையில் ஒருமுறை நகைத்தார். "ஆனால் எனக்கு உயிர்வாழவேண்டுமென்கிற ஆசையேயில்லை. உனக்குத் தெரியுமா?" என்று கேட்டார்.

"அப்படியானால் எதற்காக இதுவரை உயிரோடு இருந்தீர்களாம்?" என்று கேட்டாள் சாந்தா கௌரி. அப்பொழுது அவள் முகத்திலே அச்சத்தின் குறி கொஞ்சம் குறைவதாகத் தோன்றியது.

"இன்றைய தினத்துக்காகத்தான். இன்றைய காரியம் முடிந்ததும் நான் கட்டாயம் இறந்து விடுவேன்!"

"அப்படியானால் நீங்கள் செய்ய வேண்டிய வேலை இன்றுவரை ஏதோ பாக்கியிருந்திருக்கிறது என்று சொல்லுங்கள்!"

"ஆமாம். அந்த வேலையை இப்பொழுதே முடிக்க விருக்கிறேன். சாந்தா! உனக்கு வாழ்க்கை வெகு இனிக்கிறது, இல்லையா? அதனால் நீ உன் இஷ்டப்படி உயிர் வாழ்ந்திருப்பதில் எனக்கு யாதொரு விதமான ஆட்சேபணையும் இல்லை. ஆனால் உனக்கு உன் அழகிலே இன்னும் கர்வம் இருக்கிறதல்லவா?" என்று கேட்டார் நாத் பாபா.

"நாக்கில் நரம்பில்லாமல் எதற்காக இப்படிப் பேசுகிறீர்கள்? இப்படிப் பேசும் உங்கள் நாக்கைக் கடவுள் இன்னும் கொண்டு போக வில்லையே!"

"என் நாக்கை மட்டும் என்ன? என் உடலையும் கொண்டுபோக வேண்டியவன் ஏனோ கொண்டுபோக வில்லை. ஆனால், சாந்தா! ஒன்று சொல்கிறேன். உன் அழகுதான் முதலில் என்னைப் பித்தனாக்கியது. இன்னும் அது என்னைப் பித்தனாக்கிக் கொண்டுதான் இருக்கிறது. உன் கண்களிலே சுடர்விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருக்கும் ஒளி என்னைச் சுட்டெரித்துக் கொண்டிருக்கிறது. அனலில் காய்ந்து சிவந்த கோணூசியைத் தவிர வேறு எந்தப் பொருளாலும் அதனுடன் விளையாட முடியாது! உன் மூக்கு எடுப்பாகவும் அழகாகவும் இருக்கிறது. பளபள வென்று பிரகாசிக்கும் கத்தி கொண்டு அதை யறுத்துக் கடித்துத்தின்றால்தான் எனக்குத் திருப்தி ஏற்படும். உன் கன்னங்களில் இன்னும் முறுவல் குழைந்து குமிழியிட்டு விளையாடுகிறது. அதில் கூரிய குத்துக் கத்தி கொண்டு விளையாடி மகிழ வேண்டும் என்று என் மனத்தில் ஆசை முகிழ்க்கிறது. எனது இந்த ஆசையைப் பூர்த்தி செய்து கொள்வதற்காகத்தான் நான் இன்றுவரை இந்த உயிரை வைத்துக்கொண்டிருக்கிறேன். இதோ பார்! அதற்கு வேண்டிய கருவிகளையும் நான் என் கையோடு கொண்டே வந்திருக்கிறேன்!" என்றார் நாத் பாபா.

அதைச் சொல்லிமுடித்த அவர் நாலு திசைகளும் நடுநடுங்க அட்டகாசச் சிரிப்புச் சிரித்தார். சாந்தா கௌரியின் ஒவ்வொரு உரோமமும் நடுக்கத்தில் குத்திட்டு நின்றது. ஜகதீஷின் கால்களில் ஒரு படபடப்பு உண்டாகி அவனைத் தள்ளாட வைத்தது. நாத் பாபா மெதுவாகத் தம் இடுப்பிலிருந்து கோணூசி, கத்தி, குத்துக் கத்தி மூன்றையும் எடுத்துக் காலடிகளில் வைத்துக்கொண்டார். அடுத்த கணம் அவர் முகத்தில் தவழ்ந்து கொண்டிருந்த ஸ்திரத் தன்மை அகன்று விட்டது. அதற்குப் பதிலாகக் கண்களிலே பயங்கர மிருகத் தன்மை பளிச்சிட்டது. பற்கள் நறநறவென்று நெரிந்தன. உதடுகள் துடித்தன. அப்பொழுது நாத் பாபா பயங்கரப் பேய் உருவம் தரித்து வந்திருக்கும் காலதேவனாகவே தோற்றினார். அவர் முகத்தில் அச்சமயம் சமைந்த கோடுகள் உக்கிர தாண்டவமாடும் சிவபெருமானை நினைவுறுத்தின. ஜகதீஷ் அதுவரை அத்தகைய பயங்கர சொரூபத்தைப் பார்த்ததேயில்லை. அவனுக்குத் தன் பிராணனே தன்னை விட்டுப் பயந்து ஓடியதாகத் தோன்றியது.

"உன் பிள்ளை எங்கே?"

—சாந்தா கௌரியின் மாறும் முகபாவங்களைப் பார்த்தவாறே கேட்டார் நாத்பாபா.

"அவன் என் பிள்ளைதானா? உங்கள் பிள்ளையில்லையா?" என்று சிறிது வியப்புடன் கேட்டாள் சாந்தா கௌரி.

சாந்தா கௌரியின் சொற்களைக் கேட்ட அடுத்த கணமே ஜகதீஷுக்கு நினைவு வந்து விட்டது. அவன் கண்களில் மனோஹரின் முகமும் துறவியின் முகமும் மாறி மாறித் தோன்றின. இருவருடைய முகங்களிலும் ஒற்றுமை இருப்பதையும் உணர்ந்தான். இந்த ஒற்றுமையைத் தேடத்தானே அவன் மனத்தில் பற்பல சிந்தனைகள் மலைமலையாக எழுந்து கொண்டிருந்தன? அவன் சந்தேகம் விலகி விட்டது; விஷயம் விளங்கி விட்டது.

ஆனால் சாந்தா கௌரியின் அந்தச் சொற்களைக் கேட்டதும் துறவியின் மனத்தில் வேறு விதமான எண்ணங்கள் அலைபோல் எழுகின்றன என்பதை அவருடைய முகம் பிரதிபலித்துக் காட்டியது. அடுத்த வினாடி அவர், தனக்குக் கிடைக்க விருக்கும் வேட்டையின் மீது பாய்வதற்குத் தருணத்தை எதிர் பார்த்துக் கொண்டிருக்கும் அரக்கனைப்போல் பாய்ந்து, சாந்தா கௌரியின் கையைக் கெட்டியாகப் பற்றிக் கொண்டார். நல்ல பலம் பொருந்திய சாந்தா கௌரியும் எழுந்து நின்று துறவியின் கைப்பிடியிலிருந்து தன் கையை விடுவித்துக் கொள்ள முயன்றாள்.

"இந்தக் கை பிடித்தால் பிடித்ததுதான். திமிறி விடுவித்துக் கொள்ள முடியாது. இது உண்மை. உனக்குச் சந்தேகமாயிருந்தால் இதோ நிற்கும் இந்த வாலிபனிடம் கேட்டுப் பார்!" என்ற துறவி மறுபடியும் தன் பேய்க் குணத்துடன், "இப்பொழுது சொல்! உன் கண்களைக் குத்தி வெளியே எடுக்கட்டுமா? மூக்கை அறுத்துப் போடட்டுமா? கன்னங்களைக் கிழித்து ரத்தக்களறியாக் கட்டுமா? அல்லது மூன்று செயல்களையுமே சேர்ந்தாற் போல் செய்து விடட்டுமா?" என்று வெறி பொங்கக் கேட்டார்.

பலி ஆட்டைப் போல் சாந்தா கௌரி துடித்தாள். தன்னை விடுவித்துக் கொள்வது எப்படி என்று புரியாமல் இருந்த பொழுதிலும், அவள் தன் பலம்கொண்ட மட்டிலும் வேகமாகத் துறவியை ஒரு குத்துக்குத்தினாள்.

ஆனால் துறவி நின்ற இடத்திலேயே சிறிதும் அசைந்து கொடுக்காமல் மலைபோல் நின்றார். பிறகு அவளை அப்படியே கொத்தித் தின்று விடுபவரைப் போலப் பார்த்து, "விடுவித்துக் கொள்ளச் செய்யும் முயற்சியெல்லாம் வீணாக முடியும். இப்பொழுதே உனக்கு எச்சரிக்கை செய்து வைக்கிறேன். நீ கூச்சலிட்டாலும், ஏதாவது பலப் பிரயோகம் செய்து விடுவித்துக் கொள்ள முயன்றாலும் இந்தக் குத்துக் கத்தியை உன் இருதயத்தில் பாய்ச்சி விடுவேன். உன்னைக் கொன்று போட எனக்குச் சிறிதும் நேரம் பிடிக்காது. ஆனால் உனக்கு இன்னும் உயிர் வாழ வேண்டும் என்று ஆசை யிருக்கிறது என்பதை நான் அறிவேன். அதனால்......" என்றார். அதைச் சொன்னவர் அவன் முகத்தை மறைத்திருந்த கையை ஒரு கையால் அகற்றிப் பிடித்துக் கொண்டு இன்னொரு கையினால் அவளுடைய கண்மேல் கோணூசியை வைக்கப் போனார்.

சாந்தா கௌரி நடுநடுங்கிப் போய் இரு கண் இமைகளையும் இறுக மூடிக் கொண்டாள். பயத்தில் அவள் போட நினைத்த பெரிய கூச்சல் வாயை விட்டு வெளி வரும் பொழுது மிக மெல்லியதாக ஒலித்தது. அவளுக்குத் தன் கண்கள் போய் விட்டதாகவே தோன்றியது. ஏனெனில் உண்மையாகவே கோணூசியின் முனை அவளுடைய கண் இமையைக் குத்திக் கொண்டிருந்தது. ஆனால் கண் இமைக்கும் நேரத்தில் துறவியின் கைகள் பின்னடைந்து விட்டன. வியப்புடன் கண்களைத் திறந்து பார்த்த சாந்தா கௌரிக்குப் பெரும் பிரமிப்பாக இருந்தது. எந்த வாலிபனை அவள் தன் அறையிலிருந்து வெளியேற்ற விரும்பினாளோ, அதே வாலிபன் அவளைக் காப்பாற்றுவதற்காகத் துறவியின் பலம் பொருந்திய கையைச் சிறிதும் அசைக்க முடியாமல் பிடித்துக் கொண்டிருந்தான்.

"நன்றி கெட்ட பயலே! விடடா கையை! இல்லாவிட்டால் உன்னையும் இந்த நிலைக்கு ஆளாக்கி விடுவேன். ஜாக்கிரதை!" என்று ஜகதீஷைத் துறவி எச்சரித்தார்.

"முடியாது சாமி, முடியாது! நான் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுது இந்தக் காரியம் நடக்கக் கூடாது. நடக்கவும் நான் விட மாட்டேன்!" என்று அழுத்தமாகச் சொன்னான் ஜகதீஷ்.

"நான் உன்னிடம் என்ன சொல்லி அழைத்து வந்தேன், நினைவிருக்கிறதா? பயப்படுவதாயிருந்தாலோ அல்லது இரக்கம் காட்டுவதாயிருந்தாலோ என்னோடு வராதே என்று சொன்னேன் அல்லவா?"

"தாங்கள் சொன்னது உண்மைதான். நான் மறுக்கவில்லை. ஆனால் என்னால் இந்தக் கோரமே உருவான காரியத்தைப் பார்த்துக் கொண்டிருக்க முடியாது."

"நகர்ந்து போடா, பயங் கொள்ளிப் பயலே! இந்த உலகத்தினிடம் பழிவாங்கப் போகிறேன் என்று சொன்னவன் நீதானேயடா? இந்த உலகத்தை வேண்டாமென்று உதறியெறிந்து விட்டு நீ வந்திருக்கிறாய். ஆனால் உன் தலையில் உதைபட்டே சாக வேண்டும் என்று எழுதியிருக்கிறது. அதனால் தான் நீ என்னிடம் இப்படி நடந்து கொள்கிறாய்!" என்று சொல்லிய வண்ணம் துறவி சாந்தா கௌரியின் கைகளைத் தம் பிடியிலிருந்து திடுதிப்பென்று விட்டு விட்டார். மூச்சுத் திணறிப் போன சாந்தா கௌரி தட்டுத் தடுமாறியவாறே உந்தித் தள்ளப் பட்டவளாய் விழப் போனவள் நல்ல வேளையாக ஒரு மூலையில் போய்ச் சாய்ந்து நின்றாள்.

"சாந்தா, இங்கே வா! இன்று நீ பிழைத்தாய். வா, என் முன்னே வா! ஏன் தயங்குகிறாய்? என்னிடமிருந்து நீ இனி விடுபடுவது கடினம். நான் இந்த வீட்டில்

இருப்பது என்று எண்ணி விட்டால் கூடாது என்று தடுக்க உன்னால் ஆகாது. நீ தடுத்தாலும் நான் கேட்க முடியாது. ஆனால் உன்னையும் உன் அழகையும் பற்றி இழிவாகப் பேசும் பேச்சுக்கு இன்று இதோடு முற்றுப் புள்ளி வைத்து விட்டேன். பாக்கியை இன்னொரு நாள் பார்த்துக் கொள்ளலாம். நாத்பாபாவை மெய்யறிவு சம்பந்தமான சர்ச்சைக்காகத் தானே நீ அழைத்திருந்தாய்? இங்கே வந்து உட்காரு. இன்று மெய்யறிவு சம்பந்தமாகவே ஏதாவது பேசுவோம்!'' என்றார் துறவி.

ஆனால் சாந்தா கௌரி நின்ற இடத்தை விட்டுச் சிறிதும் நகரவும் இல்லை; வாய் திறந்து பேசவும் இல்லை.

''சரி, பாதகமில்லை. நான் இன்னொரு முறை வருகிறேன். ஆனால் அன்று இன்று போல் ஒரு முட்டாள் என்னோடு வரமாட்டான். இது நிச்சயம்.—ஜகதீஷ், வா போகலாம்!'' என்று சொல்லி விட்டுத் துறவி அங்கிருந்து புறப்பட்டார்.

ஜகதீஷும் துறவியும் தோட்டத்துக்கு வெளியே வந்தார்கள். கொஞ்ச தூரம் சென்றதும் துறவி ஜகதீஷைப் பார்த்து, ''ஏன் ஜகதீஷ்! உனக்குக் கல்யாணமாகி விட்டதா?'' என்று கேட்டார்.

''ஆம், ஆகி விட்டது!''

''உனக்கு உன் மனைவியிடம் உண்மையான அன்பு இருக்கிறதா?''

''அன்பு! அன்பு! அன்பைப் பற்றியா கேட்கிறீர்கள், சாமி? என் வாழ்க்கையில் எனக்கு அன்பு என்று ஒன்று யாரிடமாவது இருக்குமானால், அது அவளிடம்தான் இருக்கிறது. வேறு யாரிடமும் இல்லை!'' என்றான் ஜகதீஷ்.

''அப்படியானால், ஜகதீஷ்! இந்த உலகத்தோடு உன்னால் ஒரேயடியாக விரோதம் பாராட்ட முடியாது. உன் மனத்தில் சிறிதளவாவது அன்பு இருக்குமானால் நீ என் காரியத்துக்கு எந்த விதத்திலும் உபயோகப்பட மாட்டாய். உலகத்தைப் பழி வாங்க வேண்டும் என்ற எண்ணம் உனக்கு இருக்குமானால், நீ உன் மனைவியிடம் காட்டும் அன்பைக் கட்டாயம் விட்டொழித்து விட வேண்டும். அதற்கு நீ தயாரா? சொல்லு!'' என்றார் துறவி.

''அப்படிச் செய்வது சிரமமான கா மாயிற்றே, சாமி! அதுவும் உடனே என்றால் அது ஆகும் காரியமா?'' எ கேட்டான் ஜகதீஷ்.

''என் நிலைமையில் இருந்து பார்த்த தான் உனக்குத் தெரியும். உனக்கு உ மனைவியிடம் ஆசையும் அன்பும் இருக்கி றன. ஆனால் எனக்கோ? ஆசையும் அன்பும் எனது இருபத்தைந்தாவது வயதிலேயே காய்ந்து கருகிச் செத்து விட்டன. உன்னுடைய நிலையும் சந்தர்ப்பமும் என்னுடையது போன்றதாகி விட்டால், நீயும் என் மாதிரி ஆகி விடுவாயா, மாட்டாயா? சொல்லு!''

''உங்கள் நிலை எனக்குத் தெரியாது. அதைக் கற்பனை செய்து பார்க்கும் திராணியும் இப்பொழுது எனக்கு இல்லை. அப்படியிருக்கும் பொழுது நான் எப்படிச் சொல்ல முடியும்?'' என்று கேட்டான் ஜகதீஷ்.

''அப்படிக் கேள், சொல்கிறேன். அப்புறம் உன் அபிப்பிராயத்தைச் சொல்லு. நீ உன்



மனைவிக்காக அன்புடன் உயிரையே கூடக் கொடுக்கத் தயாராயிருக்கிறாய் என்று வைத்துக் கொள். ஆனால் அவள் உன் இந்த அன்பை உதறித் தள்ளி விட்டு, உன்னைக் காட்டிலும் உன் நண்பனை அதிகமாக நேசிப்பதாகச் சொல்கிறாள். சொல்வதைச் சொல்லோடு நிறுத்திக் கொள்ளாமல், செயலிலும் காட்டுகிறாள். அவனோடு அவ்யாகிருதமான வகையில் தொடர்பும் வைத்துக் கொள்கிறாள். உன்னை அலட்சியப் படுத்துகிறாள். அப்பொழுது நீ என்ன செய்வாய்? அம்மாதிரி நிலையில் உனக்குப் பெண் இனத்திடமே வெறுப்புத் தோன்றுமா, தோன்றாதா? நீ பெண் இனத்தின் பரம விரோதியாக விடுவாயா, மாட்டாயா?'' என்று கேட்டார் துறவி.

''மாட்டேன், சாமி!'' என்று சிறிதும் சஞ்சலமின்றிப் பதில் சொன்னான் ஜகதீஷ்.

''என்ன?'' — துணுக்குற்றுக் கேட்டார் துறவி. ''நீ ஒரு ஆண் பிள்ளைதானா? இல்லை......'' என்று ஆரம்பித்தார்.

''நான் ஆண் பிள்ளையா இல்லையா என்பதைக் குன்றின் மேல் நிகழ்ந்த சம்பவத்தைக் கொண்டே தாங்கள் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். தாங்கள் தெரிந்து கொள்ளா விட்டால் தவறு என்னுடையது அல்ல. உங்கள் உதவிக்காக வந்த மூன்று ஆட்களையும் எதிர்த்து நிற்க நான் தயாராக இருந்தேனே, உங்களுக்கு நினைவில்லையா?'' என்று கேட்டான் ஜகதீஷ்.

''ஏன், ஜகதீஷ்! என்ன பேசுகிறோம் என்பதைப் புரிந்து கொண்டுதான் பேசுகிறாயா?''

''ஆம். நன்றாகப் புரிந்து கொண்டுதான் பேசுகிறேன். நீங்கள் சொல்லும் நிலையைக் கற்பனை செய்து பார்க்கும் திறன் எனக்கு இருக்கிறது. அத்தகைய செயல் ஏதாவது நடப்பதாயிருந்தால்கூட என் மனைவியிடம் நான் கொண்டுள்ள அன்பு கொஞ்சமும் குறையவே குறையாது!''

''என்ன சொன்னாய்?'' என்று கேட்ட துறவி 'கட கட' வென்று நகைத்தார். ''இது வரை இந்த உலகத்தில் உள்ள ஆண் மகன் எவனும் இப்படிப் பேசி நான் கேட்டதில்லை, அப்பா!'' என்றார்.

''பிறர் பேசித் தாங்கள் கேட்காமல்இருந்திருக்கலாம். ஆனால் நான் ஒருவிஷயம்தைரியமாகச் சொல்கிறேன். என் மனைவி நீங்கள் சொல்வது போன்ற நிலைமையை உண்டு பண்ணி விட்டால், அதற்காக நான் அவள் கண்களைப் பிடுங்கவோ, கன்னத்தைக் குத்திக் காயப் படுத்தவோ ஒரு நாளும் தயாராக மாட்டேன். இது மட்டும் நிச்சயம். இதை நீங்கள் தாராளமாக நம்பலாம்!''

''காரணம்?''

''காரணம்தான் நீங்களே சொல்லி விட்டீர்களே, மனைவிக்காக நான் உயிரை விடவும் தயாரானவன் என்று! அப்புறம் அவளைக் கொல்லப் போவேனா? ஆனால் நீங்கள்தான் சொல் ஒன்று, செயல் ஒன்றாக நடந்து கொள்கிறீர்கள். அவளுக்காக உயிரையே விடத் தயாராயிருந்ததாகச் சொன்னீர்கள். ஆனால் இன்று அவளைக் கொன்று போடத் தயாராகி விட்டீர்கள்! கேட்கிறேனென்று கோபித்துக் கொள்ளாதீர்கள். உயிருக்கு உயிராக நேசிப்பவரைக் கொல்ல எப்படி மனம் வரும்? இதுதான் எனக்கு விளங்கவில்லை!'' என்றான் ஜகதீஷ்.

''மனைவிக்காக உயிரை விடுவதா? அதெப்படி முடியும்? நாம் காட்டும் அன்புக்குப் பதில் அன்பு காட்டுவதாக அவள் வாக்குத் தத்தம் செய்கிறாள். அன்புக்குப் பதில் அன்பு செலுத்தாமல் தன் வாக்குறுதியைக் காற்றில் பறக்க விடுபவளைக் கொன்றால் என்ன என்று கேட்கிறேன்!''

''இம்மாதிரி நிபந்தனை விதித்துப் பெறும் காதலை நான் வியாபார முறைக் காதல் என்றுதான் கூறுவேன். நீங்கள் கூறும் இந்தக் காதல் மாற்றம் விலை கொடுத்துப் பொருள் வாங்குவது போல் அல்லவா இருக்கிறது! ஒரு பெண் உங்களுக்குத் தன் உள்ளத்து அன்பை அளித்தால் அவளுக்கு நீங்களும் உங்கள் உள்ளத்து அன்பை அர்ப்பணிக்கத் தயாராயிருக்கிறீர்கள். இல்லாவிட்டால் இல்லை. அப்படியிருக்கும்பொழுது அவளுக்காக அன்புடன் உயிரைவிட நான் தயார் என்று சொல்ல இடம் ஏது? பிரதி பிரயோஜனத்தை எதிர்பார்க்காமல் ஒருத்திக்காக நீங்கள் உயிரைவிடத் தயாரானால் அதைத்தான் நான் உண்மைக் காதல் என்று ஒப்புக் கொள்வேன். அப்படிப் பட்டவர்தான் உண்மைக் காதலர் என்று பெயர் பெறுவதற்குத் தகுதி வாய்ந்தவர் ஆவார். மற்றவர்களெல்லோரும் அழகுச் சந்தையில் பேரம் பேசும் தரகு வியாபாரிகளை ஒத்தவர்கள் ஆவார்கள். உங்களுக்கு ஒருவர் அநுகூலமானவராயிருந்தால் அவருடைய அநுகூலத்துக்குப் பிரதியாகத் தாங்களும் அநுகூலம் செய்யச் சித்தமாயிருக்கிறீர்கள். உங்களுக்கு ஒருத்தி இன்பம் அளித்தால் அவள் அளித்த இன்பத்துக்குப் பிரதியாக நீங்கள் இன்பம் அளிப்பீர்கள். இல்லாவிட்டால்மாட்டீர்கள். உங்களுக்காக ஒருத்தி உயிரைக் கொடுத்தால் நீங்கள் அவளுக்காக உயிரைக் கொடுப்பீர்கள். இல்லையா? ஆனால் இந்த விஷயத்தில் எனக்குச் சந்தேகம்தான். இருந்தாலும் உங்கள் பேச்சிலிருந்து என்ன தெரிகிறது என்றால், உங்களுக்கு உங்கள் எதிராளியிடமிருந்து முதலில் ஏதாவது கிடைக்க வேண்டும். அப்புறம் நீங்கள் உங்கள் நன்றியைத் தெரிவிப்பதற்காக ஏதாவது செய்வீர்கள்! அப்படித்தானே?'' என்று கேட்டான் ஜகதீஷ்.

அதைக்கேட்ட துறவி, ''போதும், போதும். நிறுத்து! உன் உளறலைக் கேட்க நான் தயாராயில்லை!'' என்றார். அவர் ஜகதீஷின் அந்தக் காதல் வேதாந்தத்தில் சிக்கி உழலத் தயாராயில்லை என்பது நன்றாகத் தெரிந்தது.

''சாமி, மன்னிக்க வேண்டும். என் மனைவியைப் பற்றி யாராவது பேச்சு எடுத்து விட்

டால் நான் இப்படித்தான் பித்தனுகி விடு கிறேன்!" என்றான் ஜகதீஷ்.

இருவரும் பேச்சை நிறுத்தி மௌனமே உருவானார்கள். துறவியின் முகத்தில் பற்பல விதமான மாறுதல்கள் ஏற்பட்டுக் கொண்டிருந்தன. அவர்கள் அப்பொழுது கோவிலை நெருங்கி விட்டார்கள். வெகு நேரம் பேச்சு மூச்சின்றி நடந்த துறவி மறுபடியும் பேச்சைத் தொடர்ந்தார். "நான் நாளைக்கே ஓங்காரியா போய் விடுவேன். நீயும் என்னுடன் வருகிறாயா?" என்று கேட்டார்.

"பேஷாக வருகிறேன். நான் எங்கேயாவது ஓடி ஒளிய வேண்டியவன் தானே? உங்களோடு வருகிறேன்!" என்றான் ஜகதீஷ்.

"ஜகதீஷ்!"

"ஏன்?"

"நான் உன்னைத் தடிகொண்டு அடிக்கத் தயாரானேனே, நினைவிருக்கிறதா?"

"நன்றாக நினைவிருக்கிறது. அடிபட்டிருந்தால் நான் என் ஆயுள்முழுதும் மறக்க மாட்டேன். ஏனெனில் நான் மறக்க நினைத்தாலும் மறக்க முடியாது அல்லவா?"

"நீ அப்பொழுது என்னிடம் என்ன சொன்னாய்? நான் எதற்காக உன்னை அடிக்கத் துடித்தேன்? நினைவிருக்கிறதா?"

"நினைவிருக்கிறது. ஆனால் அதை இன்னொரு தடவை சொல்லி, அதற்காக இப்பொழுது உங்களிடம் நான் அடிபடத் தயாராயில்லை!" என்றான் ஜகதீஷ்.

"இனி நான் உன்னை அடிக்க மாட்டேன். நீ இன்னொருதடவை தாராளமாகச் சொல்லலாம்!" என்றார் துறவி. அப்பொழுது அவர் குரலில் குழைவும் இரக்கமும் நிழலாடின.

இருந்தாலும் துறவி தன்னை அடித்து விடாமல் இருக்க வேண்டுமே என்பதற்காகத் தன்னை ஜாக்கிரதை செய்து கொண்டு, "உங்களைப் போன்ற முகத் தோற்றமுடையவனை எங்கேயோ பார்த்திருக்கிறாற் போல் நினைவு வருவதாகச் சொன்னேன். அப்பொழுது சரியாக நினைவு வரவில்லை. ஆனால்..." என்று இழுத்தான் ஜகதீஷ்.

"அப்படியானால் இப்பொழுது உனக்கு நினைவு வருகிறதா?"

"ஆம். நன்றாக நினைவு வருகிறது. சாந்தா கௌரியின் மகன்......"

"போதும், போதும். நிறுத்து. நான் கேட்கிற கேள்விக்கு மட்டும் பதில் சொல். அதிகமாகப் பேசாதே!" என்று அடக்கினார் துறவி.

இருவரும் தர்ம சத்திரத்தின் அறையை அடைந்தார்கள். ஜகதீஷைக் கட்டிலில் படுத்துத் தூங்குமாறு சொல்லி விட்டுத் துறவி அந்தத் தர்மசத்திரத்தி லிருந்த வேறு ஒரு முக்கியமான பகுதிக்குச் சென்று விட்டார்.

களைப்பும் பிரமையும் சேர்ந்து ஜகதீஷின் கண்களைச் சுற்றின. அவன் கண்களை மூடிக் கொண்டு கட்டிலில் படுத்தான். சிறிது நேரத்துக் கெல்லாம் தர்மசத்திரத்தில் உள்ள கடிகாரத்தில் மணி இரண்டு அடித்தது. அவனுக்கு அவ்வளவுதான் தெரியும்.

விடியற்காலை ஐந்து மணி சுமாருக்கு ஜகதீஷுக்கு விழிப்புக் கொடுத்தது. முதல் நாளிரவு கண்ட காட்சி அவன் மூளையில் சுழன்று கொண்டிருந்தது. ஒருபுறம் சமூகத்தின்மீது எழுந்த கோபத்தீ அவன் உள்ளத்திலே கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தது. இன்னொரு புறம் கோகிலாவின் எழிலுருவம் கையினால் ஜாடை காட்டித் தன்னருகே வருமாறு அழைத்துக் கொண்டிருந்தது. கோகிலா அவனை ஜாடை காட்டித் தன்னிடம் அழைக்கும் விதமே அலாதி. ஜகதீஷ் எத்தனை பேருக்கு நடுவில் இருந்தாலும் காரியம் இருந்தால் பிறர் பார்வைக்குப் படாமல் அவள் அவனை அழைத்து விடுவாள். கண் ஜாடையோ கை ஜாடையோ காட்ட மாட்டாள். எப்படித்தான் அவள் சமிக்ஞை காட்டுவாளோ? எப்படித்தான் அவன் புரிந்து கொள்வானோ? அதை நினைக்க அவனுக்கே ஆச்சரியமா யிருந்தது. அதை அவனால் எந்நாளும் மறக்க முடியாது. கோகிலாவின் நினைவு அவனைத் தன் நினைவு இழக்கச் செய்து விட்டது. 'நான் இருக்கும் உலகத்தினிடம் உங்களுக்கு எதற்காக இத்தனை கோபம்?' என்று அவள் கண்களில் கருணை ததும்பக் கேட்பது போல் அவனுக்குத் தோன்றியது.

அதே சமயம் அங்கே நாத் பாபா வந்து சேர்ந்தார். அதனால் அவன் கனவு கலைந்தது. நாத் பாபா அவனைப் பயணத்துக்குத் தயாராகுமாறு சொன்னார். பிறகு, "ஏன், ஜகதீஷ்! உனக்குக் குதிரை சவாரி செய்ய வருமா?" என்று கேட்டார்.

"வரும். ஆனால் சில வருஷங்களாகப் பழக்கம் விட்டுப் போய் விட்டது. இருந்தாலும் அதிகச் சிரமம் ஏற்படாது!"

"பழக்கம் விட்டுப் போகக் காரணம் என்ன?" என்று கேட்டார் நாத்பாபா.

"வேலையை ராஜிநாமாச் செய்த பின் குதிரையில் ஏறிப் பிரயாணம் செய்யச் சந்தர்ப்பமே கிடைக்கவில்லை!"

"வேலையா? என்ன வேலை?"

"நான் சர்க்கார் உத்தியோகத்தில் இருந்தேன். டெபுடி கலெக்டராக வேலை பார்த்துக் கொண்டிருந்தேன்!"

"என்ன? டெபுடி கலெக்டராகவா? அப்போ...நீ...அதே ஜகதீஷ்தானா? கலெக்டராகவோ கமிஷனராகவோ ஆவதற்குப் பதிலாக இன்று திருடனாகி ஓடி ஒளிந்து திரிகிறாயே! உன் தாய்நாடு உன்னை நன்றாகப் பழி வாங்கி விட்டது. அப்படித்தானே?" என்று கேட்டார் நாத்பாபா.

தாய்நாட்டின் பெயரை நடுவில் நாத்பாபா இழுத்தது ஜகதீஷுக்குப் பிடிக்க வில்லை. சரியான பதில் கிடைக்காததனால் அவன் வாய் திறவாமல் மௌனம் சாதித்துவிட்டான்.

நாத்பாபா, ஜகதீஷ் இருவரும் இன்னொருவனுடன் ஆற்றங் கரைக்கு வந்தார்கள். அங்கே அவர்களுக்கென்று ஒரு படகு தயாராக நின்று கொண்டிருந்தது. அவர்கள் படகை நெருங்கியதும் அதில் உட்கார்ந்திருந்த இரண்டு போலீஸ்காரர்கள் எழுந்து நின்றார்கள். நாத் பாபா அவர்களைப் பார்த்து, "என்ன? குற்றவாளியைத் தேடிக் கொண்டு வந்திருக்கிறீர்களா?" என்று கேட்டுக் கொண்டே படகில் ஏறி உட்கார்ந்தார்.

"ஆமாம், சாமி! முக்கியமாகப் போகிற வருகிற பாதைகளைப் பார்க்கத்தானே வேண்டும்?" என்றார் ஒரு போலீஸ்காரர்.

இன்னொரு போலீஸ்காரர், "சாமி! திடீரென்று எங்கே கிளம்பி விட்டீர்கள்? நீங்கள் போகப் போகிறதாக நாங்கள் கேள்விப்படவில்லையே!" என்றார்.

"எங்களுக்கென்ன, அப்பா! ஆண்டிகள் தானே? நினைத்தால் புறப்படுகிறோம். நினைத்தால் தங்குகிறோம்!" என்றார் நாத் பாபா.

போலீஸ்காரர்களில் ஒருவரும் தன்னை அடையாளம் கண்டு கொள்ளவில்லை என்பதைக் கண்டபின்தான் ஜகதீஷுக்குச் சிறிது மன நிம்மதி ஏற்பட்டது. நாத் பாபா படகில் உட்கார்ந்ததும் அவனும் ஏறி அவரருகில் போய்த் தைரியமாக அமர்ந்தான்.

"ஏன், அப்பா! நீங்கள் எதுவரை போக வேண்டும்? ஏதாவது காரியமாகப் புறப்பட்டீர்களோ?" என்று நாத் பாபா போலீஸ்காரர்களைப் பார்த்துக் கேட்டார்.

"எங்கும் போகவில்லை, சாமி! நாங்கள் இங்கேதான் வந்தோம். இங்கே வந்த பின் தாங்கள் திடீரென்று புறப்படப் போவதாகக் கேள்விப் பட்டோம். அதனால் தங்களைப் பார்த்துப் போகலாம் என்று தங்கினோம்!" என்றார் ஒரு போலீஸ்காரர்.

"அப்படியா? என்னதான் துறவியாக இருந்தாலும் எங்களைப் போன்றோர் மீது கூடப் போலீஸ் என்றால், ஒரு கண் வைத்துத்தானே ஆக வேண்டும்? எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்குமோ, யார் கண்டார்கள்? போலீஸ்காரர்கள் பாரபட்சம் காட்டக் கூடாது என்பது மிகவும் நியாயமான விஷயம்தான்!" என்றார் நாத்பாபா.

போலீஸ்காரர்கள் இருவரும் தங்களைப் பற்றிய புகழ்ச்சியுரையை நாத் பாபாவின் வாயுரையாகக் கேட்கவே, மிகவும் மனம் மகிழ்ந்து போனார்கள். யாருக்காகவும் பாரபட்சம் காட்டாமல் கடமையில் கண்ணுயிருப்பவர்கள் போலீஸ்காரர்கள் என்ற எண்ணம் அவர்கள் மனத்தில் மூளைத்தது. அதனால் ஏற்பட்ட திருப்தி உணர்ச்சி முகத்திலும் பிரதிபலித்தது. இருந்தாலும் மேலுக்கு, "நன்றாகச் சொன்னீர்களே! இருந்தாலும் ஆள் தராதரம் பார்க்க வேண்டாமா, சாமி? உங்களைப் போன்றவர்களிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பது எங்களுக்குத் தெரியாதா? ஏன், சாமி! உங்களோடு வந்திருக்கிறது யார்?" என்று ஒருவர் கேட்டார்.

"பார்த்தீர்களா, பார்த்தீர்களா? நான் என்ன சொன்னேன்? இந்த ஆள்தான் நீங்கள் தேடும் குற்றவாளி. தாராளமாகப் பிடித்துக் கொண்டு போங்கள். இந்த ஆளைப் பிடித்துக் கொண்டு போவதில் எனக்கு எந்த விதமான ஆட்சேபணையும் கிடையாது!" என்றார் நாத்பாபா. அதைக் கேட்டதும் ஜகதீஷின் முகம் ஒரேயடியாகத் தொங்கிப் போய் விட்டது. (தொடரும்)

## அதுவே வழி

அன்பார்ந்த நண்பர் சதாசிவம் அவர்களுக்கு,

உங்களுக்கு எந்த வகையிலே ஆறுதல் சொல்வது என்பது தெரியாமல் மயங்குகிறேன். டி. கே. சி., தேசிக விநாயகம் பிள்ளை, இப்போது 'கல்கி' ஆசிரியர்!—ஒரே வருஷத்தில் மூன்று இலக்கியச் சுடர்கள் அணைந்து விட்டன. தமிழ் எழுத்து உலகமே சூன்யமாகி விட்டது போல் தோன்றுகிறது.

'கல்கி' பத்திரிகையை நீங்கள் தொடங்கியபோது காட்டிய நிர்வாகத் திறமையும், தீரமும் இப்போதுதான் மிக மிகத் தேவை. பத்திரிகையைத் தளர விடாமல் நடத்துங்கள். அது தமிழ் நாட்டுக்குச் செய்யும் சேவை என்பது மாத்திரம் இல்லை, ஆசிரியர் ரா. கி.யின் ஆத்ம சாந்திக்கும், அவருடைய நினைவுக்கு வணக்கம் செலுத்துவதற்கும் அதுவே வழி. கடினமான வழிதான். ஆனால் உங்கள் தீரத்திலும், 'கல்கி' ஸ்தாபனத்தின் சக்தியிலும் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. நமஸ்காரம்.

அன்புள்ள

தூத்துக்குடி
14—12—54

அ. சீநிவாசராகவன்
பிரின்ஸிபல், வ. உ. சி. கல்லூரி.

மூன்று காரியங்களையும் சாதிப்பது கால்கேட் முறையே!

# உங்கள் வாய்த்துர்நாற்றத்தை அகற்றுகையில்

# உங்கள் பற்களை சுத்தி செய்து

## அவற்றை சொத்தையாகாமல் தடுக்கிறது




---

ஜாம்-பெக்கினால் அந்த விஷக்காயம்,
ரணம் அல்லது கட்டியை
குணப்படுத்துங்கள்

# Zam-Buk



ஜாம்-பெக் உலகின் மகோன்னதமான சரும நோயாற்றும் களிம்பு. ஜாம்-பெக் சமனமூட்டி விஷத்தை அகற்றி துரிதமாக வேலை செய்கிறது. காயங்களிலிருந்து விஷத்தை ஜாம்-பெக் வெளியே இழுத்து எரிச்சலைக் குறைந்து சீ ஒழுக்கை நிறுத்தி, துரிதமாக சருமத்திற்கு ஆரோக்கியம் அளிக்கின்றது. தோல் முதலிய சருமநோய்களை நீக்குவதிலும், பூச்சிக்கடி விஷத்தை சுத்தப்படுத்துவதிலும், வலியுடன் சோர்வுற்று கொப்புளித்த கால்களுக்கு இதமளித்து குணமாக்குவதிலும் இதன் சக்தி அற்புதமானது. இதர மதிப்பு வாய்ந்த ஔஷதப் பொருள்களுடன் கூட ஜாம்-பெக்கின் க்லோரோசயிலும் அதன் நோயாற்றும் குணம், நசைநார் போஷாக்கு மற்றுமிதர குணங்களுடன் சேர்க்கப்பட்டுள்ளது.




மிருகக் கொழுப்பு
சேரவில்லை
என்பதற்கு உத்திரவாதம்.

ஜாம்-பெக்கினால் குணம்
பெறுவீர்கள்.

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

FZY-36 TAM.

மதராஸிற்கு ஸோல் ஏஜெண்டுகள்: நாதா & கம்பெனி, பார்க் டவுன்




கவலையே உருவெடுத்தாற் போல் வீட்டுக்கு வந்த கணவனைப் பார்த்ததும் அன்று காரியாலயத்தில் ஏதோ அசம்பாவிதம் நடந்திருக்கிறது என்று மாலதிக்குத் தெரிந்து விட்டது. குணத்தில் நல்லவனானாலும் இயற்கையில் ராஜன் முன்கோபி. "வலுச் சண்டைக்குப் போக மாட்டான். ஆனால் வந்த சண்டையை விடவும் மாட்டான்" என்று சொல்வார்களே, அந்த ரகத்தைச் சேர்ந்தவன் ராஜன். கோபம் வந்தால் அந்த வேகத்தில் வாயில் வந்ததைப் பேசி விடுவானே தவிர, பிறகு அதற்காகப் பச்சாத்தாபப் படுவான்; வருத்தப் படுவான். ஆனால் கோபம் வரும்படி ஏதாவது நடந்தால் மட்டும் அவனால் அடக்க முடியாது.

சாதாரணமாயிருந்தால் வீட்டுக்கு வந்ததும் ராஜன் மாலதியைக் கூப்பிட்டு அன்பாகப் பேசுவான். ஆனால் அன்றோ வந்தவுடன் ஒன்றும் பேசாமல் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டான். மாலதி இரண்டு வருஷங்களாக அவனுடன் குடித்தனம் நடத்தி, அவனுடைய குணநிசயங்களைத் தெரிந்து கொண்டிருந்தாள். இந்த மாதிரி சமயங்களில் அவனுடன் பேசினால் அவனுக்கு மனித குணம் போய் மிருக குணம் வந்து விடும் என்று அவளுக்குத் தெரியும்.

அதனால் ஒரு தட்டில் அப்பொழுது செய்திருந்த டிபனையும் காப்பியையும் கொண்டு வந்து அவன் முன்னிலையில் வைத்துச் சென்றாள்.

நேரம் செல்லச் செல்ல அவன் மன வேதனை குறைந்து கொண்டே வந்தது. டிபன் அவனுக்கு மிகவும் பிடித்தமான கோதுமை அல்வா. அதைப் பார்த்தவுடன் நாக்கில் ஜலம் ஊறியது. தட்டைப் பக்கத்தில் இழுத்து வைத்துக் கொண்டு மெது வாய் ருசி பார்க்கலானான். அவன் மனத்தில் குடி கொண்டிருந்த சஞ்சலம் படிப்படியாக குறைந்தது.

ராஜன் ஒரு பெரிய கம்பெனியில் டைப் பிஸ்ட் வேலை பார்த்து வந்தான். மாதம் நூற்று ஐம்பது ரூபாய் சம்பளம். வருஷத்துக்கு இரண்டு தடவை ஒரு மாத போனஸ். இன்னும் அனேக விதச் சலுகைகள் இருந்தன. ஆனால் வேலை மட்டும் என்றும் அதிகமாய்த்தான் இருக்கும். ராஜன் எவ்வளவு வேலையிருந்தாலும் அலுக்காமல் சளைக்காமல் அதைச் செய்து விடுவான்.

வேலைத் தொந்தரவு அதிகமாயிருக்கும் சில நாட்களில் ராஜன் காரியாலய நேரத்துக்கு மேல் கூட இருக்க வேண்டி வரும். அம்மாதிரி சந்தர்ப்பங்களில் அவனையு மறியாமல் ஏதாவது தப்பிதம் செய்து விடுவான். அதை அந்த நேரத்தில் யாராவது சுட்டிக் காண்பித்தால் ஆபத்துத்தான்! ஏதோ ஆவேசம் வந்தவன்போல் கத்திக் காரியாலயத்தை இரண்டு பண்ணி விடுவான். அவனோடு வேலை செய்து பழகிப்போன தலைமைக் குமாஸ்தா, மற்ற குமாஸ்தாக்கள் அனைவரும் அவனுடைய முன்கோபத்தையறிவார்கள். அவர்கள் அந்தச் சமயத்தில் அந்தத் தப்பிதங்களைச் சொல்ல மாட்டார்கள். அடுத்த நாள் காலையில் அவனிடம் காண்பித்தால், "அவசரத்தில், தவறு நேர்ந்து விட்டது. மன்னியுங்கள்" என்பான். பிறகு மறுபடியும் அந்த வேலையை மிகுந்த உற்சாகத்துடன் செய்து விடுவான்.

இந்த மாதிரி முன்கோபக்காரன் ராஜன் என்று புது அதிகாரியான ஸ்ரீகாந்தனுக்குத் தெரிய நியாயமில்லை. அநேக நாட்களில் வேலை செய்து விட்ட ஸ்ரீகாந்தனைச் சமீபத்தில்தான் அந்த ஊருக்கு மாற்றியிருந்தார்கள். அந்தக் கடிதத்தை 'டைப்' செய்தது ராஜன்தான். அதில் ஒரு சிறு தவறு இருந்ததும் உண்மைதான். ஆனால் அதற்கு அவனே முழுப் பொறுப்பாளி என்று அந்த

ஆபீஸர் கண்டித்தது தான் தவறாய்ப் போய் விட்டது. ஏனென்றால் வழியில்-அதாவது கடிதம் கையெழுத்துக்குப் போகும் வரையில்–தாங்கள் சரி பார்த்ததற்குச் சான்றாக, இரண்டு குமாஸ்தாக்கள், ஒரு தலைமைக் குமாஸ்தா முதலியோர் கையெழுத்திட்டிருந்தனர். அவர்களை யெல்லாம் விட்டு விட்டார் ஸ்ரீ காந்தன். கையெழுத்துப் போடக் கடிதத்தை எடுத்த அவர் ஒரு தடவை படித்துப் பார்த்தார். சிறு தவறுதான். ஆனால், அதனால் கம்பெனிக்கு ஏகப்பட்ட நஷ்டம் உண்டாகலாம். 10, 032 ரூபாய் என்பதற்குப் பதிலாக 1,032 ரூபாய் என்று 'டைப்' செய்திருந்தது. அவருக்கு உடனே கோபம் வந்து விட்டது. "யார் இதை 'டைப்' செய்தது! கூப்பிடு, அந்த டைப்பிஸ்டை !" என்று கூச்சல் போட்டார்.

ராஜனை ஒரு நாளும் எந்த அதிகாரியும் கூப்பிட்டனுப்பியதில்லை. அவர் அவனைக் கூப்பிடுகிறார் என்றதும் அவனுக்கு ஒரே ஆச்சரியமாயிருந்தது. காரணத்தை யெல்லாம் அவன் ஆராயவே யில்லை. குற்றம் செய்யாதவன் எப்படிக் கூண்டில் நிற்பானோ அப்படித் தலை நிமிர்ந்து உள்ளே போனான்.

"உன் பெயர் என்ன !" என்றார் ஸ்ரீ காந்தன்.

"ராஜன்."

"எத்தனை வருஷங்களாக இந்தக் கம்பெனியில் வேலை செய்கிறாய் !"

"எட்டு வருஷமாய்."

"உனக்கு இங்கே வேலை செய்ய இஷ்டமில்லை போலிருக்கிறது" என்றார் அவர். அவன் ஒரு பதிலும் பேசவில்லை.

"ஏன் பேசாமலிருக்கிறாய் ! உனக்கு இங்கே வேலை செய்ய இஷ்டமில்லையா !"

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள் !" அப்பொழுதும் பணிவுடன் தான் பேசினான் ராஜன்.

"உன்னைப்போல் முட்டாள்களை யார் வேலைக்கு வைத்துக் கொண்டது !" என்றார் ஸ்ரீகாந்தன்.

ராஜனின் நரம்புகள் துடித்தன. ஒரு நாளும் ஒருவரும் அவனுடைய எட்டு வருஷ ஸர்வீஸத்தில் இந்த மாதிரி இழிவாக அவனிடம் பேசியதில்லை; அவமானப் படுத்தியதுமில்லை. "முட்டாள்" என்ற சொல்லைக் கேட்டதும் அவன் ஒருகணம் நிலை தடுமாறிப் போனான்.

"மரியாதையாய்ப் பேசுங்கள், சார் !" என்றான் ராஜன். அவன் குரலில் நடுக்கம் தொனித்தது.

எத்தனையோ ஊர்களில் வேலை செய்து அநேக குமாஸ்தாக்களுடன் பழகின ஸ்ரீகாந்தனுக்கு ராஜன் எதிர்த்துப் பேசியது புது அனுபவமாயிருந்தது. கோபக்கனல் கண்களில் பறந்தது.

"என்னிடம் எதிர்த்தா பேசுகிறாய்! இதைப் பார். இந்தக் கடிதத்தை நீதானே 'டைப்' செய்தாய் ! இதில் நீ எவ்வளவு பெரிய தவறு செய்திருக்கிறாய், பார் ! தவறும் செய்துவிட்டு மரியாதையில்லாமலா பேசுகிறாய் ! என்ன துணிச்சல், உனக்கு !" என்று கடிதத்தைத் தூக்கி அவன் முகத்தில் வீசியெறிந்தார்.

"சார், மிகவும் கண்ணியக் குறைவாய் நடந்து கொள்கிறீர்கள் ! இந்தத் தவறுக்கு நான் மட்டும் பொறுப்பாளி யில்லை. இதைச் சரி பார்த்துக் கையெழுத்துப்போட்டிருக்கும் எல்லோருமேதான் பொறுப்பாளிகள். என்னைவிட அவர்களுக்கு அதிகப் பொறுப்பிருக்க வேண்டும். நான் தினம் எத்தனையோ கடிதங்கள் டைப் செய்கிறேன். சிறு தவறுகள் நேர்வது சகஜம்தான். என்னை விட அதிகச் சம்பளம் வாங்கி, அதிகப் பொறுப்புள்ளவர்கள் ஏன் இதைக் கவனித்திருக்கக் கூடாது !" என்றான் ராஜன்.

"ராஜன், நீ எனக்குப்புத்தி சொல்ல வேண்டாம். சுயபுத்தி எனக்கு நிரம்பவும் இருக்கிறது. யாரைக் கேட்க வேண்டும், யாரைக் கேட்கக் கூடாது என்றெல்லாம் நீ எனக்குப் பாடம் கற்றுக் கொடுக்கப் போகிறாயா ! நான் நினைத்தால் இன்றே உன்னை வீட்டுக்கனுப்ப முடியுமாக்கும் !" என்று அவர் கர்ஜித்தார்.

"உங்களுக்கும் எனக்கும் சம்பளம் கொடுப்பவர் வேறு ஒருவர். என்னை வேலையிலிருந்து நீக்க உங்களுக்கு என்ன உரிமை இருக்கிறது !"

"இவ்வளவு தூரத்துக்கு வந்து விட்டதா ! நாளைக் காலையில் பார். மானேஜரிடம் பேசி உன் கையில் வேலையிலிருந்து நீக்கும் உத்தரவு கொடுக்கிறேன்" என்று அடிபட்ட நாகம்போல் சீறினார்.



"மிகவும் பயமுறுத்த வேண்டாம். உங்களாலானதை நீங்கள் செய்யலாம்!" என்று சொல்லிவிட்டு அந்த அறையிலிருந்து வேகமாக வெளியே வந்து விட்டான் ராஜன்.

உள்ளே நடந்த ரௌத்ராகாரமான சம்பாஷணை வெளியிலிருந்த சில குமாஸ்தாக்கள் காதிலும் விழுந்தது. ஏதோ கொஞ்சம் சத்தம் கேட்கவே அதையே உன்னிப்பாகக் கவனித்துக் கேட்டனர். கடைசியில் ராஜன் ஆக்ரோஷமாகவும் சற்றும் பயமில்லாமலும் சொல்லி விட்டு வந்ததைக் கேட்டவர்களில் ஒருவர்.

"வேணும், அந்த ஸ்ரீகாந்தனுக்கு. எல்லோரிடமும் அப்படித்தான் பேசுகிறான். அதிகாரியென்றால் என்ன கொம்பா! ராஜன்மாதிரி முன்கோபிகள்தான் அவனுக்குச் சரியான சூடு கொடுக்க முடியும். கொடுத்து விட்டான்!" என்றான்.

"டேய், உனக்குத் தெரியாதடா. நாளைக் காலையில் பாரேன். மானேஜர், ஸ்ரீகாந்தன் ஆட்டி வைக்கும் பொம்மை. நாளைக்கே தகாத வார்த்தைகள் பேசியதாகக் குற்றம் சுமத்தி அவனை வேலையிலிருந்து நீக்கி விடுவார்!" என்றான் மற்றவன்.

இப்படி அவர்கள் பேசிக் கொண்டதெல்லாம் அரைகுறையாக ராஜன் காதிலும் விழுந்தது. ஆனால் அவன் அந்தச் சமயம் இருந்த நிலையில் அவன் பேசியது தவறு, தவறுக்கு வருந்த வேண்டுமா என்றெல்லாம் தெரியவில்லை. அப்பொழுது காரியாலய நேரம் முடிந்து விடவே யாருடனும் பேசாமல் நேரே வீட்டுக்கு வந்து விட்டான்.

வீட்டுக்கு வந்த பிறகும் ராஜனால் கோபத்தை அடக்க முடியவில்லை. கோதுமை அல்வா உள்ளே போக ஆரம்பித்த பிறகுதான் அவன் கோபம் தணிந்தது. காரியாலயத்தில் அன்று மாலை நடந்தது, அதிகாரி அவனுடன் அவமரியாதையாகப் பேசியது, அவன் எதிர் வார்த்தை யாடியது, அவனை வேலையிலிருந்து நீக்கி விடுவதாக அவர் மிரட்டியது ஆகியவை எல்லாம் சரியா தவறா என்று சிந்திக்கும் தகுதி பெற்றான்.

"நான் செய்தது தவறுதான். இருந்தாலும் இப்படியா காட்டுமிராண்டியிடம் பேசுவதுபோல் பேச வேண்டும்! சூடு சொரணை யற்றவனா நான்! சரியானபடி பதில் கொடுத்து விட்டேன். நாளை எப்படியும் என் சீட்டைக் கிழித்து விடுவானே எமகாதகன்! பிறகு......!"

பெரிய கேள்விக் குறி அவன் முன்னால் பயங்கரமாக நின்றது. பிறகு புதிதாக வேலை தேடிக் கொள்வதென்றால் இந்தக் காலத்தில் இலேசான காரியமா! வயதும் ஆகிவிட்டது. மிகவும் மேலான படிப்புமில்லை. அருமையான உத்தியோகத்தை விட்டு, மறுபடியும் வேலை தேட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விடும் போலிருக்கிறதே! என்னதான் செய்வது! யோசித்து யோசித்து அவனுக்குச் சித்தப்பிரமை ஏற்பட்டு விடும் போலிருந்தது. இரண்டு கைகளாலும் தலையை அழுத்திப் பிடித்துக் கொண்டான்.

* * *

எட்டு மணி அடித்தவுடன் மாலதி அந்தப் பக்கமாய் வந்தாள். அவள் கணவன் வந்தபோது இருந்த கோபம், வருத்தம் மிகவும் குறைந்திருப்பதாகத் தோன்றியது. இப்பொழுது பேசினால் சற்று நிதானமான பதில் கிடைக்கும் என்று அவள் எதிர்பார்த்தாள்.

"வாருங்கள். சாப்பிடப் போகலாம்" என்று பரிவோடு கூப்பிட்டாள் மாலதி.

"மாலதி! எனக்கு இப்பொழுது சாப்பாடு வேண்டாம், நீ சாப்பிட்டுப் படுத்துக் கொள்."

"சாப்பிடக்கூடப் பிடிக்கவில்லையா உங்களுக்கு! அப்படி என்ன நடந்து விட்டது இன்றைக்கு!" என்று மெதுவாக விசாரித்தாள்.

"ஆமாம், மாலதி! நிறைய நடந்தது. நாளை முதல் வேறு உத்தியோகம் தேடிக் கொள்ளும் வரை எனக்கு லீவ்தான்."

"வேலை போய் விடுமா! அவ்வளவு பெரிய குற்றம் நீங்கள் என்ன செய்தீர்கள்! இதற்காகத்தானா இப்படித் தலையைத் தொங்க விட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கிறீர்கள்!"

ராஜன் அன்று மாலை காரியாலயத்தில் நடந்தது முழுவதும் ஒன்றுவிடாமல் அவளிடம் சொன்னான்.

விஷயங்களைத் தெரிந்து கொண்ட மாலதி உணர்ச்சியற்று உட்கார்ந்திருந்தாள்.

பிறகு, "என்ன இருந்தாலும் நீங்கள்மேல் உத்தியோகஸ்தரிடம் இவ்வளவு கடுமையான வார்த்தைகள் உபயோகித்திருக்க வேண்டியதில்லை. தணிந்து போயிருக்கலாம்" என்றாள் மாலதி.

"நீ என்ன சொல்கிறாய், மாலதி! அவமான உணர்ச்சி எனக்கில்லையா!"

"அவரோ அதிகாரி. கொஞ்சம் வார்த்தைகளை அள்ளி வீசி விட்டாலும் நீங்கள் இப்படிப் படபடப்பாகப் பேசியிருக்க வேண்டாம்."

யோசனையில் ஆழ்ந்தான் ராஜன். அவன் மௌனமாயிருப்பதைச் சாதகமாக உபயோகித்துக் கொண்டாள் மாலதி.

"வேலை போய்விடப் போகிறதே என்ற பயம் இப்பொழுது மட்டும் ஏன் உங்களைக் கலக்குகிறது! அதை அப்பொழுதே யோசித்திருக்க வேண்டும். இப்பொழுதும் பரவாயில்லை. நான் ஒன்று சொல்கிறேன், கேட்கிறீர்களா!"

"கேட்கத் தகுந்ததாயிருந்தால் கேட்கிறேன், மாலதி. வேலையைப் போக்கடித்துக் கொள்ள வேண்டுமென்று எனக்குமட்டும் ஆசையா! ஏதோ அவசரத்தில் ஆத்திரமாய் அவரை வாயில் வந்தபடி பேசித் தொலைத்து விட்டேன்."

"இப்பொழுது சொன்னீர்களே, அதை நாளைக்கு உங்கள் அதிகாரியிடம் சொல்லுங்கள். அவர் பச்சாத்தாபப்பட்டு ஒரு வேளை உங்களை மன்னித்தாலும் மன்னிப்பார்."

"எனக்கு இஷ்டமில்லாத வேலையைச் செய்யச் சொல்கிறாயே, மாலதி! அது எப்படி முடியும்!"

"வீண் பெருமையடைய நினைத்து வாழ்வைக் கெடுத்துக் கொள்ளாதீர்கள். நான் சொல்வதைச் சற்றுக் கேளுங்கள். யாரிடம் மன்னிப்புக் கேட்டுவிடப் போகிறீர்கள்! தவறு செய்தால் குழந்தை தாயிடம் மன்னிப்புக் கேட்பதில்லையா! மாணவன் உபாத்தியாயரிடம் மன்னிப்புக் கேட்பதில்லையா! அதே மாதிரிதானே இதுவும்!"

ராஜன் ஒன்றும் பேசாமல் அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்தான்.

"நான் சொல்வதை நம்புங்கள். ஆபீஸரும் மனித ஜன்மந்தானே! அவரும்தான் அளவுக்கு மீறிப் பேசிவிட்டதற்குப் பிறகு வருந்தியிருப்பார்."

வெகு நேரம் யோசனை செய்து விட்டு அடுத்த நாள் அதிகாரி ஸ்ரீ காந்தனிடம் போய் மன்னிப்புக் கேட்க ஒப்புக் கொண்டான் ராஜன்.

* * *

கல்யாணி ஏதோ பரீட்சைக்குப் போகிறவள் போல் மும்முரமாகப் படித்துக் கொண்டிருந்தாள். எட்டு மணி அடித்தவுடன்தான் அவளுக்கு இந்த உலக ஞாபகமே வந்தது. அவள் கணவன் சாப்பிட அரைமணி தாமதமாகி விட்டிருந்தது.

எங்கிருந்தாலும் ஏழரை மணிக்கெல்லாம் ஸ்ரீகாந்தன் கல்யாணியைத் தேடிக்கொண்டு வந்துவிடுவார். "சாப்பிடலாமா, கல்யாணி!" என்பார். அன்று அவளைத் தேடி வராததின் மர்மம் அவளுக்குப் புரியவேயில்லை.

ஸ்ரீகாந்தன் சாதாரண குடும்பத்தில் பிறந்தவர்தான். ஆனால் அவருடைய உயர்ந்த படிப்பும், நல்ல பழக்க வழக்கங்களும் இளமையிலேயே அவரை அதிகாரியாக்க உதவி புரிந்தன. சிறு வயதிலேயே அதிகாரியாகி விட்டாலும், பெரிய இடத்துப் பெண்களையெல்லாம் விட்டு விட்டு ஏழைப் பெண் கல்யாணியை மனைவியாக வரித்தார். நாகரிகத்தின் முன்னணியில் நிற்காவிட்டாலும் கல்யாணி உயர்ந்த பண்புடையவள். சுமாரான படிப்பும், அடக்க ஒடுக்கமான சுபாவங்களுமுடைய கல்யாணி குறிப்பறிந்து நடப்பதில் வல்லவள். அதிகாரியின் மனைவியானது குறித்து அவள் கர்வம் அடையவில்லை.

எட்டு மணியடித்தும் கணவன் வராததால் கல்யாணி அவரைத் தேடிக் கொண்டு போனாள்.

"சாப்பிட வருகிறீர்களா! நேரமாகி விட்டது" என்றாள் அவர் பக்கம் நெருங்கி.

"நேரமாகி விட்டதா! இதோ வருகிறேன்!" என்று எழுந்திருந்தார் ஸ்ரீகாந்தன்.

மறுபடியும் எதையோ நினைத்துக் கொண்டவர் போல், "உட்கார், கல்யாணி! அப்புறம் சாப்பிடப் போகலாம். உன்னோடு ஒரு முக்கியமான விஷயம் பேச வேண்டும்" என்றார்.

ஆபீஸ் விஷயத்தை எதுவுமே மனைவியிடம் பேசமாட்டார் ஸ்ரீகாந்தன். கல்யாணி அதைப் பற்றியெல்லாம் அறிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவலுடையவளுமல்ல. பக்கத்து நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு அவர் என்ன சொல்லப்போகிறாரோ என்று ஆவலுடன் எதிர்பார்த்தாள். ஆனால் அவர் ஒன்றும் சொல்லாமல் உட்கார்ந்திருப்பதைக் கண்டதும் கல்யாணி, "என்ன யோசிக்கிறீர்கள்! காரியாலயத்தில் ஏதாவது விசேஷமோ!" என்று கேட்டாள்.

"ஆமாம், கல்யாணி. நாளைக்கு என்னால் வேலையிலிருந்து நீக்கப்படப் போகும் ராஜனைப் பற்றி யோசனை செய்து கொண்டிருக்கிறேன்."

"யார் அந்த ராஜன்!"

"என்னுடைய காரியாலயத்தில் வேலை செய்யும் ஒரு டைப்பிஸ்ட்."

"வேலையிலிருந்து நிறுத்திவிடப் போகிறீர்களா! அப்படி அவன் என்ன தப்பு செய்தான்!"

"என்ன செய்தானா! என்னிடம் எதிர்த்துப் பேசினான். அது போதாதா!"

"உங்களிடம் எதிர்த்துப் பேசினானா! ஏன்!"

"விஷயத்தை முழுவதும் சொன்னால்தானே உனக்குப் புரியும், கல்யாணி! ராஜன் இன்று டைப் செய்திருந்த ஒரு கடிதத்தில் தப்பு செய்திருந்தான். அதைப் பற்றி அவனைக் கூப்பிட்டு நேரில் நான் விசாரிக்க ஆரம்பித்தேன். அப்பொழுது என்னிடம் தாறுமாறாகப் பேசியதுடன், 'உம்மாலானதை நீர் செய்யும்' என்று சவால் வேறு விட்டான். எனக்குக் கீழ் வேலை பார்க்கும் ஒரு டைப்பிஸ்ட், என்னிடம் அவமரியாதையாகப் பேசியது இது தான் முதல் தடவை. நாளை, முதல் வேலையாக மானேஜருடன் பேசி அவனுடைய சீட்டைக் கிழித்தால்தான் எனக்கு நிம்மதி ஏற்படும். மற்றவர்களும் அதனால் நல்லபாடம் கற்றுக் கொள்வார்கள்!" என்றார் ஸ்ரீகாந்தன்.

"பாவம், நீங்கள் ஒன்றுமே சொல்லவில்லையா! நன்றாய் யோசனை செய்து சொல்லுங்கள். அவனுக்குக் கோபம் வரும்படி நீங்கள் ஏதாவது கூறினீர்களா!" என்று கேட்டாள்.

ஸ்ரீகாந்தன் சற்று யோசித்தார். பிறகு தணிந்த குரலில், "ஆம் கல்யாணி. நான் அவனை 'நீ முட்டாள்' என்றேன். பிறகு கையிலிருந்த கடிதத்தைத் தூக்கி அவன் முகத்தில் வீசி எறிந்தேன்."

"நீங்கள் ஒரு பெரிய தவறு செய்து விட்டீர்கள். அவனும் மனிதன்தானே! நமக்கு இருப்பது போல் அவனுக்கும் மானம், ரோசம், மரியாதை

யெல்லாம் இருக்காதா! அவனுக்குக் கோபம் வரும்படி நீங்கள்தானே முதலில் பேசினீர்கள்! பாவம், வேலையிலிருந்து நீக்கப்பட்டால் அவன் எவ்வளவு அவதிப்பட நேருமோ!" என்றாள். அவள் குரலில் பச்சாத்தாபம் தொனித்தது.

கல்யாணியின் வார்த்தைகளுக்கு என்றுமே ஸ்ரீகாந்தன் உரிய மதிப்புக் கொடுக்கத் தவறியதில்லை. அவள் பேசுவதே அவருக்கு அப்பொழுது புதிராயிருந்தது. "கல்யாணி" என்றார் வியப்புடன்.

"உண்மையாய்ச் சொல்லுகிறேன். உங்களை எதிர்த்து வாதாடினானே தவிர, பிற்பாடு அதற்காக அவன் மிகவும் மனம் வருந்தி யிருப்பான். கையிலிருக்கும் அருமையான வேலையை விட்டு யாராவது போக விரும்புவார்களா! அகம்பாவத்தால் அவன் பேசவில்லை. அவமானத்தால்தான் பேசி யிருக்கிறான். நான் உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுகிறேன். அவனை மன்னித்து விடுங்கள்" என்றாள் கெஞ்சும் குரலில்.

"நிசமாகவா, கல்யாணி!"

"ஆம்! அவன் ஒரு ஏழை டைப்பிஸ்ட். அவனை நம்பி எத்தனை பேர் உயிர் வாழ்கிறார்களோ! நாளைக்கு அவன் வேலை போய்விட்டால் நடுத்தெருவில் நிற்கப் போகும் அவன் குடும்பத்தார் நம்மைச் சபிக்க மாட்டார்களா! நான் கேட்கும் இந்தச் சிறு உதவி செய்யுங்கள். ஒரு குடும்பத்தைக் காப்பாற்றின நிம்மதியாவது நமக்குக் கிடைக்கும்" என்று உணர்ச்சி வசப்பட்டவள் போல் பேசிக் கொண்டே போனாள் கல்யாணி.

ஸ்ரீகாந்தன் அவள் இரு கைகளையும் பிடித்துக் கொண்டு, "போதும் கல்யாணி, போதும். உள்ளத்தைத் தொடும் உன் உபதேசத்தால் என் அகம்பாவம் மறைந்து விட்டது. என்னை மனிதனாக்கி விட்டாய், கல்யாணி. நான் செய்த தவறுகள் எனக்குப் புரிந்து விட்டது. அந்தத் தன்மானி ராஜன் தவறாகவே நடந்து கொள்ளவில்லையென்று இப்பொழுதுதான் படுகிறது. கல்யாணி, நான் அவனை மன்னிப்பதிருக்கட்டும். நானே அவனிடம் மன்னிப்புக் கேட்கவும் தயாரா யிருக்கிறேன். மனப் பாரம் குறைந்து விட்டது. வா, சாப்பிடப் போகலாம்" என்று கூறிக் கொண்டே அவளைப் பின்தொடர்ந்தார் ஸ்ரீகாந்தன்.

*　　　*　　　*

அடுத்த நாள் காலையில் வழக்கம்போல் பத்து மணிக்குக் காரியாலயத்துக்கு வந்து சேர்ந்து விட்டான் ராஜன். என்றும்போல் கையெழுத்துப் போட்டுவிட்டுத் தன் 'மிஷின்' முன்னால் உட்கார்ந்து வேலை செய்ய ஆரம்பித்தான். ஸ்ரீகாந்தன் இன்னும் வரவில்லை. வந்தவுடன் நேரில் போய்த் தன் அவசர புத்திக்காக மன்னிப்புக் கேட்க வேண்டும் என்று காத்திருந்தான்.

மற்ற குமாஸ்தாக்கள் முந்தைய நாள் சமாசாரத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர்.

ஸ்ரீகாந்தன் தம் அறையில் நுழையும்போதே, "ராஜனை வரச் சொல்" என்று சேவகனிடம் சொல்லிக் கொண்டே போனார்.

"சார். ஐயா உங்களைக் கூப்பிடறாங்க."

"ராஜன் கதை இத்துடன் முடிந்தது" என்று ஏகோபித்த முடிவுக்கு வந்து விட்டார்கள் ராஜனின் சக குமாஸ்தாக்கள்.

தயங்காமல் ராஜ நடை நடந்து உள்ளே போனான் ராஜன்.

"குட்மார்னிங் சார், நானே வருவதா யிருந்தேன். நீங்கள் கூப்பிட்டனுப்பி விட்டீர்கள்."

'ராஜன் இன்னும் கோபமா யிருக்கிறானோ! ஒருவேளை தன் ராஜினாமாவைச் சமர்ப்பிக்கத்

தான் வந்திருக்கிறானோ! அதைத் தடுக்க வேண்டும்'' என்று எண்ணினார் ஸ்ரீகாந்தன்.

"மிஸ்டர் ராஜன்!'' என்றார் அவர்.

'நேற்று ஒரு மனிதனுடன் பேசுகிறோம் என்ற உணர்ச்சியே இல்லாமல் அவமானம் செய்த ஸ்ரீகாந்தனா இன்று பேசுகிறார்! ஏது! குணம் மாறி விட்டதா! அல்லது அணையப் போகும் விளக்கு பிரகாசமாய் எரியுமே! அந்த மாதிரி வீட்டுக்குப்போகச் சொல்லும் உத்தரவைக்கையில் கொடுக்கு முன் சற்று அன்பாய்ப் பேசிப் பார்க்கிறாரோ!' இவ்வாறு பல படியாகச் சிந்தனை செய்து கொண்டான் ராஜன்.

"சார், நான் நேற்று ஏதோ அவசரத்தில் ஆத்திரமாய்ப் பேசி விட்டேன்.''

'ஆஹா! கல்யாணி எவ்வளவு தீர்க்க தரிசன முள்ளவள்! அவசரமாய்ப் பேசி விட்டுப் பிற்பாடு வருந்தி யிருப்பான் என்று அவளால் எப்படிச் சொல்ல முடிந்தது! ஏழைகளின் பிரதிபிம்பமாகிய அவள் ஏழைகளின் மனத்தை எப்படி அறியாம லிருக்க முடியும்!' என்று எண்ணினார்.

"மிஸ்டர் ராஜன்! நான் அதை நேற்றே மறந்து விட்டேன்!'' என்றார் ஸ்ரீகாந்தன்

'மாலதி உண்மையே சொன்னாள். சற்று யோசித்துப் பார்த்தால், தான் செய்தது தவறு என்று உங்கள் அதிகாரி உணர்ந்து கொள்வார் என்றாளே! மாலதி, உனக்கு என்ன ஞானக்கண் இருக்கிறதா!' என்று யோசித்தான் ராஜன்.

"என்னை மன்னித்து விடுங்கள், சார்! நான் அவசரத்தில் தவறுதலாக நடந்து கொண்டு விட்டேன்'' என்றான் ராஜன்.

"மிஸ்டர் ராஜன். உன் மனத்தை மிகவும் புண் படுத்தி விட்டேன். அதிகாரி என்ற மமதையும் செருக்கும் என் கண்களைக் குருடாக்கி விட்டன. மன்னிப்புக் கோர வேண்டியவன் நான். நீயே மன்னிப்புக் கேட்டு விட்டாய். நேற்று நடந்த சம்பவங்களுக்கு நான் வருந்துகிறேன். நீ போக லாம்'' என்றார் ஸ்ரீகாந்தன்.

ஸ்ரீகாந்தன் மனத்திலும் ராஜன் மனத்திலும் என்றுமில்லாத அபூர்வ நிம்மதி ஏற்பட்டிருந்தது.

# தமிழ்த்தாயின் புதல்வர்

தமிழ்த் தாயின் அரும் பெரும் புதல்வர். நாட்டுப் பற்றும், மொழிப் பற்றும் உருக் கொண்டவர். உரை நடைத் தமிழின் உன்னத சிகரத்தை யடைந்தவர். கதைக் கலையில் வாணியின் பூர்ண கடாக்ஷம் பெற்றவர். பிறர் நலத்தையே பேணி வளர்க்கும் பெருந் தியாகி. இப் பெரும் பண்புகள் படைத்த ஸ்ரீ கல்கி அவர்கள் நட்புக்குரிய அருங் குணங்களிலும் மேம்பட்டவர் என்பது அவருடன் நெருங்கிப் பழகிய பலரும் அறிவர்.

ஸ்ரீ கல்கி அவர்களுக்கு எங்கள் சரஸ்வதி மஹாலில் விசேஷமான பற்றுதல் உண்டு. நாங்கள் எங்கள் நூல் நிலையத்துக்கு முதலில் பொருளுதவிக்காக நமது சென்னை அரசாங்கத்தாரிடம் அணுகிய போது அப்போதைய பிரதமர் ஸ்ரீ ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் அவர்கள் ஸ்ரீ கல்கி அவர்களைத் தஞ்சைக்குப் போய் இந்த நூல் நிலையத்தின் தேவைகளைப் பற்றி ஓர் அறிக்கை சமர்ப்பிக்கும் படி அனுப்பி யிருந்தார். இது 1948–49ம் வருஷங்களில் நடந்தது.

ஸ்ரீ கல்கி அவர்கள் ஸ்ரீசதாசிவம் அவர்களுடன் அந்தச் சந்தர்ப்பத்தில் வந்திருந்தபோது நாங்கள் தஞ்சைச் சரித்திரத்தைப் பற்றியும், ஸரஸ்வதி மஹாலைப் பற்றியும் பல விஷயங்கள் தெரிவித்தோம். அவர் இங்கு தங்கிய காலம் மிகக் குறுகியதாக இருந்ததால் அதற்குள் அவர் நாங்கள் தெரிவித்துக் கொண்டதில் எதைத்தான் நினைவில் வைத்துக் கவனிக்கப் போகிறார் என்ற அச்சத் துடனேயே இருந்தோம். அவர் சென்னைக்குச் சென்றவுடன் சென்னைப் பிரதமருக்கு ஒரு யாதாஸ்து சமர்ப்பித்திருந்தார். அதில் கல்கி யவர்கள் வரைந்திருந்த விவரங்கள் எங்களுக்கு வியப்பை உண்டு பண்ணின. அது மட்டுமல்ல, பிறகு 'கல்கி' பத்திரிகையில் இரண்டு வாரங்கள் தொடர்ந்து ஸரஸ்வதி மஹாலைப் பற்றிக் கட்டுரை எழுதி யிருந்தார். அதில் நாங்கள் அவரிடம் பேசிய ஒவ்வொரு விஷயத்தையும் பற்றிப் பல கோணங்களில் ஆராய்ந்து எழுதி யிருந்ததைக் கண்டு எங்களுக்கு வியப்பு இன்னும் அதிகமாயிற்று.

"பொன்னியின் செல்வ''னில் சோழ சரித்திரத்தின் சூழ்நிலையை அமைக்க அவர் பெரும் பிரயாசை எடுத்துக் கொண்டு தஞ்சைக்குப் பலமுறை வந்து சரித்திர சம்பந்தமான பல இடங்களைப் பார்வையிட்டபோது என்னையும் இட்டுச் சென்றார். அது போதாதென எங்களிடமிருந்து பல விஷயங்களைப் பற்றிய குறிப்புகள் எழுதியனுப்பச் செய்தார். அவை ஒவ்வொன்றையும் கதையில் ஏற்ற இடத்தில் அமைத்து விட்டார். ஆங்கில உரை நடை வல்லவராகிய மெக்காலேயைப் பற்றி 'ஓர் வரி வர்ணனை எழுதுவதற்குப் பல காதம் பிரயாணம் செய்வார்' என்று சொல்வதுண்டு. கல்கியவர்கள் பொன்னியின் செல்வனில் பல அத்தியாயங்கள் இப்படிப் பிரயாணம் செய்து நேரில் பல இடங்களைப் பார்த்து வரைந்துள்ளார் என்பது எனக்கு நன்கு தெரியும். முக்கியமாக அவர் கோடிக்கரைக்குப் பிரயாணம் சென்ற போது நானும் அவரும் பார்த்த காட்சிகள் எனக்கு ஞாபகத்துக்கு வருகின்றன. இந்தப்பிரயாணத்தைப் பற்றிச் சில வருஷங்களுக்கு முன் கல்கியவர்களே தீபாவளி மலரில் வர்ணித்திருக்கிறார். அங்கு அவர் கண்ட கலங்கரை விளக்கம், சதுப்பு நிலங்கள், மான் கூட்டங்கள், சதுப்பு நிலங்களில் உண்டாகும் கொள்ளிவாய்த் தோற்றங்கள், பண்டைக் காலங்களில் கையாண்டு வந்த பழக் கங்கள், இருக்கைவாள் போன்ற ஆயுதங்கள் இவைகளைத் தம்முடைய கதையில் அழகு பெற அமைத்திருப்பது யாவரும் ரஸமாக அனுபவிக்கக் கூடிய பகுதிகள். இதைப் போலவே பழையாறை முதலிய சோழ சரித்திர சம்பந்தமான இடங்களைப் பார்த்துப் பழைய பெயர்கள், பழைய கட்டிடங்கள், இடிந்த ஆலயங்கள், புதுப்பெயர் இடப்பட்ட பழைய ஊர்கள் இவைகளைப் பற்றி ஆழ்ந்த ஆராய்ச்சி செய்ததுடன் போகும்போது வழியில் ஆறுகள், பாலங்கள் முதலியவைகளைப் பற்றியும் குறிப்பெடுத்துச் சென்றார்.

அவருடன் நாங்கள் அனுபவித்த காட்சிகள் அனைத்தையும் என்றும் மறக்காவண்ணம் அவரது உயரிய கதையில் சித்திரித்து விட்டார் கல்கி. தமிழ் நாட்டுச் சரித்திரச் சின்னங்கள் யாவையும் அவரது ஞாபகச் சின்னங்களாக ஆகி, என்றும் அவரது பிரிவை மறக்க முடியாமல் ஞாபகப் படுத்தக் கூடியவைகளாக இருக்கின்றன.

தஞ்சாவூர் — எஸ். கோபாலன்

13—12—54 — காரியதரிசி, சரஸ்வதி மஹால் நூல் நிலையம்

FS. 462



முறையான
உடைகள்
அல்லது



சாதாரண
உடைகள்

எதுவாயிருப்பினும்

# டாடா 501 ஸ்பெஷல்

## அவைகளை
## சிறப்பாக
## சலவை செய்கிறது




A TATA PRODUCT

இந்திய மூலதனத்தைக்கொண்டு,
இந்திய நிர்வாகத்தில், இந்தியா
விலேயே தயாரிக்கப்படுவது

டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்

# அற்புதம், அவள் கன்னியே!

**எஸ். வி. எஸ்.**

ஆதி சிவன் பெற்றுவிட்ட தமிழ்த் தாயின் அருமைப் புதல்வர் மறைந்து விட்டார்.

"என்றுமுள தென் தமிழ் இயம்பி இசை கொண்டான்" என்று அகத்திய முனிவரைப் பற்றிப் பாடினர் கம்பர். இன்றைய யுகத்து அகத்திய முனிவராகத் திகழ்ந்த கல்கி அவர்களும், என்றுமுள தென் தமிழை இயம்பி அந்த இசையுடன் இயைந்து விட்டார்கள்.

"அற்புதம், அவள் இன்னும் கன்னியே!" என்று நாமக்கல் கவிஞர் பாடிய அடிகளில் பொங்கி நிற்கும் உண்மையை வியப்பவர் கல்கி. தெய்வப் புலவர் வள்ளுவர் கையாண்ட 'முகம்' என்ற சொல் இன்னும் வழக்கிலிருப்பதையும் வியந்து, இப்படி எத்தனையோ தமிழ்ப் பண்புகள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழில் இருந்து வருவதை வியந்து வியந்து, அவள் கன்னித் தன்மையைப் புகழ்ந்து புகழ்ந்து சலிக்காத கல்கி அவர்கள் இன்று புகழுடலில் புகுந்து விட்டார்கள்.

சுதந்திரக் கனலை மூட்டி, சோம்பிக் கிடந்த தமிழகத்தை, உறங்கிக் கிடந்த தமிழகத்தைத் தட்டி எழுப்பி, தேச விடுதலைப் போரில் ஆயிரக் கணக்கான பேரையும், ஏன் கல்கி அவர்களையுமே குதிக்கச் செய்தவை பாரதியாரின் தேசிய ஆவேசப் பாடல்கள். அந்தப் பாரதியாருக்குத் தமது நன்றியையும், தமிழகம் நன்றிமறவாத தமிழகம் என்பதையும் எடுத்துக் காட்டிய 'கல்கி' அவர்கள் பாரதியார் புகுந்த உலகத்துக்குச் சென்று ஒன்றி விட்டார்கள்!

மேலோரான வ. உ. சி பாரத சுதந்திரத்துக் காகப் பட்ட இன்னல் கொஞ்சமல்ல. செக்கிழுத்த தியாகியல்லவா! அவருக்கும் தமிழகத்தின் நன்றியைத் தூத்துக்குடியில் வ. உ. சி. கல்லூரியை எழுப்பி உலகத்துக்குக் காட்டிய 'கல்கி' அவர்கள் இன்று அந்த உத்தமத் தியாகியுடன் உறவாடச் சென்று விட்டார்கள்!

சங்கீத உலகில் அவர் செய்துள்ள தொண்டு அபாரமானது. 'கல்கி' அவர்கள் 'கர்நாடகம்' என்ற புனை பெயரில் ஒரு பாடகரின் கல்யாணி, காம்போதி ராகக் கீர்த்தனங்களை வர்ணித்து விட்டால், சங்கீத ரஸிகர்களும், சங்கீதம் என்றால் வீசை எப்படி என்று கேட்பவர்களும் படித்து மயங்கி, அந்த ராகத்தை மீண்டும் கேட்பது போல உணர்ச்சி பெறுவார்கள். கேட்டே அனுபவிக்கக் கூடியது சங்கீதம் என்றிருந்த நிலையைப் பொய்யாக்கிப் படித்தும் சங்கீதத்தை அனுபவிக்கலாம் என்று காட்டியவர் கர்நாடகம் அவர்கள்!

அவர் இப்போது அந்த இசை ஒலிகளுடன் ஒன்றி விட்டார். காம்போதி ராகத்துடனும், பைரவி ராகத்துடனும், மற்ற மற்ற ராகங்களுடனும் இரண்டறக் கலந்து விட்டார்!

ரஸிகமணி டி. கே. சி. அவர்கள் அள்ளி அள்ளித் தந்த தமிழ்க் கவிதை இன்பத்தை, தாம் பருகி அனுபவித்ததோடல்லாமல் தமது அருமைத் தலைவர் ராஜாஜியையும் பருக வைத்ததோடு நிற்காமல், தமிழ்கூறும் நல்லுலகமெல்லாம் பருக வைத்த பண்பாளர், 'கல்கி'. 'கல்கி' பத்திரிகை இல்லையேல் 'கம்பர் தரும் காட்சி' ஏது! தமிழ்க் களஞ்சியம், மற்றும் ரஸிகமணியின் இலக்கிய விமர்சனக் கட்டுரைகள்தான் ஏது! இப்படியெல்லாம், 'தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற தமிழ் இலட்சியத்தோடு வாழ்ந்த 'கல்கி' அவர்கள் இன்று அந்தப் பழம் பெரும் இலட்சியத்தோடு இணைந்து விட்டார்கள்!

தமிழகச் சரித்திரத்திலே மகோன்னத காலத்தையும், மகேந்திர பல்லவர், நரசிம்ம பல்லவர், ராஜராஜ சோழர் போன்ற பேரரசர்களின் வாழ்க்கைப் பகுதிகளையும் தமிழர்கள் என்றும் மறக்காத வண்ணம் சித்திரித்த கலைஞர் கல்கி, வானுலகிலே அந்தப் பேரரசர்களுக்குத் தமது இதயம் கலந்த மரியாதை செலுத்தச் சென்றுவிட்டார்.

**அறத்திற்கே அன்பு சார்பென்ப அறியார்**
**மறத்திற்கும் அஃதே துணை**

என்ற அரிய குறளுக்கு மூத்தையன் என்ற ஓர் அற்புத கதாபாத்திரத்தைச் சிருஷ்டித்த கலைஞர் அந்தப் பாத்திரங்களுடன் கற்பனை யுலகில் உறவாடக் கலந்து விட்டார்!

இப்படி எண்ணிக் கொண்டு போனால், கல்கி அவர்களின் தொண்டுகளுக்கு ஓர் முடிவே கிடையாது. அவர் தொண்டின் சிறப்பும் பரப்பும் ஓர் எல்லைக்கு அடங்காதவை!

ஆயினும் ஓர் ஆறுதல்.

அகத்தியர் காலத்துக்கு முன்பிருந்தே வாழ்ந்து வரும் தமிழைத்தான் கல்கி அவர்கள் கையாண்டார்கள். அது என்றும் நிலைத்து நிற்கும்.

கன்னித் தமிழ் அன்னை, என்றும் கன்னியாகவே இருப்பாள்!

ஆயிரம் ஆயிரம் காலத்துக்கு முன்பிருந்து தமிழகத்தில் நிலவிவரும் கர்நாடக சங்கீத தேவதை என்றென்றும் நிலைத்து நிற்பாள்!

கற்பனை உலகம் மனம் தோன்றிய நாளிலிருந்து இருந்து வருகிறது. அதனால் அதைரியப்படுவதற்கு ஒன்றுமில்லை!

எல்லாவற்றுக்கும் மேலாகக் கல்கியின் புகழுடல் என்றென்றும் நிலை நின்று நமக்குத் தக்க வழிகாட்டியாக இருக்கும். அவர் வகுத்த வழியைப் பின்பற்றிச் செல்லத் துணையிருக்கும்.

யுத்தகாலத்தில், பத்திரிகைக் கட்டுப்பாடுகள் அதிகமிருந்த சிரமமான காலத்தில் 'கல்கி' ஆரம்பிக்கப்பட்டது. ஆரம்பத்திலிருந்து பல தடவை அன்னிய சர்க்காரிடமிருந்து பல பெரிய சங்கடங்கள், பேராபத்துகள் நேரப் பார்த்தன. அவைகளையெல்லாம் சிரித்துக் கொண்டே, "இடுக்கண் வருங்கால் நகுக" என்ற வள்ளுவர் பெருமானின் குறிக்கோளை வாழ்க்கையில் அனுஷ்டித்து அத் துயரத்தை யெல்லாம் வெளியில் காட்டிக் கொள்ளாமல், நெஞ்சந்தளரா உறுதியுடன் பத்திரிகையை நடத்திய பெருந்தகையாளர் கல்கி.

அத்தகைய கல்கி அவர்களின் அமரத்துவம் நம்மை அளவுகடந்த துயரத்தில் ஆழ்த்தி விட்ட தாயினும், 'கல்கி' அவர்களின் இம் மாபெரும் சோகத்தைக் கல்கி நேயர்களுடன் தாங்கி, அவர் வகுத்த இலக்கிய நெறியைப் பின்பற்றுவோமாக!

'கல்கி' நாமம் வாழ்க!

போட்டிக் கதை

# கணவனும் மனைவியும்

☆ புஷ்யன் ☆



தேவகியின் கண்கள் எதிரே சுவரில் மாட்டியிருந்த கடிகாரத்தையே நோக்கிக் கொண்டிருந்தன. கடிகாரத்தின் முட்கள் நகர நகர அதனுடன் அவளுடைய கண்களும் நகர்ந்து ஒவ்வொரு நிமிடத்தையும் ஒவ்வொரு மணியாகக் கணக்குப் பண்ணிக் கொண்டிருந்தன.

"காமு," என்று மெதுவாகக் குரல் கொடுத்தாள் தேவகி.

"கூப்பிட்டேளா, மாமி!" என்று ஓடி வந்தாள், பன்னிரண்டு வயதுப் பெண் ஒருத்தி அடுத்த கட்டிலிலிருந்து.

"கொஞ்சம் விளக்கைப் போடுகிறாயா! ஒரு டம்ளர் வென்னீரும் கொண்டு வா" என்றாள் தேவகி.

"இதோ கொண்டு வருகிறேன்" என்று கூறி ஓடிப் போய் ஒரு டம்ளரில் வென்னீரைக் கொண்டு வந்து கொடுத்து விட்டு விளக்கின் ஸ்விச்சைப் போட்டாள். இருள் கவிந்து கொண்டிருந்த அறையில் பளிச்சென்று ஒளி வீசியது.

"மணி ஏழடிக்கப் போகிறது. இன்னும் மாமா வரவில்லையே...!" என்று கூறினாள் காமு.

"உம், அவர் இவ்வளவு சீக்கிரம் வந்து விடுகிறாரா!" என்று கூறிவிட்டுத் தேவகி பெருமூச்சு ஒன்றை வெளி விட்டாள்.

"மாமி, இன்று 'முல்லைக் கொடி'யிலே வந்த தொடர் கதையைப் படிக்கட்டுமா! கேட்கிறீர்களா! போய்க் கொண்டு வருகிறேன்" என்று கூறி உள்ளே ஓடிப் போனாள்.

'உம்......இப்போதெல்லாம் அவர் வீட்டுக்குச் சீக்கிரம் வருவதே யில்லை. பத்து மணிக்கும் பதினொரு மணிக்கும் வருகிறார். நான் ஒருத்தி இருக்கிறேனா, செத்தேனா என்று கூடக் கவலை யில்லை... வந்ததும் 'தேவகி' என்று கூப்பிட்டுக் கொண்டு தான் வருகிறார். உடம்பு எப்படி யிருக்கிறதென்று அக்கறை யுள்ளவர் போல்தான் விசாரிக்கிறார். ஆனால் எல்லாம் வெறும் வேஷம்......' தேவகி சிந்தனையில் லயித்திருந்தாள்.

"படிக்கிறேன், கேட்கிறேளா மாமி!" என்றாள். காமு, பக்கத்தில் இருந்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு அன்று வெளி வந்த அந்த வாரத்து 'முல்லைக் கொடி'யைப் பிரித்தவாறே.

"உம்" என்றாள் தேவகி, தன் பலத்த சிந்தனையிலிருந்து விடுபட்டு.

காமு படிக்க ஆரம்பித்தாள்: "ரயிலில் ஜானகியை ஏற்றி ஊருக்கு அனுப்பி விட்டு வந்த ராஜாராமனின் மனத்தில் பலவித உணர்ச்சிகள் எழும்பின. தான் செய்தது தவறு, சரியா என்றே நிர்ணயிக்க முடியாமல் திணறினான். ஆனாலும் ஜானகி கூறிய வார்த்தைகளைத் திரும்ப ஞாபகத்துக்குக் கொண்டு வந்து பார்த்தபோது தான் செய்தது சரிதான் என்ற முடிவுக்கு வந்தான்...."

தேவகியின் கவனம் காவலில் செல்லவில்லை. வேறு எங்கெல்லாமோ சென்றது. 'வெறும் மருந்தை மட்டும் வாங்கிக் கொடுத்து என்ன பிரயோசனம்! அத்துடன் தன் கடமை முடிந்து விட்டதாக எண்ணிக் கொண்டிருக்கிறார். அவர் பாட்டுக்கு உல்லாசமாகத் திரிந்து விட்டு மெதுவாக வீடு வருகிறார். ஆமாம்; இனி அவருக்கு என்னிடம் என்ன இருக்கிறது! நான் அவருக்கு எந்தவிதமான சுகத்தைக் கொடுக்க முடியும்! நான் இன்றோ நாளையோ இல்லை, கொஞ்ச நாட்களிலோ இறந்து போய்விடப் போகிறேன். அப்புறம் அவர் வேறொரு பெண்ணை மணந்து கொண்டு ஹாய்யாக இருப்பார்......

'ஆமாம், நான் இனி அவருக்கு வேண்டாத பண்டமாகி விட்டேன். உயிருடன் இருக்கும் போதே என்னை அலட்சியம் செய்பவருக்கு நான் இறந்தபின் என் ஞாபகம் ஏன் வருகிறது!

'கல்யாணமான புதிதில் என்னவெல்லாம் கூறியிருக்கிறார்! ஆபீஸில்கூட என் பெயரையே ஜபித்துக் கொண்டிருப்பதாகக் கூறினாரே! சாயங்கிரம் ஐந்தடித்ததும் வீட்டுக்கு வந்து விடுவார். நான் தரும் காப்பியை அமிருதபானம் என்று

கூறிக் குடிப்பார். பிறகு எங்கேயாவது வெளியில் உலவப் போய் வருவோம். அதோ அந்த மலையடி வாரம் வரை போய் வருவோம். அங்கே ஒரு பாறைமீது உட்கார்ந்து ஒருவர் கையை ஒருவர் பற்றிக் கொண்டு எவ்விதப் பேச்சுமின்றி மௌனமாய் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருப்போம். அவ்வப்போது அவர் என்னைப் பார்த்துப் புன்னகை புரிவார். "தேவகி, இதைப் போல் இன்பத்தை நான் இதுவரை என்றுமே உணர்ந்ததில்லை. இப்படியே நேரம் போவது தெரியாமல் ஆயுள் முழுதும் கூட உட்கார்ந்து விடலாம் போல் இருக்கிறது. நீ என்னை எப்படி மயக்கி விட்டாய்! முன்பெல்லாம் நான் இப்படியா இருந்தேன்! என் சகாக்களுடன் கொட்டமடித்துக் கொண்டு தினமும் இரவு பத்து மணி பதினொரு மணி என்றுதான் வீட்டுக்கு வருவேன். பாவம், அம்மா எனக்காகச் சாப்பிடாமல் உட்கார்ந்து எதிர்பார்த்துக் கொண்டிருப்பாள். ஒவ்வொரு நாள் அப்படியே வெறுந் தரையில் புடவைத் தலைப்பை விரித்துப் போட்டுக் கொண்டு அயர்ந்து தூங்கி விடுவாள். என் அப்பா குதியாய்க் குதிப்பார். 'வேலைக்கு வந்து சாப்பிட்டு விட்டு எங்காவது தொலைவதுதானே. நடுராத்திரி வரை என்ன ஊர் அரட்டை!' என்பார். ஆனால் அவைகளையெல்லாம் லட்சியம் செய்யாமல் என் இஷ்டப்படிதான் வருவேன். ஆனால் இன்று மணிஐந்து அடித்ததோ இல்லையோ, பறந்தல்லவா வீட்டைத் தேடி வருகிறேன்! ஆபீஸில் கடிகாரத்தையல்லவா எப்போதும் பார்த்துக் கொண்டிருக்கிறேன்!" என்பார்.

நானும், "நீங்கள் மட்டும் என்ன! நான் என் அப்பா, அம்மா எல்லோரையும் விட்டுப் பிரிந்து இங்கு வந்து எப்போதும் உங்கள் நினைவாகவே, நீங்கள் ஆபீஸிலிருந்து வருவதையே எதிர்பார்த்துக் கொண்டு இருக்கும் படியல்லவா செய்து விட்டீர்கள்! இன்றுகூட அம்மாவிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. 'இரண்டு வரி க்ஷேம சமாசாரம் எழுதிப் போடக் கூடவா நேரமில்லை!' என்று கேட்டெழுதி யிருக்கிறாள்" என்பேன்.

இப்படி ஏதேதோ. ஒருவர்மேல் ஒருவருக்கு உள்ள அன்பைப் பற்றிப் பேசிக் கொண்டிருப்போம். அப்போதெல்லாம் வாழ்க்கை எவ்வளவு வேகமாக ஓடியது! அதையெல்லாம் இப்போது நினைத்துப் பார்த்தால்......!

"மாமி, பார்த்தீர்களா! கடைசியில் திடுதிப் பென்று கதை நிறுத்தப்பட்டிருக்கிறது. அடுத்த வாரம் வரையில் காத்திருக்கவேணும். செக்லேனை யார் திருடி யிருப்பான்னு நினைக்கிறீர்கள், மாமி... எனக்கென்னவோ விஜயா மேல்தான் சந்தேகமா யிருக்கிறது..." என்று கூறிக் கொண்டே போனாள் காமு.

"உம்...!" என்றாள் தேவகி, 'அவள் என்ன சொல்கிறாள் என்று புரியாமல்.

"என்ன மாமி, நீங்கள் தொடர் கதையைக் கவனமாகக் கேட்கவே யில்லையா என்ன!" என்று ஏமாற்றத்துடன் கேட்டாள் காமு.

"ஏதோ யோசனையில் ஆழ்ந்து விட்டேன், காமு...சரி...அந்த அலமாரியைத் திறந்து மருந்து பாட்டிலையும், மாத்திரையையும் கொஞ்சம் எடுக்கிறாயா! மருந்து சாப்பிட நாழியாகி விட்டது" என்றாள் தேவகி.

காமு மருந்து பாட்டிலைக் கொண்டு வந்து கொடுத்து விட்டு, "மாமி, அம்மா சாப்பிடக் கூப்பிடுகிறாள். நான் போய் விட்டு வரட்டுமா!" என்று கேட்டாள்.

"உம், போ அம்மா" என்று கூறினாள் தேவகி. 'பாவம், அந்தப் பெண்ணுக்குத்தான் என் மேல் எவ்வளவு ஆசை! சதா மாமி மாமி என்று சுற்றிக் கொண்டிருக்கிறாள். இவளுக்கு இருக்கும் அன்பு கூட அவருக்கு இல்லையே! முதலில் கூறிய அன்பு மொழிகளெல்லாம் பொய்யாகி விட்டனவே' என்று எண்ணினாள்.

மணி எட்டு, ஒன்பது என்று ஆகிக் கொண்டிருந்தது. இன்னும் அவர் வரவில்லையே என்று ஏங்கினாள். அப்படியே மேலும் ஏதேதோ யோசனையில் ஆழ்ந்து கொண்டே நித்திரையில் ஆழ்ந்து போய் விட்டாள்.

இரவு பத்தரை மணிக்கு நடராஜன் வந்தான். நேரே கட்டில் அருகில் சென்று தேவகியின் உடம்பைத் தொட்டுப் பார்த்தான். அவனுடைய ஸ்பரிசத்தினால் விழித்துக் கொண்ட தேவகி நடராஜனைப் பார்த்தாள்.

"தேவகி, உனக்கு உடம்பு எப்படி யிருக்கிறது!" என்று கேட்டான்.

"ஆமாம், எப்படி யிருக்கிறது! ரொம்ப அக்கறையுடன் விசாரிக்கிறீர்களாக்கும். என் உடம்பு எப்படி இருந்தால் உங்களுக்கு என்ன! நான் இனி உங்களுக்கு வேண்டியதில்லை. உபயோகமற்றவளாகி விட்டேன்" என்று படபடப்பாகப் பேசினாள்.

"தேவகி, ஏன் இவ்விதம் உன் கடும் வார்த்தைகளால் என் மனத்தைப் புண்படுத்துகிறாய்! சதா உன் நினைவாகவே இருக்கும் என் மனம் உனக்கு என்ன தெரியும்! எப்போது உன்னைப் பார்ப்பேன், உன் உடம்பு எப்படி யிருக்கிறதோ என்று கவலையே உருவாக இருக்கும் என்னை இவ்விதம் சொல்கிறாயே, நியாயமா! உன்னை விட்டால் எனக்கு வேறு யார் ஆதரவு!" என்றான் நடராஜன். மிகவும் மன வருத்தத்துடன் தேவகியின் சொல்லம்புகள் அவனுடைய உள்ளத்தைத் துளைத்தன.

தேவகி அவனுடைய வார்த்தைகளை நம்பவில்லை. "என் நினைவாகவே இருந்தால் இப்படித்தான் நடு ராத்திரியில் வீட்டுக்கு வருவீர்களாக்கும்! நான் இருப்பது தொல்லையாய் இருக்கிறது. நான் எப்போது தொலைவேன் என்று காத்துக் கொண்டிருக்கிறீர்கள்..."

"வேலையிருக்கிறதனால் சீக்கிரம் வர முடியவில்லை என்று முன்பே கூறியிருக்கிறேனே, தேவகி. முள்ளின் மேல் உட்கார்ந்திருப்பதுபோல் அல்லவா வேலை செய்கிறேன்! இன்னொருதரம் அம்மாதிரி சொல்லாதே, தேவகி. உன்னை இழந்து விட்டால் அப்புறம் இவ்வுலகில் எனக்கு என்ன இருக்கிறது! நான் செய்யும் காரியம் ஒவ்வொன்றும் உன் சௌக்கியத்துக்காகவும் அதன் மூலம் எனக்கேற்படும் சந்தோஷத்துக்காகவும்தான்."

"ஆமாம், இத்தனை நாட்கள் இல்லாத வேலை இப்போதுதான் வந்து விட்டதாக்கும்" என்று தேவகி மேலும் குற்றமாகக் கேட்டாள்.

"நான் இப்போது சொன்னால் உனக்குப் புரியாது, தேவகி. நீ இருக்கும் நிலையில் எதுவுமே குற்றமாகத்தான் படும். போகப் போக அறிந்து கொள்வாய். பணத்தைப் பணம் என்று பாராது உனக்கு உயர்ந்த வைத்தியத்துக்கு ஏற்பாடு செய்து வருகிறேன். அது உன் மேல் அன்பில்லாமலா!" என்று மேலும் அவளுக்குச் சமாதானம் கூறினான் நடராஜன்.

தேவகிக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. மௌனமாக இருந்தாள். இருந்தாலும் அவளுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. கண்களை மெதுவாக மூடிக் கொண்டாள்.

ஒரு நாளா, இரண்டு நாட்களா! அவள் உடல் நலமின்றிப் படுத்து விளையாட்டுப்போல் நான்கு மாதங்களுக்குமேல் ஆகிவிட்டன. அவளை உடல் நோய் பிடித்து வாட்டுவதை விட மன நோய்தான் உருக்குலைத்து விட்டது. அவளுக்குக் காச நோய் பிடித்து விட்டது. இனி அவள் தேறுவது ஏது!

'நான் இறக்க வேண்டும் என்று அவர் விரும்புகிறார். மேலுக்காக அவர் மருந்தையும், பாலையும், பழத்தையும் வாங்கிக் கொடுக்கிறார்...நான் ஏன் இனி உயிருடன் இருக்க வேண்டும்! இந்த மருந்தை யெல்லாம் ஏன் சாப்பிட வேண்டும்! மருந்தைச் சாப்பிடாமலிருந்தால் சீக்கிரம் இறந்து விடலாமல்லவா! அவர் சந்தோஷமாக அப்புறம் வேறொருத்தியுடன் வாழ்வார். வாழட்டும். அவர் இஷ்டப்படியே ஆகட்டும். இனி, நான் மருந்தையும் எதையும் சாப்பிடுவதில்லை' என்று தீர்மானித்துக் கொண்டாள் ஒரு நாள். அன்று முதல் மருந்து சாப்பிடுவதை நிறுத்தி விட்டாள். காமுவுக்குத் தெரியாமல் அதைக் கீழே கொட்டி விடுவாள். பால், பழம், முதலியவை பிடிக்கவில்லை என்று கூறி அடிக்கடி சாப்பிடாமல் இருக்க ஆரம்பித்தாள்.

நாளுக்கு நாள் அவளுடைய உடல் க்ஷீண நிலையை யடைந்து வந்தது. நடராஜனை அவள் மனத்திற்குள்ளேயே எண்ணிக் குமுறிக் கொண்டு படுத்துக் கிடந்தாள். இரவெல்லாம் தூக்கம் பிடிக்காமல் புரண்டாள். உடல் நிலையும், மன நிலையும் அவளை உருக்குலைத்து வந்தன.

* * *

அன்று காமு வந்து, "மாமி இன்று மாமாவை சேட் கடையில் பார்த்தேன். ஏதோ கணக்கு எழுதிக் கொண்டிருந்தார்" என்றாள்.

அதைக் கேட்டதும் தேவகிக்கு ஒன்றும் புரியவில்லை. "என்ன, கணக்கெழுதிக் கொண்டிருக்கிறாரா!" என்று கேட்டாள்.

"ஆமாம் மாமி. நான் அவரைப் பார்த்ததை உங்களிடம் சொல்ல வேண்டாம் என்று சொன்னார். நான் உங்களிடம் சொன்னதாகச் சொல்லி விடாதீர்கள். அப்புறம் மாமா கோபித்துக் கொள்வார்" என்றாள் காமு.

"கடையில் கணக்கெழுதுகிறாரா! ஏன்! வேலை போய் விட்டதா! ஒன்றும் புரியவில்லையே!" என்று நினைத்துக் கலங்கினாள் தேவகி.

அன்று இரவு வேலை முடித்துக் கொண்டு வந்த நடராஜனைப் பார்த்து, "கடையில் வேலை பார்க்கிறீர்களாமே, ஏன்! உங்கள் வேலை போய் விட்டதா!" என்று கேட்டாள் தேவகி.

"இன்னும் நீ தூங்கவில்லையா என்ன! இத்தனை நேரம் தூங்காமல் இருந்தால் உடம்புக்கு ஆகுமா!" என்று கேட்டான் நடராஜன்.

"நான் கேட்டதற்குப் பதில் சொல்லவில்லையே! சொல்லுங்கள்" என்று வற்புறுத்திக் கேட்டாள்.

"உனக்கு மன வருத்தம் உண்டாகக் கூடாதென்றுதான் சொல்லவில்லை, தேவகி. எனக்கு வேலை ஒன்றும் போகவில்லை. ஆனால் உன் உடல் நலத்துக்கு உயர்ந்த மருந்துகளும், பாலும், பழமும் நிறையக் கொடுத்தால்தான் உடல் தேறும் என்று கூறினார் டாக்டர். 'இல்லாவிட்டால்......' என்று சந்தேகமாகக் கூறினார். என் வரும்படியில் உனக்கு அவ்வளவு உயர்ந்த உதவிகளை எப்படிச் செய்ய முடியும்! அதனால் என்ன செய்வதென்று தெரியாமல் தத்தளித்தேன். இவ்விதம் நான் தவித்துக் கொண்டிருந்தபோது தான் சேட் கடையில் ஒரு கணக்கெழுதும் குமாஸ்தா வேண்டுமென்று தெரிந்தது. சாயந்திரம் ஐந்தரை மணி முதல் ஒன்பதரை மணி வரை வேலை செய்ய வேண்டுமென்றும் மாதம் எண்பது ரூபாய் தருவதாகவும் சொன்னான். அதைவிட எனக்கு வேறு சந்தோஷம் உண்டா, சொல்! உடனே வேலையை ஒப்புக் கொண்டேன். அந்த சேட் கொடுக்கும் சம்பளத்தில்தான் உனக்கு நான் நல்ல வைத்தியம் பார்க்க முடிகிறது. உனக்காக நான் இரவு ஒன்பது, பத்து மணி வரை வேலை செய்கிறேன் என்று தெரிந்தால் உன் மனம் நோகுமே என்றுதான் என் ஆபீஸிலேயே வேலை என்று கூறினேன். ஆனால் நீ என்னை நம்பவில்லை" என்றான் நடராஜன்.

அவன் கூறியதைக் கேட்டுத் தேவகி பிரமித்தாள். "எனக்காகவா நீங்கள் இப்படி உழைக்கிறீர்கள்! என்னிடம் முன்பே ஏன் சொல்லவில்லை! நான் இனிப் பிழைக்க மாட்டேன் என்று அப்போதே தெரியுமே! எனக்காக இப்படி உடம்பைக் கெடுத்துக் கொண்டீர்களே!" என்றாள்.

"தேவகி, இந்த மாதிரி யெல்லாம் சொல்லாதே. என் நெஞ்சம் அடைத்துக் கொள்கிறது. உன்னை ஒரு போதும் இழக்க மாட்டேன். எப்பாடு பட்டாயினும் எவ்வளவு உயர்ந்த வைத்தியமாயினும், எவ்வளவு செலவாயினும் செய்து உன் உயிரை மீட்பேன். நாளைக்கே பிரபல டாக்டர் சுந்தரத்தை வரவழைக்கிறேன். நீ நிம்மதியாகத் தூங்கு!" என்று கூறி விட்டு நடராஜன் படுக்கப் போனான்.

அவன் போனதும் தேவகியின் மனம் சிந்தனையில் லயிக்க ஆரம்பித்தது.

"அடாடா, இவருடைய தங்கமான மனசை அறிந்து கொள்ளாமல் என்னென்னவோ எண்ணிக் கொண்டு என் மனத்தை வருத்திக் கொண்டதுமல்லாமல் அவரையும் என் மனம் போனபடி கடுமொழிகளால் இத்தனை நாட்கள் தாக்கி வந்தேனே. அவைகளை யெல்லாம் எவ்வளவு பொறுமையுடன் அவர் சகித்து வந்தார். என் மேலுள்ள அளவிலா அன்பினால் இரவு பத்து மணி வரை உழைத்துச் சம்பாதித்து எனக்கு வைத்தியத்துக்குச் செலவு செய்கிறார்! நான் அதை யெல்லாம் உணராது மருந்தைக் கீழே கொட்டி வந்தேனே! அவர் உடல் வருந்தச் சம்பாதித்த பணத்திலிருந்து என் நலத்துக்கு வாங்கிய மருந்துகளைப் பாழ் செய்தேனே. பழங்களைச் சாப்பிட மறுத்தேனே!" என்று ஏதேதோ எண்ணி எண்ணிக் கவலை கொண்டாள்.

தன்னைப் பிரிந்து தன் கணவன் கவலையே உருவாகி விட்ட காட்சியைக் கற்பனை செய்து பார்த்துக் கொண்டபோது அவளுடைய உள்ளம் துடிதுடித்தது.

"அவரைப் பிரிய மாட்டேன். பிரியக் கூடாது. நான் உடல் தேறிப் பிழைக்க வேண்டும்" என்று ஆவேசத்துடன் கூறிக் கொண்டாள்.

'ஈசுவரி, எங்களைப் பிரிக்காதே. வாழ்விலும் சாவிலும் எங்களைப் பிரிக்காதே!" என்று எதிரே சுவரில் மாட்டியிருந்த அகிலாண்டேசுவரியின் படத்தைப் பார்த்துக் கைகூப்பி வணங்கி வேண்டிக் கொண்டாள்.

* * *

"குற்றாலத்துக்குப் போய்க் கொஞ்ச நாட்கள் இருந்தால் ஒரு வேளை உடம்பு தேறுமோ என்னவோ!" என்றாள் தேவகி, ஒரு நாள் நடராஜனிடம்.

"குற்றாலத்துக்கா! அங்கு போனால் அவசியம் குணம் காணும். ஆனால் உன் உடல் இருக்கும் நிலையில் அவ்வளவு தூரம் பிரயாணம் செய்ய

முடியுமா! கொஞ்சம் உடம்பு தேறட்டும்..." என்றான் நடராஜன்.

"நான் இங்கிருந்தால் மேலும் என் நிலை சீர் கேடடையத்தான் செய்யும். அங்கு போனாலாவது ஒரு வேளை பிழைத்துக் கொள்ள மாட்டேனா என்று தான் நினைக்கிறேன். உங்களைப் பிரிந்து நான் போய் விடுவேனோ என்று நினைத்தாலே என் நெஞ்சு உலர்ந்து போகிறது. இந்த உலக பந்தம் எல்லாம் வெறும் மாயை என்று கூறுகிறார்கள். ஆனாலும் உங்கள் அன்பை நினைத்தால், நீங்கள் எனக்காகச் செய்யும் பிரயாசைகளை நினைத்தால், உங்களைத் தவிக்கவிட்டு உங்களை ஏமாற்றிவிட்டு இறந்து விடுவேனோ என்று நினைக்கும் போது என் மனம் துடிதுடிக்கிறது. நான் பிழைத்து உங்களுக்குத் தொண்டு செய்து, உங்களைச் சந்தோஷப்படுத்த வேண்டுமென்று என் உள்ளம் ஆவல் கொண்டு துடிக்கிறது. நான் பிழைக்க வேண்டும்" என்றாள் தேவகி, மிகுந்த ஆத்திரத்துடன்.

"நாளைக்கே குற்றாலத்துக்குப் போகலாம், தேவகி" என்றான் நடராஜன்.

* * *

குற்றாலத்துக்கு வந்து பதினைந்து தினங்களாகி விட்டதென்றாலும் தேவகியின் உடல் நிலையில் குறிப்பிடும்படியான மாறுதல் ஒன்றும் தோன்றவில்லை. அவள் மேலும் க்ஷீணமடையாமல் இருந்தாள் என்று மட்டும் கூற முடியும்.

நடராஜன் அவளைப் பார்த்துப் பெருமூச்சு ஒன்றை விட்டான். அவளைப் பார்க்கும் போதெல்லாம் எழில் நிறைந்து புத்தம் புது மலரெனத் திகழ்ந்த தேவகியா இவள் என்று எண்ணி மிகவும் வருந்தினான்.

"இவள் என்னை ஏமாற்றி விடுவாளோ!" என்று உள்ளத்திலே பெருங்கவலை கொண்டிருந்தான். "அவளைப் பிரிந்து நான் இருக்க முடியுமா! அவளுடைய பிரிவை நான் எப்படிச் சகிப்பேன்! ஏ, குற்றால நாதனே, அவளை என்னிடமிருந்து பிரித்து விடாதே. உன்னைத் தான் தஞ்சமென்று நம்பி வந்திருக்கிறேன்" என்று மானஸீகமாய் வேண்டிக் கொண்டான் நடராஜன்.

"அருவியைப் போய்ப் பார்க்க வேண்டுமென்று ஆவலாய் இருக்கிறது" என்ற தேவகியின் ஆவலைக் கேட்டதும் நடராஜன் ஒரு கணம் ஒன்றும் தெரியாமல் திடுக்கிட்டான்.

"என்ன சொன்னாய், தேவகி!" என்று பரபரப்புடன் கேட்டான், சிறிது தெளிந்ததும்.

"அருவியைப் பார்க்க வேண்டும்," என்று இரண்டாம் தரம் அவள் கூறியதும் அவன், "உனக்குப் பைத்தியமில்லையே, தேவகி! இதென்ன! என்னுடன் விளையாடுகிறாயா!" என்று வியப்புடன் கேட்டான்.

"நான் ஒன்றும் விளையாடவில்லை. நிஜமாகத் தான் சொல்கிறேன். எனக்கு உடம்பு இன்று தேவலையாக இருக்கிறது. இப்படி, காற்றாடக் கொஞ்சம் போய் விட்டு வந்தால் தெம்பு ஏற்படும்" என்று கூறிக்கொண்டே அவள் எழுந்து உட்கார்ந்து கொண்டாள்.

"ஐயையோ! தேவகி, எழுந்திருக்காதே. அப்புறம் உடம்புக்கு அதிகமாகி விடும்" என்றான் நடராஜன் பதட்டத்துடன்.

"என் உடம்பு எனக்குத் தெரியாதா! இத்தனை நாட்கள் ஓய்வு எடுத்துக் கொண்டதில் உடலில் பலம் ஏற்பட்டிருக்கிறது. நான் மெதுவாக நடக்கவும் முடியும். சும்மா ஒரு பர்லாங் போய் விட்டு வரலாம். கிட்டத்தானே இருக்கிறது அருவி" என்றாள் தேவகி.

நடராஜன் சம்மதிக்கவில்லை. "இன்னும் ஒரு வாரம் போகட்டும். தேவகி. அப்புறம் அருவிக்குப் போகலாம். இப்போது நீ படுத்துக் கொள்" என்று மேலும் கூறினான்.

ஆனால் தேவகி தன் பிடிவாதத்தை விடவில்லை. "கொஞ்ச தூரம்..." என்று கெஞ்சினாள்.

நடராஜன் பணிந்து விட்டான். "நீ எப்போதும் இப்படித்தான், தேவகி. உன் பிடிவாதத்தினால் காரியத்தைச் சாதித்துக் கொள்ளப் பார்க்கிறாய். அது எவ்வளவு ஆபத்தாக முடியும், தெரியுமா! ஆனால் உன்னை எதிர்த்துச் செய்யவும் முடியவில்லை..." என்று வருத்தத்துடன் கூறினான்.

* * *

"பார்த்தீர்களா, என்னமோ சொன்னீர்களே. எவ்வளவு தூரம் நடந்து வந்து விட்டேன்! ஒன்றும் கஷ்டமாகவே தென்படவில்லை. இத்தனை நாளும் வீட்டுக்குள்ளேயே அடைபட்டுக் கிடந்ததால்தான் இதுவரை உடம்பு தேறாமல் இருந்தது. இந்த நல்ல காற்றுப் பட்டதும் உடம்பு எவ்வளவு தெம்பா யிருக்கிறது! தினமும் இப்படியே நடந்தால் சரியாகி விடும்" என்றாள் தேவகி.

நடராஜன் அவளைப் பார்த்தான். அவளுடைய முகத்தில் தோன்றிய பொலிவிலிருந்து அவள் கூறியது உண்மைதான் என்று உணர்ந்தான். அவனுடைய உள்ளத்திலே கட்டுக் கடங்காத உவகை பொங்கிற்று. அப்போதே அவளுக்கு முழுதும் குணமாகி விட்டதுபோல் குதூகலமடைந்தான்.

"சரி, சரி! தேவகி, திரும்பலாமா!" என்று கேட்டான் நடராஜன்.

"இன்னும் கொஞ்சம் போய்விட்டு வரலாமே!"

"இன்றைக்கு இது போதும். நாளைக்குப் போகலாம்" என்றான் நடராஜன்.

அடுத்த நாள் இருவரும் பேசிக் கொண்டே வெகு தூரம் சென்று விட்டனர். அவளுக்கும், அவனுக்கும் எங்கே போகிறோம் என்றே தெரியவில்லை. தேவகிக்கு இவ்வளவு தூரம் உடம்பு குணமாகி விட்டதே என்று நடராஜனுக்கு மட்டிலடங்காத சந்தோஷம். இருவரும் இன்பலோகத்திலே சஞ்சரித்துக் கொண்டிருந்தார்கள்.

வழியில் ஒரு மரப்பாலம் இருந்தது. கீழே வெள்ளம் பிரமாதமாக ஓடிக் கொண்டிருந்தது. "ஜாக்கிரதையாகப் பார்த்து வா, தேவகி" என்று தேவகியின் கையைப் பிடித்துக் கொண்டு முன்னே நடந்தான்.

பாலத்தின் நடுவில் வரும்போது தேவகிக்குத் தலை சுற்றுவதுபோல் இருந்தது. கால்கள் தடுமாறின.

"ஐயோ!" என்று அலறினாள்.

"என்ன தேவகி!" என்று நடராஜன் கேட்டுத் திரும்பிப் பார்ப்பதற்குள் அவள் தடுமாற்றத்தைச் சமாளிக்க முடியாமல் பலவீனத்தினால் கால்கள் தள்ளாடித் தவறிக் கீழே வெள்ளத்தில் வீழ்ந்து விட்டாள். தான் மட்டும் விழவில்லை. கைப்பிடியை விடாமல் நடராஜனையும் இழுத்துக் கொண்டு விழுந்து விட்டாள். அவர்களுடைய உயிரை விழுங்கி விட்டு வெள்ளம் 'ஹோ' வென்று இரைச்சலிட்டுக் கொண்டு ஓடிக் கொண்டே இருந்தது.

ஈசுவரி, குற்றாலநாதர் இருவரும் அவர்களுடைய வேண்டுகோளை நிராகரிக்கவில்லை. வாழ்விலும், சாவிலும் அவர்கள் இருவரையும் நிரந்தரமாகப் பிணைத்தே வைத்து விட்டார்கள்.

# இரண்டும் வாட்டர்புருப் கடியாரங்கள் — அவை ரோலெக்ஸ் தயாரிப்புகளுந்தான்



ஆடவருக்கேற்றது டியூடர். அதன் வாட்டர் புருப் கேஸ் உள்ளிருக்கிற நேர்மையான 17 ஜுவல் யந்திரத்தை தூசி, அழுக்கு, ஈரம் புகாமல் பாதுகாக்கின்றது. வெளியே அலுவல்களுடைய பெண்மணிகளுக்கு டியூடர் ஆயிஸ்டர் கடியாரத்தை சிபார்சு செய்வோம் — வருடக்கணக்கில் சேவைபுரியும்.

எமது டியூடர் கடியாரங்களின் எல்லா நிறுசுகளையும் வந்து பாருங்கள் — நேரில் வரமுடியாதவர்களுக்கு ஒரு இலவச காட்லாக் அனுப்புவோம்.



**டியூடர்**

கடியாரங்கள்

ஜெனிவா, ஸ்விட்ஸர்லாந்து, தயாரிப்புகள்

தென்இந்தியாவில் ஏக விநியோகஸ்தர்கள்:

**மெஸர்ஸ் பி. ஆர் & ஸன்ஸ் லிட்.,**

மவுண்ட் ரோட், மதராஸ்

R. 735




உலகில் அரிச்சந்திரனின் பெயர் எப்படி விளங்குகிறதோ அப்படி விளங்க வேண்டிய பெயர்தான் குள்ளச் சீமாவின் பெயரும். அரிச்சந்திரன் செய்த தவம் அவன் செய்யவில்லையோ என்னவோ! சீமாவின் பெயர் விளங்கவில்லை. பொய் சொல்லுவதிலேதான் அதிக சுவாரஸ்யமும் சுகமும் இருக்கிறது என்று யாரோ ஒரு பெரியார் சொன்னாராம். அந்த உண்மையை நன்கு கண்டறிந்த புண்ணிய புருஷன்தான் குள்ளச் சீமா. ஒரு நாளைக்கு இவ்வளவு பொய் சொன்னால்தான் மனத்துக்கு ஒரு திருப்தியும் சாந்தியும் ஏற்படும் என்று அவனுக்கொரு கணக்கு இருக்க வேண்டும். அவனுடைய கணக்குப்படி அத்தனை பொய் புளுகா விட்டால் அவனுக்குத் தூக்கம் வருவது கடினம். அவன் எவ்வளவு வேண்டுமானாலும் புளுகட்டும். ஆச்சர்யப்படுவதற்கு ஒன்றுமில்லை. ஆனால் அத்தனை பொய்களையும் எப்படிக் கற்பனை செய்கிறான், அதை எவ்வளவு அழகாகவும் சகஜமாகவும் சொல்லுகிறான் என்பது தான் ஆச்சரியம். கஷ்டப்பட்டுக் கொண்டோ, கருமித்தனமாகவோ, தயக்கம் காட்டியோ, யோசித்தோ அவன் புளுகுவதில்லை; பொய் சொல்லுவதற்கு அப்பியாசம் செய்து கொள்வது, முன் கூட்டி யோசித்துத் தீர்மானம் செய்துகொள்வது, ஒரு பிரதி பிரயோசனத்திற்காகவோ, பைசா லாபத்தை எதிர்பார்த்தோ பொய் சொல்லுவது என்பதெல்லாம் அவனிடம் கிடையாது. பொய் சொல்லும் பெருங் கலை ஈசன் அருளால் அவனுக்கு ஏற்பட்டது. அவன் அதற்காகப் பெருந் தவம் செய்திருக்கா விட்டாலும், அவனுடைய நாக்காவது தனியாக நின்று பெருந் தவம் செய்திருக்கத்தான் வேண்டும்! அது பெற்ற பெரு வரன்தான் அவன் பேசும் ஒவ்வொரு வார்த்தையிலும் நிஜக் கலப்பில்லாமல் தனிப் பொய்த் தன்மை பெற்று விளங்குவதற்குக் காரணம்!

குள்ளச் சீமா அதி வேகமாக வந்தான். அவன் வரும் வேகத்திலிருந்தே அவன் ஏதோ ஒரு பொய்யை என்னிடம் சொல்லச் சுமந்து வருகிறான் என்பது விளங்கியது.

"என்னப்பா, சீமா! ரொம்ப வேகமாய் வருகிறாயே?" என்றேன்.

"ஆமாம்! சாதாரணமாகத்தான் உன்னைப் பார்க்க வந்தேன். ஆனால் வரும்போது பாரு, ஒரு கல்லுத் தடுக்கி விட்டது!"

சீமா ஏதோ ஒரு பொய்யைப் புளுகக் 'கல்லுத் தடுக்கியது' என்று ஒரு முன்னுரை மூத்தாய்ப்பு வைத்து விட்டான். இனிமேல் கதை வளரும். "கல்லுத் தடுக்கிடுத்தா, எங்கே? கீழே விழுந்து விட்டாயா?" என்றேன் பதட்டத்துடன்.

"தெருக் கோடியிலே, திருப்பத்திலே; நானா கீழே விழுந்திடுவேன்? விழப் பார்த்தேன், அவ்வளவுதான். அதோடு மாத்திரம் இல்லை. இன்னொரு பெரிய ஆபத்திலிருந்தும் தப்பினேன்" என்றான்.

"என்ன?"

"நான் கல் தடுக்கி விழப் போன சமயம் துரதிருஷ்ட வசமாக, கண்மூடித்தனமாக ஒரு கார் வேறு என் மீது மோதத் தெரிந்தது..."

"அடடா......"

"அடடா, என்ன? உயிர் தப்பினேன். சட்டென்று டிரைவர் பிரேக் போட்டுக் காரை நிறுத்தி விட்டான்!"

"முட்டாள்—சில டிரைவர்களே இப்படித்தான். போகட்டும் அப்புறம்?"

"அப்புறம் என்ன? அவன் காரை நிறுத்தினானோ இல்லையோ, காரிலிருந்து ஒரு பெரிய மனிதர் அவசரமாகக் கீழே இறங்கி என் இரண்டு கைகளையும் பிடித்துக் கொண்டு மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்!"

"அப்படியா? அந்த மனிதர் யாரு?"

"அவசரப்படாதே, சொல்ல மாட்டேனா? இந்த ஊருக்குப் புதிதாக மாற்றலாகி வந்திருக்கார் பாரு, சப் ஜட்ஜ்—அவரேதான்!"

"சப் ஜட்ஜா?"

"ஆமாம். அவர் தம் டிரைவர் என் மீது காரை ஏற்ற நினைத்ததைப் பற்றி மிக வருந்தி, தம்மைப் பற்றியும், தாம் இந்த



ஊருக்கு மாற்றலாகி வந்திருப்பது பற்றியும் சொல்லி இப்படியாவது இந்த ஊரில் என்னைப் போன்ற அருமையான மனிதரோடு பழகிச் சினேகம் செய்து கொள்வதற்கு முடிந்தது பற்றி ரொம்பவும் சந்தோஷப் பட்டார்!''

"அடாடா! நீ ரொம்பவும் அதிருஷ்டசாலி அப்பா, உனக்கு எப்படியோ ஊரில் பெரிய மனிதர்கள் சிநேகிதமெல்லாம் கிடைத்து விடுகிறது. அதிருக்கட்டும், அவர் பார்ப்பதற்கு எப்படியிருக்கிறார்?''

"நல்ல சிவப்பு. குட்டை, கொஞ்சம் தடித்த தேகம், உச்சிக் குடுமி, கொஞ்சம் வைதீகமாகவே இருப்பார் போலிருக்கு!''

"சரிதான்!''

"இதிலே ஒரு விஷயம், எனக்கு சப் ஜட்ஜைத் தெரியுமென்று நம்ம ராமு கிட்டே சொல்லி விடாதே! ஏன் தெரியுமா? சப் கோர்ட்டிலே அவன் கேஸ் ஒன்று நடக்கிறது. 'அதைத் தனக்குச் சாதகமாகும்படி தீர்ப்புச் சொல்லச் சொல்லு' என்று என் பிராணனை எடுத்து விடுவான்!''

"சேச்சே! நான் சொல்லுவேனா? ஆனால் எனக்கு மாத்திரம் ஒரு உபகாரம் செய்து விடு. எங்க மாப்பிள்ளை வக்கீலாக இருக்கார் பாரு. அவர் ஆஜராகிற வழக்குகளை மாத்திரம் அவருக்குச் சாதகமாகத் தீர்ப்புச் சொல்லிவிடச் சொல்லு, போதும்!''

"இதென்ன, பிரமாதம்! சமயம் நேர்ந்தபோது அழுத்தமாகச் சொல்லி வைத்து விடுகிறேன். அவர் கூட இந்த ஊரிலே இருக்கிற வக்கீல்களையெல்லாம் பற்றி என்னிடம் கேட்டார். அப்புறம் அதைப்பற்றி விவரமாகச் சொல்வதாகச் சொல்லி இருக்கிறேன்!''




"அப்படியா? சொல்கிறபோது நம்ம மாப்பிள்ளையையும் முதலிலே சொல்லிப் பிரமாதப் படுத்திவிடு. மறந்து விடாதே!''

'நான் மறப்பேனா? கவலைப்படாதே!'' என்று சொல்லி விடைபெற்றுக் கொண்டான் குள்ளச்சீமா. அவன் எந்தப் பொய்யை என்னிடம் சொல்லவேண்டுமென்று வந்தானோ அதை என்னிடம் சொல்லி மன நிம்மதி அடைந்தவனாகப் போய் விட்டான். தினமும் தவறாமல் செய்துகொண்டு வரும் கர்மாவை விடாமல் ஒன்றுக்குப் பின் ஒன்றாகச் செய்பவன் போல் அன்று என்னிடம் புளுக வேண்டிய கிரமத்துக்கும் புளுகி விட்டுப் போய் விட்டான், பிராதக் காலத்தில் செய்ய வேண்டிய கடன் தீர்ந்தாற்போல. இன்னும் வழக்கமாகப் பார்க்க வேண்டியவர்களையெல்லாம் பார்த்துப் புதிது புதிதாகப் புளுக வேண்டியவைகளை எல்லாம் புளுகி விட்டால் அன்றையக் கடமை தீர்ந்து போய் விடுமல்லவா? தினமும் என்னைச் சந்தித்த பிறகு ராமுவைச் சந்திப்பான். ராமு என்னைப் போல் சீமா கொட்டி அளக்கும் புளுகுகளையெல்லாம் மனங் கோணாமல் நிம்மதியாகக் கேட்கும் சுபாவம் படைத்தவன். அன்று அவனிடம் ஊருக்குப் புதிதாக வந்திருக்கும் நகரசபைக் கமிஷனரைத் தான் சிநேகம் பிடித்து விட்டதாகச் சொன்னானாம்! முதல் நாள் இரவு கோயிலில் அவரைச் சந்தித்ததாகவும், அவர் சீமாவிடம் வந்து அந்த க்ஷேத்திரத்தின் மகிமைகளைச் சொல்லும்படி கேட்டதாகவும், அவனும் முனிசிபல் கமிஷனருக்கு அந்த க்ஷேத்திர மகாத்மியத்தைச் சொன்னதாகவும், அதிலிருந்து அவனுக்கும் அந்த நகரசபை அதிகாரிக்கும் மிக நெருங்கிய நட்பு ஏற்பட்டு விட்டதாகவும் சொல்லியிருக்கிறான். அதோடு மட்டுமல்ல, தனக்கு முனிஸிபல் கமிஷனர் அத்யந்த நண்பர் என்பதை எனக்குச் சொல்ல வேண்டாம் என்றும் ராமுவிடம் சொல்லியிருக்கிறான். ஏனென்றால் நான் என் வீட்டு வரியைக் குறைக்க வேண்டுமென்று நகரசபைக் கமிஷனரிடம் அவனைச் சிபாரிசு செய்யச் சொல்லுவேனாம். சீமா சொல்லிய எந்தப் பொய்க் கதையையும் ராமு என்னிடம் சொல்லத் தவறியதே இல்லை. நானும் அப்படியே ராமுவிடம் சொல்லத் தவறிய இல்லை. என்னிடம் சொல்லப்பட்ட விஷயம் ராமுவுக்குத் தெரியுமென்றோ, ராமுவிடம் சொல்லப்பட்ட விஷயம் எனக்குத் தெரியுமென்றோ நாங்கள் சீமாவிடம் காட்டிக் கொண்டதேயில்லை. ஏனென்றால் இது அவனுக்குத் தெரிந்து விட்டால் அவன் மறுபடியும் எங்களிடம் புளுக வரமாட்டானோ என்ற பயம் தான் எங்களுக்கு. அவன் எவ்வளவு சுவாரஸ்யமாகப் புளுகுகிறானோ அவ்வளவு

சுவாரஸ்யம், ஏன், அதை விடவும், அந்தப் புளுகுகளைக் கேட்பதில் எங்களுக்கு இருந்தது.

குள்ளச் சீமாவிடமுள்ள ஒரு அலாதி சாமர்த்திய மென்னவென்றால் ஒரு பெரிய மனிதரைச் சினேகிதம் செய்து கொள்ள ஏற்பட்ட சந்தர்ப்பங்களை வெகு பொருத்தமாகவும் அழகாகவும் ஜோடித்துச் சொல்லுவது தான். சாதாரண மனிதனாகிய சீமாவுக்கும் ஒரு பெரிய பதவியிலுள்ள மனிதருக்கும் அத்யந்த நட்பு ஏற்படக் காரணம் என்னவென்று கேட்பவர் சந்தேகிக்கக் கூடாதல்லவா? இப்படிப்பட்ட சந்திப்பு சந்தர்ப்பங்களைப் பொருத்தமாக இணைத்துச் சொல்லுவது கற்பனா சக்தி படைத்த பெரிய பெரிய கதாசிரியர்களால் கூட முடியாத விஷயம். இதைத் தவிர இன்னொரு பெரிய சாமர்த்தியமும் அவனிடம் உண்டு. அவனுடைய பொய் எங்கேயாவது அம்பலமாகி விடும் போலிருந்தால் அந்த இடத்திலும் அவன் மிக சாமர்த்தியமாகத் தப்பித்துக் கொள்ளுவான். அந்த இடத்தில் நாம்தான் பொய்யராகி விடும்படி நேரும்.

சீமா என்னிடம் வந்து புதிதாக ஊருக்கு வந்திருக்கும் சப் ஜட்ஜைச் சினேகம் பிடித்து விட்டதாகச் சொல்லிய இரண்டு நாட்களுக்குள் சப் ஜட்ஜைத் தெய்வாதீனமாகப் பார்த்துத் தெரிந்து கொள்ளும்படி நேரிட்டது. அவரது உருவம் உடை யெல்லாம் சீமா சொல்லியதற்கு நேர் மாறாக இருந்தது. அவன் சொல்லியது போல் அவர் உச்சிக்குடுமி வைத்துக் கொண்டிருக்கவில்லை. கிராப்புத் தலை. சிவப்பு நிறமோ தடித்த உருவமோ இல்லை. நல்ல கருப்பு. ஒல்லியான உருவம். விபூதியையோ குங்குமப் பொட்டையோ காணோம்; மேல் நாட்டு முறையில் உடை யணிந்திருந்தார். எல்லாம் நேர்மாறாக இருந்தன. இதைச் சீமாவிடம் கேட்கும் வரையில் மனம் ஆறுதல் அடையாது போலிருந்தது. மறுநாள் அவன் என்னை வழக்கமாகப் பார்க்க வந்தபோது பிடித்துக் கொண்டேன்.

"என்னப்பா! புதிதாக வந்திருக்கும் சப் ஜட்ஜ் உச்சிக் குடுமி வைத்துக் கொண்டு சிவப்பாகப் பருமனாக இருப்பார் என்று சொன்னாயே? நேற்று டவுன் ஹாலுக்கு வந்திருந்தார். எல்லாம் நீ சொன்னதற்கு நேர் விரோதமாகவே இருக்கிறதே? இந்த இரண்டு மூன்று நாட்களுக்குள் வேறு யாரை யாவது மாற்றிப் போட்டிருப்பார்களோ?" என்றேன், அவன் யோசிக்காமல் புளுகுவதற்கு நானே ஒரு வழியை அவனுக்குப் பளிச்சென்று எடுத்துக் காட்டுவது போல்.

ஆனால் அவன் நான் எடுத்துக் காட்டிய வழியைப் பின்பற்றித் தன் புளுகு மூட்டையை அவிழ்க்கவில்லை. 'ஆமாம். திடீரென்று அவரை மாற்றி விட்டு வேறொருவரை சப் ஜட்ஜாக நியமித்து விட்டார்கள்' என்று சொல்லி அவன் என்னைத் திருப்திப் படுத்தி இருக்கலாம். பொய் சொல்லுவதாய் இருந்தாலும் பிறர் காட்டும் வழியைத் தழுவியோ அனுசரித்தோ பொய் சொல்வது தன் மதிப்புக்கோ சுய மரியாதைக்கோ இழுக்குத்தானே? உண்மையான கைதேர்ந்த பொய்யன் அப்படி நடிப்பதில் என்ன மதிப்பு இருக்கிறது? அதுவும் தவிர, புளுகுவதற்காகவே பூமியில் அவதாரம் செய்தவன் அப்படியா செய்வான்? "நான் உன்னிடம் சப் ஜட்ஜைப் பற்றியா சொன்னேன்? இல்லவே இல்லை. உளறாதே. நான் சப் கலெக்டரைப் பற்றியல்லவா சொன்னேன்?" என்று ஒரு பெரும் போடு போட்டான்.

திடீரென்று அவன் இப்படிப் புரட்டுவான் என்று நான் நினைக்கவே இல்லை. நான் திகைப் படைந்து விட்டேன். அவன் சப்ஜட்ஜைப் பார்த்ததாகத்தான் சொன்னான் என்பதை நிரூபித்துக் காட்ட அப்பொழுது நான் பல வழிகளிலும் முயற்சி செய்தேன். அவன் அதைஒப்புக் கொள்ளவேயில்லை. அவன் பேசிய தினுசிலிருந்து ஒரு பலம் சூடம் வாங்கிக் கொண்டு வந்து சமீபத்தில் எந்தக் கோயில் இருக்கிறதோ அங்கே போய் சத்தியம் செய்யத் தயாராய் இருப்பான் போலிருந்தது. அதற்கு மேல் அவனோடு விவாதம் செய்வதில் புண்ணியமில்லை என்று நிறுத்திக் கொண்டேன்.




புதிதாக வந்திருக்கும் முனிஸிபல் கமிஷனர் அவன் ராமுவிடம் சொன்ன அங்க அடையாளத்தோடு இல்லை.

அவன் கூறியதற்கு நேர்மாறாக இருந்தார். அவர் கிராப்பு வைத்துக் கொண்டு கறுப்பாக இருந்தார் என்று சொல்லியதற்கு மாறாக, உச்சிக் குடுமி வைத்துக் கொண்டு சிவப்பாக இருந்தாராம். இதைப் பற்றிச் சீமாவிடம் ராமு கேட்ட பொழுது இந்த ஊர் ஜனங்களெல்லாம் மிகவும் ஆஸ்திகர்கள் என்று கேட்டவுடனே ஜனங்களின் அன்பைப் பெறுவதற்காக அவர் வந்த இரண்டு நாட்களுக்குள் உச்சிக்குடுமி வைத்துக் கொண்டு விட்டார் என்று சொன்னானாம்.

இப்படிச் சமயோசித புத்தியுடன் ஒரு பொய்யை மறைப்பதற்காக இன்னொரு பொய்யைப் புளுகக் குள்ளச் சீமாவைத் தவிர வேறு யாரால்தான் முடியும்?



# நீங்கள் இன்று உங்கள் பற்களை மக்ளீன் செய்தீர்களா?



**ஆம், அதன் இரகசியம் இதுதான்...**

பற்களைத் தவறாமல் சுத்தம் செய்து வருவதால் அவை நெடு நாளைக்கு ஆரோக்யமாக இருக்கின்றன என்பதைத் தெளிவாக்கி விடுவோம். பிரதி தினமும், இருவேளையும் மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை உபயோகிப்பதால், அதிக வெண்மையான பற்களும், உறுதியான ஈறுகளும் நறுமணமுள்ள சுவாசமும் நிச்சயமாக உண்டாகின்றன. இவ்வித்தியாசத்தை நீங்களே காணலாம். மக்ளீன்ஸிலுள்ள ஒரு ப்ரத்யேகமான பொருள் பற்களின் மேல் படிந்துள்ள மங்கலான பூச்சை மாற்றி பற்களின் மேல் இயற்கையாக ஒளிரும் வெண்மையை வெளிக்கொணர்கிறது.

"...என்னைப் போலவே தங்களது பற்களைப் பற்றிப் பெருமைப்படுபவர்களுக்கு மக்ளீன்ஸ் பற்பசையையே சிபார்சு செய்கிறேன்"




க்ளோரோபில் சேர்ந்தும் கிடைக்கும்.

MTY-38-TAM.



# சக்கரவர்த்தித்



## 46. கம்ப சித்திரம்

தோட்டத்தில் மேய வந்த ஒரு கழுதையைத் தடியாலடித்து ஓட்டுவது போல் சூர்ப்பனகையைத் துரத்தி விட்டார்கள். வால்மீகி இந்த நிகழ்ச்சியை வெகு சுருக்கமாகச் சிக்கல் ஒன்றுமின்றி எழுதி விட்டார்.

கம்பர் இந்தச் சங்கதியை அவ்வளவு சுலபமாக முடித்து விடவில்லை. சூர்ப்பனகை பட்ட பாட்டை ஒரு பெரிய தனி நாடகமாக்கி அதில் எல்லாவித ரஸங்களையும் தீட்டி விட்டிருக்கிறார். சூர்ப்பனகைப் படலம் கம்ப ராமாயணத்துக்குள் ஒரு தலைசிறந்த படலம்; அதன் அலங்கார அழகுகளை நண்பர்களுக்கு எடுத்துக் காட்டுவதில் டி. கே. சி. அவர்கள் தெவிட்டு அடைய மாட்டார்.

* * *

ஆற்றங்கரைப் படுகையில் ராமன் உட்கார்ந்து கொண்டு அங்கு ஒரு அன்னம் மெள்ள நடந்து கொண்டிருந்ததைப் பார்த்து விட்டுச் சீதையைப் பார்த்தான். அவளும் நடந்து கொண்டிருந்தாள். இரண்டு நடையும் ஒன்று போலிருந்ததைக் கண்டு ஒரு புது மகிழ்ச்சி உண்டாகி, அந்த மகிழ்ச்சி ராமன் முகத்தில் ஒரு புன்முறுவலாயிற்று. அதற்குப் போட்டியாக தேவியும் அவ்விடம் கொஞ்ச தூரத்தில் ஒரு யானை வந்து தண்ணீர் குடித்து விட்டுத் திரும்பிப் போய்க் கொண்டிருந்ததை நோக்கி அவளும் தன் கணவன் அழகை, நினைத்துப் புன்னகை பூத்தாள். இவ்வாறு பஞ்சவடி ஆற்றங்கரையில் பகவான் கண்ணன் சொன்னபடி "தருமத்துக்கு விரோதப்படாத துறையில்" காதல் உணர்ச்சி சென்று கொண்டிருந்த சமயத்தில் விதியின் சூழ்ச்சியானது சூர்ப்பனகையை, தன் பாட்டுக்குக் காட்டில் திரிந்து கொண்டிருப்பவளை அதைவிட்டு, ராமனண்டை போகச் செய்தது.

"வைகலும் தமியள்அவ்
வனத்துள் வைகுவாள்,
நோய்தின்இவ் வுலகெலாம்
நுழையும் நோன்மையள்,
வெய்யதோர் காரணம்
மேவி உண்மையின்,
எய்தினள் இராகவன்
இருந்த சூழல்வாய்."

அரக்கர்களைத் தீர்ப்பதற்கென்றே பாற்கடலை விட்டுத் தசரதன் மகனாக வந்த ஆண்டவனைக் கண்டவுடன், சூர்ப்பனகை, "இந்த அழகிய உருவம் மன்மதனா, இந்திரனா, மகாதேவனா, மகா விஷ்ணுவா!" என்று யோசித்தாள். "மன்மதனுக்கு உடலில்லையே, இந்திரனுக்கு ஆயிரம் கண்களாயிற்றே, மகாதேவனுக்கு நெற்றியில் ஒரு கண்ணுண்டே, இவனுக்குக் கைகள் நான்கு இல்லையே, இவன் இந்திரனுமல்ல, பரமசிவனுமல்ல, விஷ்ணுவுமல்ல, ஒருவேளை பரமசிவனால் சாம்பலாகிய மன்மதன் தான் தவம் செய்து மறுபடி ஒரு உடல் சம்பாதித்திருக்கிறானோ" என்று ஆலோசித்தாள்.

"கற்றயஞ் சடையவன்
கண்ணிற் காய்தலால்
இற்றவன் அன்றதோட்(டு)
இன்று காறுந்தான்
நற்றவம் இயற்றி,அவ்
அனங்கன் நல்உருப்
பெற்றன னாம்எனப்
பெயர்த்தும் எண்ணுவாள்."

"இந்த அழகான புருஷன் ஏன் வீணாகத் தன் உடம்பை வருத்திக் கொண்டு விரதம் நோற்கின்றான்? செந்தாமரை போன்ற கண்களையுடைய இவன் ஏன் தவம் செய்து கொண்டு காலத்தை

ராஜாஜி

# திருமகன்

விளுக்குகிறான்?'' — இப்படியெல்லாம் எண்ணிக் கொண்டு ராமனைப் பார்த்து நின்றாள். கண்களை அதை விட்டு வேறு பொருளின் மேல் செலுத்த முடியாமல் நின்றாள். என்னசெய்வது என்று யோசித்தாள். ''இவன் என் உருவத்தைக் கண்டு என்னை வெறுப்பான். நான் மாறு வேஷம் போட்டுக் கொண்டு இவனண்டை போக வேண்டும்'' என்று எண்ணினாள். மாயத்தால் தன்னுடைய அரக்கி உருவத்தை மறைத்துக் கொண்டு மிகச் சுந்தர வடிவம் எடுத்துக் கொண்டாள். ''குயில் தொடர் குதலை'' மொழியும் ''கொவ்வைச் செய்ய'' வாயும் ''மயில் தொடர் இயலி'' யாய்த் தன்னை மாற்றிக் கொண்டு,

> ''திங்களின் சிறந்தொளிர் முகத்தள் செவ்வியள்,
> பொங்கொளி விசும்பினில் பொலியத் தோன்றினள்.''

தேவலோகத்துக் கற்பக மரத்தில் ஏறி வளர்ந்த ஒரு பொன் கொடியைப் போன்ற மேனியும் காம வெறியூட்டும் இதழ்களும் முத்துக் களைப் போன்ற பற்களும் மான் விழியும் கொண்டு ''மயில் வந்ததென'' வந்தாள். நூபுரமும் மேகலையும் செய்த ஒலியானது ஒரு பெண் வருவதை ராஜகுமாரனுக்குத் தெரிவித்தது.



ராமன் பார்த்தான். எல்லை கடந்த அழகைப் பெற்ற ஒரு ஸ்திரீ வந்து நிற்பதைக் கண்டான். ராமனுடைய பாதங்களைத் தொட்டுப் பணிந்தாள். பிறகு சிறிது நாணத்தோடு எட்டி நின்றாள்.

''உம் வரவு நல்வரவு ஆகுக. வெகு தூரத்திலிருந்து வந்திருக்க வேண்டும். உம் ஊர் எது? உம் பெயர் என்ன? உம் உறவினர் யார்?'' என்று ராமன் கேட்டான்.

''நான் பிரும்மாவின் பேரனுக்குப் புதல்வி. குபேரனுடைய தங்கை. வெள்ளி மலையை எடுத்த ராவண மன்னனுக்கு உடன் பிறந்தவள். காமவல்லி என்ற கன்னி'' என்று கூறினாள்.

''என்ன காரியத்தை உத்தேசித்து இங்கே வந்தது?'' என்றான்.

''பெண்கள் தங்களுடைய கஷ்டத்தைச் சொல்லிக் கொள்வதற்கில்லை. ஆயினும் நான் சொல்லுகிறேன். காமதேவன் என் உள்ளத்தைத் துன்புறுத்துகிறான். நீ என்னைக் காக்க வேண்டும்'' என்றாள்.

ராமனுக்கு ஒன்றும் பேசத் தோன்றவில்லை. அவள் மேலும் சொல்லிக் கொண்டு போனாள் :

''என்னைக் கந்தர்வ விவாக முறையில் மனைவியாக்கிக் கொள்வாய். அந்தமுறை 'காதலில் கலந்த சிந்தை கொண்ட மாந்தர்க்கும் மடந்தைமார்க்கும் மறைகளே வகுத்துக் கூறும்.' இது நடந்து விட்டால் எனக்குச் சந்தோஷம் தருவதுடன் என் அண்ணன் ராவணனுக்கும் உனக்கும் நல்ல சிநேகம் ஏற்பட்டுப் போகும். இந்த வனத்தில் நீ தனியாக இருக்கிறாய். ராக்ஷஸர்கள் உன்னைத் துன்புறுத்துவார்கள். நீ முனிவர் கூட்டத்தில் ஒருவனாக இருப்பதால் காரணமின்றியே அவர்கள் உன்னைத் தொந்தரவு செய்வார்கள். நீ என்னை உடனே மணந்து விட்டால் அந்த அபாயம் நீங்கும். அது மாத்திரம் அல்ல. அதன் பயனாக அந்தப் பலவான்கள் உன்னுடைய வேலைகளையெல்லாம் செய்யத் தயாராக இருப்பார்கள். இதை யோசிப்பாயாக'' என்று நீதி சாஸ்திரத்தை யொட்டிச் சொன்னாள் சூர்ப்பனகை.

ராமன் பெருஞ் சிரிப்புச் சிரித்தான்.

''அரக்கர்களுடைய கருணையையும் ஒரு அழகிய புது மனைவியையும் நான் பெற்று




விடுவேன் அல்லவா? உன்னோடு சுகமாக எங்கு வேண்டுமானாலும் உல்லாசமாகத் திரியும் சௌகரியத்தையும் பெறுவேனல்லவா? மிகச் சரி! அயோத்தியை விட்டு நீங்கி நான் செய்த தவம் இன்று நல்ல பயன் தந்தே விட்டது!" என்று சொல்லித் தன் வெண்மையான பற்கள் விளங்க வாய் திறந்து சிரித்தான் ராமன்.

ஜானகி இந்தச் சமயத்தில் செடிகளுக் கிடையில் வந்து கொண்டிருந்தாள்.

லக்ஷ்மி தேவியே இந்தப் பூமியில் அவதரித்த பூங்கொடி போன்ற சீதை ராமனிருந்த இடம் வந்து கொண்டிருந்ததை சூர்ப்பனகை பார்த்தாள். சீதையின் அழகைக் கண்டு வியந்தாள்.

காமத்தால் பீடிக்கப்பட்ட அரக்கிக்கு ஒரு யோசனை தோன்றிற்று.

"இதோ வருகிறாளே இந்தப் பெண், இவள் ஒரு மாயவித்தை செய்யும் ராக்ஷஸ ஸ்திரீ. இவள் உன்னை ஏமாற்றுவாள். ஜாக்கிரதை! இவள் உருவம் இதுவன்று. இவள் பச்சை மாமிசம் தின்னும் அரக்கி. இவளைத் தூரத் தள்ளு" என்றாள்.

ராமன் மறுபடி சிரித்தான். "நீ எவ்வளவு அறிவாளி! இவளை நீயல்லவா சரியாகக் கண்டு கொண்டாய்" என்றான்.

இதற்குள் சீதை ராமன் பக்கத்தில் வந்து விட்டாள். சூர்ப்பனகைக்கு ராமனுடைய பரிகாசம் தெரியவில்லை. அவளுடைய காம வேதனை அவளுடைய மூளையை முற்றிலும் அழித்து விட்டது. சீதையைப் பார்த்துச் சீறினாள்:

"நீ ஏன் இந்த வீரனண்டை வருகிறாய், அரக்கி?"

**நீயிடை வந்ததென்னை,**
**நிருதர்தம் பாவை!**

என்று கோபத்தோடு, "தூரப் போ!" என்று அதட்டிச் சொன்னாள்.

சீதை இதுவென்ன விபரீதம் என்று ஒன்றும் விளங்காமல் நடுங்கி, மேகத்தை மின்னற் கொடி தழுவுவது போல் சக்கரவர்த்தித் திருமகனுடைய தோளைத் தழுவிக் கொண்டாள்.

விளையாடியது இனி போதும் என்று சூர்ப்பனகையைப் பார்த்து, "நங்காய், இனி நிறுத்து, என் தம்பி இருக்கிறான். உன் விஷயம் அவனுக்குத் தெரிந்து விட்டால் அவன் கோபித்துக் கொள்வான். அவன் பெருங் கோபக்காரன். என்ன நடக்குமோ எனக்குத் தெரியாது. சீக்

கிரம் நீ வந்த வழியே திரும்பிப் போய் விடு!" என்றான்.

இதைச் சொல்லி ராமனும் சீதையும் பர்ணசாலைக்குள் போய் விட்டார்கள்.

இதன்பின் அரக்கிக்குக் காதல் வெறி அதிகமாகி விட்டது. இரவு எப்படியோ எங்கேயோ கழிக்கிறாள். விடிந்தவுடன் யோசனை செய்கிறாள்:

"இவனை அடையா விட்டால் என் உயிர் போகும் போலிருக்கிறது. இந்தப் பெண் ஒருத்தி இருக்கும் வரையில் இவன் என்னைத் திண்டப் போவதில்லை. இவளை நான் எப்படியாவது தூக்கிக் கொண்டுபோய் ஒளித்து வைத்து, பிறகு இவனுடைய காதலைப் பெற வேண்டும்" என்று தீர்மானித்து அதிகாலையில் ஆசிரமத்துக்குள் நுழைந்தாள். ராமன் தடாகத் தண்டை சந்தி உபாசனையிலிருந்தான். சீதை ஆசிரமத்தி லிருந்தாள். தனியாக இருந்தாள். இவளைத் தூக்கிப் போக இதுதான் சமயம் என்று எண்ணினாள். அண்டையில் சோலையில் லக்ஷ்மணன் இருப்பதைப் பார்க்கவில்லை.

"வந்து நோக்கினள்,
வள்ளல்போய் ஒருமணித்
தடத் துச்
சந்தி நோக்கினன்
இருந்தது கண்டனள்;
தம் பி
இந்து நோக்கிய
நுதலியைக் காத்(து)அயல்
இருண் ட
கந்தம் நோக்கிய
சோலையில் இருந்தது
கா ணாள்.

"தனிஇ ருந்தனள்,
சமைந்த(து)என் சிந்தனை
தாழ் உற்(று)
இனிஇ ருந்தேனக்(கு)
எண்ணுவதுஇல்' என
எண் ணாத்
துனிஇ ருந்தவல்
மனத்தினள் தோகையைத்
தொடர்ந் தாள்;
கனிஇ ரும்பொழில்க்
காத்தயல் இருந்தவன்
கண் டான்."

லக்ஷ்மணனுக்குச் சீதைமேல் யாரோ ஒருத்தி பாய்ந்ததாகத் தெரிந்தது. "நில்!" என்று சப்தம் போட்டுப் பாய்ந்தான். மயிரைப் பிடித்து உதைத்து வாள் உருவினான். அரக்கி தன்னுடைய பருத்த உருவத்தைக் கொண்டு லக்ஷ்மணனைத் தாக்கி ஆகாயத்தில் கிளம்பிப் போகப் பார்த்தாள். லக்ஷ்மணன் அவளை எளிதில் பிடித்துத் தள்ளி அங்கவீனம் செய்து விட்டு, "துஷ்டை, ஜாக்கிரதை!" என்று எச்சரித்து, "போ" என்று துரத்தி விட்டான்.

சூர்ப்பனகை அப்போது தன் உண்மை உருவத்தோடு இரத்தப்பெருக்காக ஓடித் தன் இனத்தாரைப் பெயரிட்டுச் சொல்லி பலமாகப் புலம்பினாள்.

"உரம்நேரிந்து விழ,என்னை
உதைத்துருட்டி மூக்கரிந்த
நரன்இருந்து தோள்பார்க்க,
நான்கிடந்து புலம்புவதோ!
கரன்இருந்த வனம்அன்றோ;
இவைபடவும் கடவேனோ!
அரன்இருந்த மலைஎடுத்த
அண்ணாவோ! அண்ணாவோ!"

"ஓ தம்பி கரனே, ஓ அண்ணா ராவணனே, ஓ இந்திரஜித்தே!"

"தானவரைக் கருஅறுத்துச்,
சதமகனைத் தளையிட்டு,
வானவரைப் பணிகொண்ட
மருகாவோ! மருகாவோ!

"கல்லீரும் படைத்தடக்கை
அடல்கரது டணர்முதலா
அல்லீரும் கடர்மணிப்பூண்
அரக்கர்குலத்(து) அவதரித்தீர்!
கொல்லீரும் படைக்கும்ப
கருணனைப்போல்க் குவலயத்துள்
எல்லீரும் உறங்குதிரோ?
யான்அழைத்தல் கேளீரோ?"

என்று அரக்கிக்கு உள்ள பலமான தொண்டையைச் செலுத்திப் புலம்பினாள்.

* * *

இது கம்பருடைய சித்திரம். சூர்ப்பனகை ராக்ஷஸப் பிறப்பை மறைத்துக் கொண்டு, ஒரு அழகிய பெண்ணுருவம் தரித்து, ராமனை வரித்தாள் என்பது கம்பருடைய கைவேலை. அதன்மேல் கவியின் சக்தி தன் பாட்டுக்கு வேலை செய்கிறது. வால்மீகி ராமாயணத்திலும் சூர்ப்பனகை "காமரூபிணி" என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது இஷ்டப் பட்ட வடிவத்தை எடுத்துக் கொள்ளும் சக்தி வாய்ந்தவள். ராமனைக் கண்டு மோகித்ததும், இந்தச் சக்தியைப் பயன்படுத்திக் கொண்டதும் இயற்கை நிகழ்ச்சியாகும்.

# இலக்கிய மாமணி!

ஜெயமணி

அமெரிக்காவிலே ஓர் இளைஞனின் வாழ்க்கையில் நிகழ்ந்த அற்ப சம்பவம் அந்த நாட்டின் விதியையே அடியோடு மாற்றி விட்டது. வாஷிங்டன் என்ற இளைஞன் தன்னுடைய பதினாலாவது வயதில் பிரிட்டிஷ் கடற்படையில் சேர விரும்பினான். அவனது விருப்பம் நிறைவேறுவதற்குச் சூழ்நிலை இடம் கொடுக்கவில்லை. அந்தச் சூழ்நிலையே அமெரிக்காவுக்கு வரப்பிரசாதமாகியது.

வாஷிங்டன் பிரிட்டிஷ் கடற் படையில் சேர்ந்திருந்தால்,அவர் பிரிட்டிஷ்சர்க்காரிடம் விசுவாசம் உள்ளவராக மாறியிருப்பார். எனவே, அவர் பிரிட்டிஷாரை எதிர்த்து அமெரிக்கப் புரட்சிப் போரை நடத்தியிருக்க முடியாது. புரட்சி யுத்தம் நடக்கவில்லையெனில், அமெரிக்கக் குடியரசே உருவாகியிருக்க முடியாது. குடியரசு இல்லையெனில், வாஷிங்டன் அகில உலகப் பிரசித்தி பெற்ற ஜெனரல் வாஷிங்டனாகவும், உலக சரித்திரம் போற்றும் அமெரிக்காவின் முதல் ஜனாதிபதியாகவும் வந்திருக்க முடியாது.

அது போலவே, பல ஆண்டுகளுக்கு முன் திருச்சி நேஷனல் கல்லூரி இண்டர் முதல் வருஷ வகுப்பில் வாசித்துக்கொண்டிருந்த ஓர் இளைஞர் சிறந்த தென்னாட்டுத் தலைவர்களில் ஒருவரான டி. சே. சௌ. ராஜனின் பிரசங்கத்தைக் கேட்க நேர்ந்தது. அச் சிறிய சம்பவம் அந்த இளைஞரின் வாழ்க்கையையே அடியோடு மாற்றியதுடன், தமிழ் இலக்கியத்துக்கு வரப்பிரசாதமாக அமைந்தது.

டாக்டர் ராஜனின் பிரசங்கத்தைக் கேட்டு 1921-ம் ஆண்டிலே காந்தி மகானின் முதலாவது சத்தியாக்கிரகப் போரில் குதித்த அந்த இளைஞர் ராஜத் துவேஷக் குற்றம் (Sedition) சாட்டப்பட்டு மாஜிஸ்திரேட் முன்னிலையில் நின்றார்.

"உனக்கு 'ஸெடிஷன்' என்றால் என்ன என்று தெரியுமா?" என்று கேட்டார் மாஜிஸ்திரேட் இளைஞரைப் பார்த்து.

அந்த இளைஞர் 'எனக்குத் தெரியாது' என்று பதில் அளிப்பார், "சரி, இது முதல் தடவை. நீ அறியாப் பிள்ளை யானதால் உன்னை இப்போது விடுதலை செய்கிறேன். இனி அத்தகைய தவறான வழியில் செல்லாதே" என்று எச்சரித்து விடலாம் என்று மாஜிஸ்திரேட் எண்ணினார்!

ஆனால், அந்தக் கேள்விக்கு இளைஞர் அளித்த பதில் மாஜிஸ்திரேட்டைத் தூக்கி வாரிப் போட்டது.

"ஓ! 'ஸெடிஷன்' என்றால் என்ன என்பது எனக்கு நன்றாகத் தெரியுமே! அந்தக் கைங்கர்யத்தைத்தானே இப்போது நான் செய்து வருகிறேன்" என்று பளிச்சென்று பதில் கொடுத்தார் அந்த இளைஞர்.

அவ்வளவுதான்! அதன் பலனாக ஒரு வருஷம் சிறைத் தண்டனை கிடைத்தது!

அந்த இளைஞர்தான் அகில இந்தியாவிலும் 'கல்கி' என்று புகழ் பெற்ற ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள். இளம் வயதில் தேசபக்தி காரணமாக, கல்கி கலாசாலைப் படிப்புக்கு முற்றுப் புள்ளி வைத்து விட்டு வெளியே வந்திராவிடில், அவரது வாழ்க்கை உத்தியோக வாழ்க்கையாக முடிந்திருக்கும். தென்னாடும் தேனினும் இனிய தமிழ் மொழியும் அவரது மகத்தான இலக்கியத் திருப்பணியை இழந்திருக்கும்.

* * *

இலக்கியத்தில் நோபல் பரிசு பெற்ற ருட்யார்ட் கிப்ளிங், கால்ஸ் ஓர்த்தி போன்ற உலகப் பிரசித்திபெற்ற ஆசிரியர்களின் நூல்களைக் காட்டிலும் கல்கியின் நூல்கள் பன்மடங்கு உயர்ந்தவை என்று கூறுவதை யாரும் ஆட்சேபிக்க முடியாது.

"சிவகாமியின் சபதம்," "பொன்னியின் செல்வன்" முதலிய சரித்திர இலக்கியச் செல்வங்கள் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப் பட்டிருக்குமாயின், கல்கி அவர்களுக்கு நிச்சயமாக நோபல் பரிசு கிடைத்திருக்கும்.

ஆனால், நோபல் பரிசைக் காட்டிலும் மேலான பரிசை அவர் பெற்று விட்டார்! ஆம், லட்சக்கணக்கான மக்களின் பெருமதிப்பும் பேரபிமானமும் நோபல் பரிசைக் காட்டிலும் ஆயிரம் பதினாயிரம் மடங்கு உயர்ந்தவை அல்லவா?

* * *

கல்கி அவர்கள் "சோலைமலை இளவரசி" என்ற கதையை எழுதிக் கொண்டிருந்த போது, அதன் இணையற்ற இலக்கியச் சுவையை ரசித்து ரசிகமணி டி. கே. சி. அவர்கள் ஒரு நண்பருக்குக் கடிதம் எழுதியிருந்தார்:

"சோலைமலை இளவரசிக் கதை இந்தக் குற்றாலத்தைச் சுற்றி ஓடுகிற கதை. இங்குள்ளவர்கள் கதையை ஒருவிதமான வெறியோடு வாசிக்கிறார்கள். இனிமேல் எங்களுக்குக் குன்றுகளும் பாறைகளும் உறவாய் விடும். எங்களோடு வாய் விட்டுப் பேசும். தமிழ் இலக்கியச் சுவையை நன்கு உணர்ந்து அனுபவிக்கும் தன்மை ஏற்படும்."

இவ்விதம் ரசிகமணி மிகுந்த உற்சாகத்துடன் குறிப்பிட்டிருந்தார்.

நாமகளின் பூரண அருள் பெற்ற அத்தகைய இலக்கிய மாமணி கல்கியின் ஞாபகச் சின்னமாக விளங்கும் "கல்கி" பத்திரிகைக்குத் தமிழ்ப் பெருமக்கள் என்றென்றும் அமோக ஆதரவு அளித்து வருவார்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

# ஹாஸ்யக் களஞ்சியம்!



நாளுக்கு நாள் நாதஸ்வரம், நல்ல காலம் இப்படி யெல்லாம் ஆகாமல்......



இந்த மாதிரி நீண்டு வருகிறது! இத்துடன் நிற்குமா?



"சாரீரம் கூடு ஏறவில்லே, புகைகிறது!"
"அப்படியா? நீங்கள்தான் அவருடைய விசிறியாச்சே! போய்ப் பற்ற வையுங்களேன்!"





"ஒரு விக்ஞாபனம்... ஷட்ஜத்துக்கு ஜலம் போதாது!"




"வித்வான் ரொம்பத் தமாஷாகப் பாடுவார் என்று யாரோ சொல்லி விட்டார்! அதுதான் பையன்கள் ஏகக் கூட்டமாக வருகிறார்கள்!"




"கச்சேரிக்கு வருவதற்குக் கொஞ்ச நேரம் ஆகி விட்டது!"


"இதற்குத்தான் பாலுவை அழைத்து வர வேண்டாம் என்று சொன்னேன். பாருங்கள்! பாடகர் வாயில் பட்டாணியைப் போடுகிறான்!"


எனக்கும் பானையைத் தூக்கிப் போடத் தான் தெரியும்... பிடிக்கத் தெரியாது! நகர்ந்து விடுங்கோ!


சீக்கிரம்; ரயிலுக்கு நாழியாச்சு

சாமா


"அவர்களில் பாடுவது யார் என்று தெரியவில்லையே!"


" நான் வந்து நிச்சயம் இலவசக் கச்சேரி செய்கிறேன்!"
- சரி! நீங்கள் வரும்போது நாலு புட்டி சோடாக்களும், இரண்டு தேங்காய் மூடிகளும் வாங்கி வந்து விடுங்கள்!"

# தங்க மாம்பழம்

பாப்பா மலர் தொடர்கதை

## 14. பறி போய் விட்டது!

தீரவி தமது தொண்டையை ஒரு முறை கனைத்துக் கொண்டு சொல்ல ஆரம்பித்தார்: "பிரபாகரா, கல்லறைத் தீவுக்குப் போகும் பாதை மிகவும் பயங்கர மானது. வழியில் மரங்கள் அடர்ந்த காடு ஒன்று இருப்பதாகச் சொன்னேனல்லவா? அந்தக் காட்டைத் தாண்டுவதே சிரமமான காரியம். சிங்கம், புலி முதலிய கொடிய மிருகங்களுள்ள அக்காட்டைத் தாண்டினால் அடுத்தாற் போல் பெரிய பாலைவனம் இருக்கிறது. பாலைவனம் என்றால் மரம், புல், பூண்டு எதுவுமிருக்காது. வெய்யில் நெருப்பாய்த் தகிக்கும். அதைக் கடந்து செல்லவே முடியாது. அந்தக் கல்லறைத் தீவின் சொந்தக்காரரோ, அல்லது அவரைச் சேர்ந்தவர்களோ அந்தப் பாலை வனத்தைக் கடப்பதற்காக ஒரு ஒட்டகம் வளர்க்கப்பட்டு வருகிறது. அதன் மூலம் தான் பாலைவனத்தைக் கடக்க வேண்டும். வேறு வாகன வசதி எதுவும் கிடையாது. பிரபாகரா, உனக்குத் தீவு என்றால் என்ன வென்று தெரியுமா? நாலு பக்கங்களிலும் தண்ணீர்சூழ்ந்த நிலப்பரப்பு. உமா, உனக்குத் தெரியுமா?" என்று கேட்டார்.

"எனக்குத் தெரியும். நாங்கள் சிறையிலிருந்து வயற்காட்டுக் கிழவியின் வீட்டு அறையிலிருந்தபோது, எங்களுக்குப் படிக்கச் சில புஸ்தகங்கள் கொடுத்தாள். நாங்கள் இருவரும் அவற்றைப் படித்து வந்தோம். அவைகளிலிருந்து நான் சில விஷயங்கள் தெரிந்து கொண்டிருக்கிறேன்" என்றாள்.

"ஆமாம். கிழவி எங்களுக்கு அந்த வகையில் பெரிய உபகாரம் செய்து வந்தாள். அது இருட்டு அறை. இருட்டு அறையாக இருந்தாலும், எங்களுக்குக் கொஞ்சம் பிரகாசத்துக்காக ஏற்றி வைத்துக் கொள்ளுவதற்கு மெழுகுவர்த்தி கொடுத்திருந்தாள். அதன் உதவியால் தான் எங்களால் படிக்க முடிந்தது" என்றான் பிரபாகரன்.

"அப்படியா? ரொம்ப சந்தோஷம். நீங்கள் இருவரும் ரொம்ப புத்திசாலிகள். எல்லாம் தெரிந்து வைத்திருக்கிறீர்கள். சரி, மேலே சொல்லுகிறேன், கேளுங்கள். பாலைவனத்தைக் கடந்து சென்றால் கல்லறைத் தீவு உங்களுக்கு இலேசாகத் தெரியும். அந்தத் தீவில் பளிங்குக் கற்களினால் கட்டப்பட்ட ஒரு சிறிய மண்டபமும் தெரியும். அந்த மண்டபத்துக்குத்தான் கல்லறை என்று பெயர். அந்தக் கல்லறை ஒரு பெரிய ஏரியின் நடுவில் உள்ள தீவில் அமைக்கப் பட்டிருப்பதால், அதற்கு அந்தப் பெயர் வந்தது. ஏரியில் பலவிதமான பயங்கர நீர்வாழ் ஜந்துக்கள் இருக்கின்றன. நீந்திச் செல்லுவது என்பது முடியாத காரியம். கல்லறைத் தீவுக்குப் போவதற்கென்றே ஒரு சிறு படகு ஏரிக்கரைக்குச் சமீபத்தில் ஒரு மரத்தில் கட்டப்பட்டிருக்கும். அது தீவின் சொந்தக்காரருடைய படகாதலால் அவர்களுக்குத் தேவைப்படும்போது அதைச் செலுத்திக் கொண்டு போவார்கள்.

"அந்தப் படகு பார்ப்பதற்குச் சிறு வீடு மாதிரி அழகாயிருக்கும். உள்ளே உட்

ராஜி

கார்ந்து செல்வதற்கு நல்ல மெத்தை தைத்த ஆசனங்கள் போட்டு ஜோரா யிருக்கும். படகைச் செலுத்தத் துடுப்புகள் படகில் தயாரா யிருக்கும். அந்தப் படகின் உள்ளேயும் வெளியேயும் நிறையக் கண்ணாடிகள் அமைக்கப் பட்டிருக்கும். அவை சாதாரணக் கண்ணாடிகள் அல்ல; பூதக் கண்ணாடிகள். அதாவது அவற்றில் உங்கள் உருவங்களைப் பார்த்தால் பூதங்கள் மாதிரி மிகப் பெரிதாகத் தெரியும். மேற்படி படகில் ஏறிப் பிரயாணம் செய்ய விரும்புகிறவர்களைப் பயமுறுத்த வேண்டும் என்ற எண்ணத்துடனேயே அந்தக் கண்ணாடிகள் அமைக்கப் பட்டிருக்கின்றன. கல்லறைத் தீவுக்குப் போக இத்தனை சிரமங்கள் இருக்கின்றன. நான் இதுவரையில் சொல்லி வந்தவைகள் எல்லாம் பலர் சொல்லக் கேள்விப் பட்டவை தான். நான் நேரில் பார்த்ததில்லை. இந்தா, தங்க மாம்பழத்தைச் சர்வ ஜாக்கிரதையாக வைத்துக் கொள். இது தவறிக் கீழே விழுந்து உள்ளே இருக்கும் கண்ணாடிக் கூடுகள் உடைந்து விடாமல் நீ பார்த்துக்கொள்ள வேண்டும்!'' என்று கூறிப் பிரபாகரனிடம் மாம்பழத்தைக் கொடுத்தார் துறவி. பிரபாகரன் அதை வாங்கிப் பையில் போட்டுக் கொண்டான்.



''தாத்தா, நீங்களும் எங்களுடனேயே வாருங்கள். நாங்கள் பயமில்லாமல் இருப்போம்!'' என்றாள் உமா.

துறவி சிரித்துக் கொண்டே, ''பயப்படாதே, உமா. கடவுள் நல்ல காரியங்களுக்கு எப்போதும் துணை புரிவார். நான் எதிலும் விருப்பு வெறுப்பு இல்லாத துறவி. எனக்குச் சம்பந்தம் இல்லாத காரியங்களில் நான் தலையிட மாட்டேன். நீங்கள் இருவரும் உலகம் தெரியாத இளம் பிராயத்தினர்களா யிருக்கிறீர்களே என்று உங்களிடம் ஒரு அநுதாபம் பிறந்தது. அதன் காரணமாக ஏதோ கல்லறைத் தீவைப் பற்றி எனக்குத் தெரிந்த வற்றைச் சொன்னேன். நான் சொல்லி வந்தவைகள் உங்களுக்குப் பிரயோஜனப் பட்டால் எனக்கு மிகவும் சந்தோஷமா யிருக்கும். சரி, நாம் பேசிக் கொண்டே யிருந்து விட்டதில் நேரம் போனதே தெரியவில்லை. விடியும் நேரம் நெருங்கிவிட்டது. நான் போய் வருகிறேன்!'' என்று கூறிவிட்டு அங்கிருந்து புறப்பட்டார்.



அவர் உருவம் மறையும் வரையில் பிரபாகரனும் உமாவும் அவரையே பார்த்த வண்ணமாக நின்றுவிட்டு, பிறகு மீண்டும் திண்ணையில் படுத்துச் சற்று நேரத்தில் அயர்ந்து தூங்கி விட்டார்கள்.

''எழுந்திருங்கள், எழுந்திருங்கள்! இது என்ன சத்திரம் என்று நினைத்துக் கொண்டீர்கள்?'' என்று சற்று அதிகார தோரணையுடன் கத்தினான், கோவில் சிப்பந்தி. உமாவும் பிரபாகரனும் அவசர அவசரமாக எழுந்தார்கள். இருவரும் தெப்பக்குளத்தில் கைகால்களைக் கழுவிக் கொண்டு சுவாமியைத் தரிசனம்செய்துவிட்டுக்கோவிலுக்குவெளியே வந்தார்கள்.

இரவில் சரியாகத் தூங்காததினால் அவர்களால் வேகமாக நடக்க முடியவில்லை. அவர்கள் நடந்து சென்ற ரஸ்தாவில் ஜன நடமாட்டம் அதிகமா யிருந்தது. கூட்டத்தோடு நடந்து போவது அவர்களுக்கு உற்சாகமா யிருந்தது.

நேரம் ஆக ஆக, சந்தைக்குச் செல்லும் கூட்டம் அதிகமாகிக் கொண்டு வந்தது. தனவந்தர்கள் மோட்டார்களில் வந்து கொண்டிருந்தார்கள். சிலர் குதிரை வண்டிகளில் போய்க் கொண்டிருந்தார்கள். கிராம வாசிகள் திறந்த இரட்டை மாட்டு வண்டிகளில் சென்று கொண்டிருந்தார்கள். மற்றவர்கள் கூட்டம் கூட்டமாகச் சந்தையை நோக்கிப் போனார்கள்.

சந்தை ஒரு ஜன சமுத்திரமாகக் காட்சியளித்தது. சந்தைக்கு என்று ஒதுக்கப் பட்டிருந்த இடம் சுமார் ஒரு மைல் நீளமும் ஒரு மைல் அகலமுமுள்ள மைதானம். அந்த மைதானத்தின் நான்கு பக்கங்களிலும் தென்னை ஓலையினால் அமைக்கப்பட்டிருந்த பந்தல் பார்ப்பதற்கு அழகாக இருந்தது. அதில் ஏராளமான கடைகள் இருந்தன. மைதானத்தைச் சுற்றிலும் ஆங்காங்கே பல மரங்கள் காணப்பட்டன. கூலி ஆட்கள் கூடைகளைத் தூக்கிக் கொண்டு அங்கும் இங்குமாகப் போய்க் கொண்டிருந்தார்கள்.

மாம்பழக் கடைகள் நிறைய இருந்தன, அதுவும் மாயா மகேந்திரபுரத்திலும் அதைச் சுற்றியுள்ள வட்டாரங்களிலும் பெரிய மாந்தோப்புகள் இருந்தமையால் சந்தையில் மாம்பழக் கடைகள்தான் அதிகம். மாம்பழங்களில் பலவிதமான வகைகள் வந்திருந்தன. மாம்பழங்கள் இருந்தால் குரங்குகளுக்குக் கொண்டாட்டம்தானே! அதனால் கூட்டம் கூட்டமாகக் குரங்குகள் சந்தையைச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டு ஏமாந்தவர்களிட மிருந்து எப்பொழுது சாமான்களைப் பறித்துக்

கொள்ளலாமென்று காத்துக் கொண்டிருந்தன. நேரம் ஆக ஆகக் கூட்டம் அதிகரித்தது. வியாபாரமும் பெருக ஆரம்பித்தது.

"அண்ணா, நான் சந்தையைப் பார்த்ததே இல்லை. கொஞ்ச நேரம் இருந்து வேடிக்கை பார்த்து விட்டுப் போகலாமா?" என்று கேட்டாள் உமா.



பிரபாகரனுக்கும் உமாவைப்போலச் சற்றுநேரம் தங்கி விட்டுப் போக வேண்டும் என்று ஆசை. அதனால் உமா சொன்னவுடன் 'சரி' என்று ஒப்புக் கொண்டான். எங்கு பார்த்தாலும் கூட்டமாக இருந்த படியால் உட்கார்ந்து வேடிக்கை பார்ப்பதற்குத் தகுந்த இடத்தைத் தேடிக் கொண்டிருந்தார்கள். கடைசியில் அங்கிருந்த ஒரு பெரிய ஆல மரத்தடியில் உட்கார்ந்தார்கள்.

உமா, "அண்ணா, அண்ணா! நான் அந்தத் தங்க மாம்பழத்தைச் சரியாகவே பார்க்கவில்லை. அதைக் கொடு, அண்ணா. பார்த்து விட்டுத் தருகிறேன்" என்றாள்.

"உமா, வேண்டாம். இந்தச் சந்தைக் கூட்டத்தில் அதை யாராவது பார்த்து விட்டால் ரொம்பவும் விபரீதமாய்ப் போய் விடும்" என்றான் பிரபாகரன்.

"அண்ணா, நான் பார்த்துவிட்டு உடனே கொடுத்து விடுகிறேன். அதை இங்கே யார் பார்க்கப் போகிறார்கள்? சந்தையில் தான் நிறைய மாம்பழங்கள் விற்கின்றனவே! என் கையில் இருப்பதும் ஒரு நிஜ மாம்பழம் என்று அதைப் பார்ப்பவர்கள் நினைத்துக் கொள்ளுவார்கள். நீ கவலைப் படாதே, அண்ணா" என்று உமா சொன்னாள்.



உடனே பிரபாகரன் தங்க மாம்பழத்தை உமாவிடம் கொடுப்பதற்காகத் தன் கையைப் பைஜாமாப் பையில் விட்டான்.

அந்தச் சமயத்தில் சந்தையில் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. அந்தப் பரபரப்புக்குக் காரணம் சந்தைக்கு, குதிரையின் மேல் வந்து கொண்டிருந்த ஒரு குதிரை வீரன்தான். அந்தக் குதிரை வீரன் வீரப்பதேவனே. வீரப்ப தேவன் மெதுவாக இங்கும் அங்கும் கவனமாகப் பார்த்துக் கொண்டே மெதுவாகக் குதிரையின்மீது சவாரி செய்து கொண்டு வந்தான். வீரப்ப தேவனை அநேகமாக அங்கு வியாபாரம் செய்யும் கடைக்காரர்களுக்கு நன்றாகத் தெரியும். அதுவும் அரசனுடைய அந்தரங்கச் சேவகன் என்பதைப் பலபேர் அறிவார்கள். ஆதலால், அவன் குதிரைமீது சவாரி செய்துகொண்டு வரும் பொழுது யாவரும் அவனுக்கு வந்தனம் தெரிவித்தபடி இருந்தார்கள். ஆனால் வீரப்பதேவனின் கவனம் வேறு எங்கேயோ சென்றிருந்தது போலத் தோன்றிற்று. மெதுவாக வந்து கொண்டிருந்த வீரப்பதேவன் திடீரென, 'டக்' என்று குதிரையை நிறுத்திக் கீழே இறங்கினான். அவன்குதிரையைத் திடீரென்று நிறுத்தியதைக் கண்ட பக்கத்தில் இருந்தவர்கள் பயந்தே போனார்கள். அவன் திடீரென்று குதிரையை நிறுத்தியதற்கு முக்கிய காரணம் அவன் பார்வை மரத்தினடியில் உட்கார்ந்திருந்த பிரபாகரன்மீதும் உமாவின் மீதும் சென்றது தான். வீரப்பதேவனை அவர்கள் இருவரும் பார்க்கவில்லை. குதிரையை ஒதுப்புறமான ஓர் இடத்தில் கட்டிவிட்டு வீரப்பதேவன், ஒரு கடையின் ஓரமாக நின்று பிரபாகரனையும் உமாவையும் பார்த்துக் கொண்டிருந்தான். அப்பொழுது ஒரு மாம்பழக் கடைக்காரன் சிறு முக்காலியைக் கொண்டு வந்து மரியாதையோடு போட்டு வீரப்ப தேவனை அமரச் செய்தான்.

கையில் மாம்பழத்தை வாங்கிக்கொண்ட உமா "அண்ணா, இந்த மாம்பழம் எவ்வளவு பளபளப்பாக இருக்கிறது பார்த்தாயா? நிஜ மாம்பழத்தைப் போலவே தோற்ற மளிக்கிறதே. இதை யாரும் பொய் மாம்பழம் என்று சொல்ல மாட்டார்கள்!" என்று சொன்னாள்.

"ஆமாம். அதற்கென்ன சந்தேகம்? முதலில் இந்த மாம்பழத்தைப் பார்த்தபொழுது நானும் நிஜ மாம்பழம் என்றுதான் நினைத்தேன்" என்று பதில் சொன்னான் பிரபாகரன்.

"அண்ணா, சாவி போட்டுத் திறப்பதற்காக ஒரு துவாரம் இருப்பதாகச் சொன்னாயே. அதைத்தான் நான் நன்றாகப் பார்க்கப் போகிறேன்" என்று எழுந்து நின்றாள். மரத்தின் மேலே சாய்ந்தபடியே தங்க மாம்பழத்தைத் திருப்பித் திருப்பிப்

# அமரன் பேர் வாழியவே!

கொத்தமங்கலம் சுப்பு

நல்ல நல்ல உபகாரி நான்வாழப் பாதையிட்டு
வல்லமையாய்ப் பாட்டெழுத வழிகோலித் தந்துவிட்டு,
செல்லரித்த அரசியலைச் சீர்திருத்தம் செய்ய எண்ணி
அல்லு பகல் பாடுபட்டு அமரராய் ஆகிவிட்டார்!

ஆட்டுரலின் ஓசையைப் போல் அடுக்குமொழிப் பேச்சுகளும்
பாட்டியம்மா பாஷைகளும் பஞ்சாங்கக் கலப்படமும்
நாட்டைக் கலக்கி வந்த நாளிலே கல்கி வந்து
வீட்டுக்கு வீடு விருந்திட்டார் தன் தமிழால்!

கதையெழுதும் அவர் கைக்குக் கடகமிட்டுப் பாராமல்
சிதையிலே அக்கரங்கள் தீய்ந்ததெனக் கேட்டேனே!
பதைபதைக்கும் எண்ணத்தைப் பாட்டிலே கொட்டுதற்கும்
இதயத்தை அப்படியே எழுதிட நான் கல்கிஅல்ல!

பாட்டுக்கு ஒரு புலவர் பாரதியார் வந்ததுபோல்
நாட்டுடைய புண்ணியத்தால் நாம்செய்த தவப்பயனால்
கதைக்கு ஒரு புதல்வர் கல்கியென அவதரித்தார்
விதிக்குப் பொறுக்கவில்லை விண்ணுலகம் சகிக்கவில்லை

சொல்லாழம் பொருளழகு சோர்வில்லா நீர்வீழ்ச்சி
நல்லதையே தான்எழுத நாணமில்லா நல்லகுணம்
எல்லாரும் படிச்சிடலாம் இலக்கணமும் குறையில்லை
கல்லாலின் கீழமர்ந்த கடவுள்மொழி கல்கிதமிழ்

தமிழெழுத்தை மாற்றிவைத்த தருமதுரை கல்கியுட
தலையெழுத்தை மாற்றி வைக்கச் சதுர்முகனால் முடியலியோ
அவனெழுத்தை வெற்றி கொள்ள அவனியிலே யாருமின்றி
அயனெழுத்தால் வென்றுவிட ஆசையுந்தான் கொண்டானோ

ஆண்டவன் வாசலிலும் அருகில் வரவொட்டாமல்
தீண்டாத கலையாக்கித் திதென்ற நாட்டியத்தைத்
தித்தித்தோம் ஓசையின்று தெருவெல்லாம் முழங்கவைத்த
உத்தமப் பேனாவும் உங்கள் கை வன்மையன்றோ!

வித்தைப் பொறுமைகளை விழலாக்கி வைத்தவனே
குத்தம் குறைசொன்னால் குளிர் முகமாய்க் கேட்பவனே
கத்தை கத்தை யாய்எழுதிக் காகிதத்தைக் கெடுக்காமல்
முத்து முத்தாய் எழுதி வைத்த உத்தமனே மறைந்தாயோ

கவிஞர்கள் பாடலிலே கல்கி என்றும் இருக்கின்றார்
கம்பரைப் படிக்கையிலே கல்கி என்றும் இருக்கின்றார்
செவி குளிரும் சங்கீதம் கேட்கையிலே இருக்கின்றார்
செந்தமிழ் இருக்குமட்டும் சிரஞ்சீவி அவர் நாமம்!

காசினியோர் கொண்டாடும் கல்கியென்ற பேர்வாழி
மாசில்லாப் பேனாவின் மணிமொழிகள் வாழியவே
தேசிகனும் வந்தோம் செந்தமிழைத் தழைக்க வைத்த
ஆசியக் கதை மன்னன் அமரன்பேர் வாழியவே!

பார்த்துக் கொண்டிருந்தான். "உமா, கீழே போட்டு விடாதே! ஜாக்கிரதை!" என்று சொல்லியபடியே தனக்கு எதிரே உள்ள கடையில் நடந்து கொண்டிருக்கும் மாம்பழவியாபாரத்தைக் கவனித்துக் கொண்டிருந்தான் பிரபாகரன்.

முக்காலியில் உட்கார்ந்திருந்த வீரப்ப தேவன் தங்க மாம்பழத்தை உமா கையில் வைத்துக் கொண்டிருப்பதைக் கவனித்துக் கொண்டே இருந்தான். உமா அதைக் கையில் வைத்துக் கொண்டு எழுந்து நின்றபொழுது தன்னை அறியாமலேயே அவன் முக்காலியிலிருந்து திடீரென்று எழுந்து நின்றுவிட்டான்.

'அடாடா! இந்தத் தங்க மாம்பழம் எத்தனை நாட்களாக, நமக்கு எப்படியெல்லாம் தொந்தரவு கொடுத்து வந்தது! இனிமேல் நான் ஏமாற மாட்டேன். அண்ணனும் தங்கையும் சரியானபடி ஏமாந்து போகப் போகிறார்கள். இப்பொழுது எப்படித் தப்ப போகிறார்கள், பார்ப்போம்! அடேயப்பா! தங்க மாம்பழம் மாத்திரம் என்னிடம் கிடைத்து விட்டடும். ஆகா!... இதுதான் சரியான சமயம். என்னையே அவர்கள் பார்த்ததாகத் தெரியவில்லை. தங்க மாம்பழத்தை அபகரிக்க ஏன் நான் இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ளக் கூடாது?' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான் வீரப்பதேவன்.

உடனே மெதுவாக, பதுங்கிறாற் போல் நடந்து உமாவின் பின்புறமாகச் சென்றான் வீரப்ப தேவன். மறுகணம் உமா, "ஐயோ, அண்ணா! தங்கமாம்பழம் போய்விட்டதே!" என்று அலறினாள். (தொடரும்)





ROCK HUDSON in Universal-International's "CAPTAIN LIGHTFOOT"

# நின்று வழி காட்டுவார்

ஸோமாஸ்

ஈடு இணையற்ற ஒரு தமிழ் எழுத்தாளரை, அன்பும் கருணையும் நிறைந்த ஒரு நண்பரை, மதிப்புக்கும் மரியாதைக்கும் உரிய ஓர் ஒப்பற்ற பத்திரிகை ஆசிரியரை, அறிவும் ஆராய்ச்சித் திறனும் கொண்ட ஓர் அரிய மேதையை, அருங்கலை வளர்ச்சியில் மட்டற்ற ஆர்வங் கொண்ட ஒரு கலை விமரிசகரைத் தமிழகம் இழந்து விட்டது.

ஆசிரியர் "கல்கி" அவர்களின் எழுத்துத் திறமை பிரகாசிக்காத துறையே தமிழகத்தில் இல்லை. உள்ளத்தைத் தொடும் அவரது சிறு கதைகள், மக்களின் மனப் பண்பை உயர்த்துவதில் முன்னணியில் நின்றன. அவர் பத்திரிகையில் எழுதிய அரசியல் தலையங்கங்கள் பொது மக்களைச் சரியானபடி அரசியல் விஷயங்களைப் புரிந்து கொள்ள வழி காட்டியாயிருந்தன. அவரது சங்கீத விமரிசனங்கள் சங்கீதக் கலைக்கே புத்துயிரூட்டின; அவர் தாம் நெருங்கிப் பழகின பல பிரமுகர்களைப் பற்றி எழுதிய கட்டுரைகள் விருப்பு, வெறுப்பு அற்ற முறையில் அமைந்து படிப்பவர்களுக்குச் சுவை யூட்டின!

அழுத்தமும், ஆணித்தரமான அபிப்பிராயமும், தெளிவும் கொண்ட சக்தி வாய்ந்த அவரது இணையற்ற தமிழ் நடை தமிழர்களுக்குப் புத்துயிரும் புது வாழ்வும் அளித்தது; புதிய புதிய தமிழ் எழுத்தாளர்கள் தோன்றுவதற்குக் காரணமாயிருந்தது; ஆயிரம் ஆயிரம் தமிழ் வாசகர்களைச் சிருஷ்டித்தது.

"கல்கி" அவர்களிடம் இருந்த அபூர்வப் பண்புகள் பல; அவற்றுள் முக்கியமானது, சேவை செய்வதில் அவருக்கு இருந்த ஆர்வம்தான். நோய் அவரைத் துன்புறுத்திய போதும் அவர் தாம் மேற்கொண்டுள்ள பொது நலச் சேவையிலிருந்து விலகிக் கொண்டதில்லை; எழுத்து, எழுத்து, எழுத்து! இதுவே அவரது வாழ்வின் ஜீவாதாரமாக இருந்து வந்தது. தம் எழுத்தில் அவருக்கு அளவற்ற நம்பிக்கை இருந்தது; அவர் எழுத்து தமிழ்ப் பொது மக்களுக்கு எல்லா விதங்களிலும் நம்பிக்கை ஊட்டி வந்தது; சோர்ந்து கிடப்பவர்களைத் தட்டி யெழுப்பியது; நகைச் சுவையின் உருவாய் நின்று, நகைச் சுவைப் பெரு நிதியை அள்ளி வழங்கியது; விளங்காத விஷயங்களை விரித்துரைத்து விளங்க வைத்து, தமிழன்பர்களுக்குத் தமிழின் சீரத்தை எடுத்துக் காட்டி உளங்குளிர வைத்தது; தமிழின் உயர்வை அறியாதவர்களுக்கு அவ் வுயர்வை அடித்துக் கூறியது.

"சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே" என்ற பாரதியாரின் வாக்கை மெய்ப்பிக்க வந்தவர் கல்கி. தமிழ் மொழியின் உயர்வை, தமிழ் மொழிக்குள்ள உணர்ச்சியை, தமிழ் மொழியின் வேகத்தை, தமிழ் மொழியின் பழமையை, அதன் சக்தியை அவர் எழுத்தில் அபரிமிதமாகக் காணலாம்.

தமிழில் எழுதலாம்; அரசியலைப் பற்றி எழுதலாம்; சங்கீதத்தைப் பற்றி எழுதலாம்; மற்றும் ஆய கலைகள் அனைத்தையும் பற்றி மக்கள் உள்ளத்தில் நன்கு பதியும் வண்ணம் எழுதலாம்; தமிழ் மொழியில் எழுதினால் தான் எல்லாக் கலைகளின் சிறப்பையும் தமிழர்களுக்கு நன்கு எடுத்துக் கூற முடியும் என்றெல்லாம் எல்லோருக்கும் அளவு கடந்த நம்பிக்கையை அளித்தவர், கல்கி அவர்கள்.

அவர் செய்த தொண்டுகளைப் பற்றி எவ்வளவு வேண்டுமானாலும் கூறலாம். அவற்றுள், மறைந்த புலவர்களுக்கும் மாபெரும் மனிதர்களுக்கும் நினைவுச் சின்னம் எழுப்பும் முயற்சியை அவர் மேற்கொண்டு அதில் வெற்றியும் கண்டதைப் பற்றி எவ்வளவு கூறினாலும் போதாது. பாரதியின் உயர்வைக் கூறி அவர் நாமம் என்றும் எல்லோருடைய நாவிலும் நின்று நிலவும் வண்ணம் செய்தவர் கல்கி அவர்கள்தான். அவர் முயற்சி எடுத்து முடித்த மேற்படி நினைவுச் சின்னங்களில் கல்கி அவர்களின் நினைவும் பொன்னெழுத்தில் பொறிக்கப்பட்டிருக்கும். மற்ற புலவர்களுக்கும் மகா புருஷர்களுக்கும் ஒவ்வொரு நினைவுச் சின்னம் தான் ஏற்படுத்தினர் கல்கி. ஆனால் அவற்றின் மூலம் தமக்குப் பலப்பல நினைவுச் சின்னங்கள் ஏற்படுத்திக் கொண்டார். பூத உடலில் ஒருவராய் இருந்த "கல்கி" அவர்கள், இன்று தமிழர்கள் அனைவருடைய உள்ளங்களிலும் அழியாப் புகழுடம்பில் நின்று நிலைத்து விட்டார்.

கல்கி அவர்கள் என்றும் சோர்ந்ததில்லை. ஊக்கம் குறைந்து உற்சாகம் குன்றியதில்லை. தளர்ந்து போய் எந்தக் கொள்கையையும் கை சோர விட்டதில்லை. அவர் நமக்கு விட்டுப் போன செல்வம் அதுதான். உற்சாகக் குறைவை அவர் சிறிதும் விரும்ப மாட்டார். ஆகவே, அவர் விடுத்துச் சென்ற பணிகளை நிறைவேற்றுவதில் உற்சாகம் காட்டுவதுதான் அவருக்குச் சிறந்த நினைவுச் சின்னமாகும்.

கல்கி அவர்களின் சக்தி வாய்ந்த எழுத்துக்களுக்கும் சிறு கதை இலக்கியங்களுக்கும் பீடமாக விளங்கும் "கல்கி" பத்திரிகையின் மூலம் அவர் என்றும் பொன்றாப் புகழுடம்பில் நின்று வழி காட்டுவார்; நம் சோர்வைப் போக்குவார்; சோகத்தை மாற்றுவார்; அமர உலகில் இருந்தாலும் அவர் உள்ளம் பொன்னியின் செல்வன் பிறந்த காவிரி நதி தீரத்திலும் தாம் பேரார்வத்துடன் நிறுவித் தளரா ஊக்கத்துடன் பேணி நடத்தி வந்த "கல்கி" ஸ்தாபனத்திலும், தமிழ் மொழியின் வளத்திலுமே நின்று நிலைபெற்றிருக்கும் என்பதில் ஐயமில்லை. இதைத் தவிர வேறு எவ்வகையில் ஆறுதல் பெற முடியும்!

## ஹாஸ்ய ஜோதி!

மாய்ந்ததே வசன மேதை!
மறைந்ததே ஹாஸ்ய ஜோதி!
காய்ந்ததே தமிழ்ப்பூஞ் சோலை!
கல்கியின் எழுது கோலே
ஓய்ந்ததே! மக்கள் உள்ளம்
உடைந்ததே கண்ணீர் வெள்ளம்
பாய்ந்ததே கல்கி வைத்த
பயிரெலாம் செழிக்கு மாறே!

சென்னை-2 — புத்தனேரி
15—12—54 — ரா. சுப்பிரமணியன்

# வசீகரத்தின் வழிகாட்டி



மெயில் கோச்சின் சின்னம்

நீங்கள் விரும்பும் மூஸான் லாவண்டர் டால்கம் பவுடரையும் வீலக் டால்கம் பவுடரையும் எடுத்துக் கொள்ளுங்கள். இவையிரண்டும் அழகிற்கு சம்பமான உபகரணங்கள். இவற்றின் நிகுந்த நறுமணம் யாவரும் விரும்பத் தக்கது. ஸ்நானத்திற்குப் பின் இவற்றை உபயோகித்து ஆனந்தமடையுங்கள். நீங்கள் வெளியே போகும் முன் இவற்றை உபயோகித்துச் சென்றால், உங்களை அடுத்துச் செல்லும் யாவரும் ஆச்சரியத்துடன் உங்களையே வெளிப்பதை அறிவீர்கள்.






**MOUSON**

மூஸான் டால்கம் பவுடரையும்

மூஸான் கம்பெனியாரால் ஜெர்மனியில் தயாரிக்கப்பட்டது
நூற்றைம்பது வருஷங்களுக்கு மேலாகப் புகழ் பெற்றது

---

கோதாரி அண்ட் சன்ஸ், நேபியர் சேம்பர்ஸ், பார்ஸி பஜார் தெரு, பம்பாய்-1

டிஸ்ட்ரிபியூட்டர்கள் :

மெஸர்ஸ் ஆர். எஸ். கௌடர் அண்ட் கம்பெனி
59, பந்தர் தெரு, சென்னை

## மறக்க மாட்டோம்!

தமிழுக்கும், தமிழ் மக்களுக்கும்' தமிழ் நாட்டுக்கும் சென்ற முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாக மிகச் சிறந்த முறையில் தொண்டாற்றிய ஆசிரியர் கல்கி அவர்களை யாரும் மறக்க மாட்டோம்.

தமிழகத்தில் இன்று வரை எந்தத் தமிழ் அறிஞருக்கும் கிடைக்காத மரியாதையைத் தமிழ் மக்கள் கல்கி அவர்களுக்குக் காட்டி வருகிறார்கள். இதை டிஸம்பர் 17உ ராஜாஜி மண்டபத்தில் நடந்த கல்கி நினைவுக் கூட்டத்தில் நன்றாகத் தெரிந்து கொள்ள முடிந்தது!

அன்று ராஜாஜி மண்டபம் நிறைந்து, அதன் ஆளோடிகளும் நிறைந்து, அதற்கும் வெளியில் மண்டபத்தைச் சுற்றிலும் மக்கள் குழுமியிருந்தனர்.

அன்று நடந்த கல்கி நினைவுக் கூட்டத்துக்கு ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் தலைமை வகித்தார். பல்வேறு துறைகளில் ஈடுபட்டு வரும் பல பிரமுகர்கள் உணர்ச்சியோடு பேசினார்கள்.

பேசிய ஒவ்வொருவரும் கல்கி அவர்களின் தொண்டைப் பலப்பல கோணங்களில் சிறப்பாக எடுத்துக் கூறினர்.

ராஜாஜி அவர்கள் கல்கி அவர்களின் எழுத்துத் திறனைத் தமக்கே உரிய பாணியில் மிகத் தெளிவாக எடுத்துக் கூறினார்கள். "கல்கி ஒரு விஷயத்தை எழுதும்போது விஷயத்தைக் குழப்பாமல் எழுதுவார். அவருடைய தமிழ் நல்ல சித்திரத்துக்குக் கண்ணாடி போட்டது போல் இருக்கும். கூர்ந்து பார்த்தால்தான் கண்ணாடி தெரிவது போல அவருடைய தமிழின் அழகு தெரியும்" என்று புகழ்ந்து கூறினார்.

"சங்கீதம் என்றால் ஒதுங்கிய எனக்கே 'கர்நாடகம்' என்ற புனை பெயரில் கல்கி எழுதிய சங்கீத விமர்சனங்கள் கவர்ச்சி யூட்டின. உண்மையில் கல்கியின் மறைவு சங்கீத உலகத்துக்குப் பெரிய நஷ்டம்" என்று மிகுந்த கவலையுடன் கூறினார்.

இன்னும் பலர் ஸ்ரீ கல்கி அவர்களின் திறமையைப் பாராட்டிப் புகழ்ந்து பேசினார்கள்: ஸ்ரீமான்கள் ரா. பி. சேதுப்பிள்ளை, ராஜா ஸர். முத்தையா செட்டியார், என். எஸ். கிருஷ்ணன், கி. வா. ஜகந்நாதன், கி. சந்திரசேகரன், டி. செங்கல்வராயன், சின்ன அண்ணாமலை, ம. பொ. சிவஞானம், எஸ். பாஷ்யம், காரணை துரைக்கண்ணன், புத்தனேரி சுப்பிரமணியம், பி. கோதண்டராமன், பகீரதன், ஸ்ரீமதிகள் லீலாவதி ராமசுப்ரமண்யம், வை. மு. கோதைநாயகி ஆகியோர் கல்கி அவர்களின் மேதையை விளக்கிக் கூறினார்கள்.

இந்த நினைவுக் கூட்டம் சென்னைத் தமிழ் எழுத்தாளர் சங்கம், உழைக்கும் பத்திரிகையாளர் சங்கம், கம்பர் கழகம், நாடகக் கழகம், தேசிய வாலிபர் காங்கிரஸ் ஆகியவற்றின் ஆதரவில் நடந்தது. இந்த நினைவுக் கூட்ட நிகழ்ச்சியைப் படங்களில் காணலாம். ***





1. ரஸிகமணி டி. கே. சி. அவர்களின் தலைமையில் நடந்த கம்பர் விழாவில் கல்கி ஆசிரியர் நகைச் சுவை ததும்ப இலக்கியச் சொற்பொழிவு நிகழ்த்தினார்.

2, யோகாசன நிபுணர் ஸ்ரீ வி. என். குமாரசாமி தமது "ஆரோக்கிய ரகசியம்" என்னும் நூலை ஆசிரியர் கல்கி அவர்களுக்குச் சமர்ப்பிக்கிறார். இரண்டு முகங்களும் மகிழ்ச்சியால் மலர்கின்றன.

3. எட்டையபுரம் பாரதியார் மண்டபத்துக்கு அஸ்திவாரக் கல் நாட்டிய ஸ்ரீ ராஜாஜி அவர்களுக்கு மலர் மாலை சூட்டி, சந்தன தாம்பூலம் வழங்கி மகிழ்கிறார்.

★ ★ ★

1. கவர்னர் ஜெனரல் ராஜாஜி அவர்களைச் சென்னை விமான நிலையத்தில் கவர்னர், முதன் மந்திரி முதலியவர்களுடன் ஆசிரியர் கல்கி வரவேற்றார்கள். வலது கோடியில் கையைக் கட்டிக்கொண்டு நிற்பவர் ஆசிரியர் கல்கி.

2. தஞ்சை பண்ணையாள் அவசரச் சட்டத்தை விளக்கிக் கூற ராஜாஜி அவர்களுடன் கல்கி ஆசிரியரும் தஞ்சை மாவட்டத்தில் சுற்றுப் பிரயாணம் செய்தார். மாயூரம் பொதுக் கூட்டத்தில் ஆசிரியர் கல்கி பேசுகிறார்.

3. சென்னையில் நடந்த அகில இந்திய எழுத்தாளர் மகாநாட்டில் ஆசிரியர் கல்கி பேசுகிறார். மேடையில் ஸ்ரீ தேவதாஸ் காந்தி, ஸ்ரீ துஷார் காந்தி கோஷ் முதலியோரைக் காணலாம்.




நெசவு நேர்த்தியுடையதும், அழகிய மோஸ்தரும், ரஸனை செழிப்பும் உன்னதமான கைத்தறிச் சேலை, சம்பிரதாயமான நெசவு முறையும், சமீபகால நாகரிகமும் ஒன்றுபொருந்தி, ஓவியத்தின் கவர்ச்சி பெற்ற ஆடையாக விளங்குகிறது.

பாரதநாட்டின் கைத்தறி நெசவாளர்கள் கலைச்சிறப்புடன் நெய்வதில் அவர்களுக்குரிய பாரம்பரைத்திறமைக்கும், விதவிதமான புதுப்புது அழகு மோஸ்தர்களை சிருஷ்டிக்கும் சாமர்த்தியத்திற்கும் பெயர்பெற்றவர்கள். பாரதநாட்டின் கைத்தறி ஜவுளிகள் நெசவு நேர்த்தி, பூர்த்தியழகு, மோஸ்தர், உழைப்புத்திறன் சகல அம்சங்களிலும் எப்பொழுதும் இணையற்று விளங்குகின்றன.

**கைத்தறித் துணிகளை வாங்குங்கள்**

- நீடித்துழைப்பவை
- அலங்காரமானவை
- தனிச்சிறப்புடையவை

நீங்கள் ஒவ்வொரு கெஜம் வாங்கும்போதும், பொருளாதார முன்னேற்றம் ஒரு படி உயரும்




AC.624TH

அகில இந்தியா கைத்தறி போர்டு,
மத்திய விற்பனை ஸ்தாபனம்,
1/155, மவுண்ட் ரோட், சென்னை-2..

# நினைவுச் சின்னம்

கே. இந்திரா

கண்ணீர் வழிந்தோட நின்ற ஜானகியை வைதேகி தேற்றினாள். புத்திர சோகத்தால் துடிக்கும் நெஞ்சுக்குத் தேறுதல் கூறி மீளுமா? ஜானகியின் துயரம் ஆறுதல் மொழிகளைக் கேட்டு அதிகரித்ததேயன்றிக் குறையவில்லை. 'கண்ணா கண்ணா' என்று ஒரே அரற்றல். ஆம், கண்முன்னே மின்னல் போல் ஒளியுடன் தோன்றி, நான்கு வயது வளர்ந்து, ஆடிப் பாடி எல்லாரையும் மகிழ் வித்த அவன் அருமைக் கண்ணனை இரண்டே நாள் ஜுரத்தில் காலன் அவளிட மிருந்து பிரித்துக் கொண்டு போய் விட்டான்.

தோழியைத் துக்கம் விசாரிப்பதற்காக வைதேகி வந்திருந்தாள், திருவல்லிக்கேணி யிலிருந்து மாம்பலத்துக்கு. வைதேகி விவாக மாகாத பெண். அப்போதே அவள் திரும்பிச் செல்ல வேண்டும். தோழியிடம் விடைபெற அவளால் முடியவில்லை. பையை எடுத்துக் கொண்டு துயரமே உருவாகக் கிளம்பினாள். அவள் போவதை மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்த ஜானகி ஏதோ நினைத்துக் கொண்டவள் போல் அவள் வாயிற்படி தாண்டினதும், "வைதேகி! வைதேகி!" என்று அழைத்தாள். அழுது அழுது அவள் தொண்டை கரகரத்துப் போயிருந்தது. திரும்பி வந்த வைதேகியைப் பக்கத்து அறைக்கு அழைத்துச் சென்று, தன் பெட்டி யைத் திறந்து ஒரு அழகிய வெள்ளித் தட்டைக் கையிலெடுத்தாள். வைதேகிக்கு ஒன்றும் புரியவில்லை. அவளுடைய முகம் கேள்விக் குறியாக மாறியது.

கண்ணீரைத் துடைத்துக் கொண்ட ஜானகி, "வைதேகி, நீ இதை எடுத்துச் சென்று பத்திரமாக வைத்திரு. என் அருமைக் கண்ணனின் சாப்பிடும் தட்டு இதுதான். அவ னுடைய நினைவுச் சின்னம் இது. என் கணவ ருக்குச் சென்ற வாரம் வேலை போய்விட்டது. மறுபடியும் வேலை ஏதாவது கிடைக்கும்வரை பொருள்களை விற்றுத்தான் சாப்பிட வேண் டும். ஒருவேளை இது இங்கிருந்தால் இதையும் அவர் விற்று விடுவார். என்னால் அதைப் பொறுக்க முடியாது. அவன் ஞாபகார்த்த மாக இதுவாவது என்னிடம் இருக்க வேண் டும். நான் மறுபடியும் கேட்கும் போது கொடுத்து விடு" என்று துயரம் நெஞ்சை யடைக்கக் கூறினாள்.

வைதேகியின் நெஞ்சு நெகிழ்ந்தது. மௌனமாகத் தட்டைக் கையில் வாங்கிக் கொண்ட அவள், "ஆமாம், உன்னுடைய கணவர் கேட்டால் என்ன பதில் சொல்லு வாயாம்?" என்று மெல்ல வினவினாள்.

"வைதேகி! உன்னிடம் சொல்வதற்கு என்ன? அவருக்குத் தெரியாமல் நான் ஐம்பது ரூபாய் வைத்திருக்கிறேன். தட்டைப் பற்றிக் கேட்டால் அதை விற்று விட்டதாகக் கூறி அந்தப் பணத்தைக் கொடுத்து விடு கிறேன். அவர் மனப்பான்மை முற்றிலும் வேறானது. கண்ணனின் நினைவாக ஏதாவது இருந்தாலும் அது துயரத்தைக் கிளப்பி விடு கிறதென்று கண் மறைவாக வைத்து விடு வார். அதனால் அவர் ஒன்றும் சொல்ல மாட் டார்" என்று கூறிய ஜானகி அந்த வெள்ளித் தட்டை வாங்கிப் பலமுறை முத்தமிட்டுக் கண்ணீர் பெருக்கினாள்.

★

இரண்டு மாதங்கள் கழிந்தன. அன்று தபாலில் வந்த கடிதத்தைப் பார்த்த வைதேகி திடுக்கிட்டாள்: ஜானகிக்கு அவள் எழுதிய கடிதம்தான், "விலாசதார் ஊரில் இல்லை" என்ற குறிப்போடு திரும்பி வந் திருந்தது. வியப்பு மிக்க அடைந்த வைதேகி தாயின் அனுமதி பெற்று அன்றே மாம்பலம் சென்றாள். ஆனால் ஜானகியும் அவள் கணவ ரும் ஊரை விட்டே போய் விட்டதாகவும், எங்கு சென்றார்கள் என்று தெரியாதென்றும் அண்டை வீட்டுக்காரர்கள் கூறி விட்டனர். ஏமாற்றத்துடன் ஊர் திரும்பிய வைதேகி வெள்ளித் தட்டைப் பார்த்துப் பார்த்து நீண்ட பெருமூச்சு விட்டாள்.

காலச் சக்கரம் ஒரு முறை உருண்டது. மேற்படி சம்பவம் நடந்த ஒரு வருடத்துக் கெல்லாம் வைதேகிக்கு விவாகம் செய்வித்து விட்டு, பரலோகம் சென்றாள் அவள் தாய். ஏற்கெனவே தந்தையற்ற அவள் தாயுமற்ற அனாதையானாள். கணவன் ரகுநாதனுடன் திருச்சியில் குடி புகுந்தாள். அவள் பெட்டியில் கண்ணனின் வெள்ளித் தட்டு அடியில் வைக்கப்பட்டுப் பத்திரமாகப் பாதுகாக்கப்பட்டு வந்தது. ஜானகி அல்லது வீரராகவன்—அவன்தான் ஜானகியின் கணவன், இவர்கள் பெயரை எங்கேயாவது கேள்விப் பட்டால், உடனே வைதேகி எப் பாடு பட்டாயினும் அவர்களைப் பற்றி அறிந்து கொள்வாள். ஆனால் அவர்கள் வேறு யாராகவாவது தானிருப்பார்கள். ஜானகி யைக் கண்டு பிடிக்க வைதேகி எடுத்துக் கொண்ட முயற்சிகள் யாவும் வீணாயின.

காலத்தின் போக்கில் இப்போது எத் தனையோ மாறுதல்கள். வைதேகியின் பெண் வத்ஸலா பன்னிரண்டு வயதுச் சிறுமியாக வளர்ந்திருந்தாள். வத்ஸலாவுக்குப் பிறகு அவளுக்குக் குழந்தைப் பேறு ஏற்படவில்லை.

ஒரு நாள் மாலை அலுவலகத்தினின்று வரும்போதே தலைவலியுடன் வந்தான் ரகு நாதன். இரண்டே நாட்களில் அது கடுமை யான டைபாய்டாக உருவெடுத்தது. ஒன்

றரை மாதம் படுக்கையில் கிடந்தான் ரகு. சாதாரண குமாஸ்தாவான அவனுக்குச் சம்பளம் இல்லாத லீவுதான் கிடைத்தது.

சோகமே உருவெடுத்தாற் போல் அமர்ந்திருந்தாள் வைதேகி. ரகுநாதனின் வைத்தியத்துக்காகப் பணம் தண்ணீர் போல் செலவழிந்து விட்டிருந்தது. அடுத்த நாள் ஒரு இன்ஜெக்ஷன் கொடுப்பதற்குப் பத்து ரூபாய் வேண்டியிருந்தது. வீட்டுச் செலவுகள், டாக்டர் பீஸ் எல்லாவற்றிற்கும் மேலே முப்பது ரூபாயாவது வேண்டும். வைதேகியிடம் தற்சமயம் விற்பதற்குக்கூடச் சாமான் ஏதுமில்லை. ஏதேதோ துயர நினைவுகளில் ஆழ்ந்திருந்த வைதேகிக்கு வத்ஸலா பள்ளியிலிருந்து வந்ததும், மெல்லத் தன் பக்கத்தில் அமர்ந்ததும் ஒன்றும் தெரியாது.

பன்னிரண்டே வயதுச் சிறுமியானாலும் வத்ஸலா வீட்டின் நிலைமையை நன்கு உணர்ந்து கொண்டிருந்தாள். "அம்மா!" என்று மெல்லிய குரலில் அழைத்த வத்ஸலாவைப் பார்த்ததும் தன் நினைவெய்தினாள் வைதேகி. "ஏனம்மா! உன் பெட்டியில் இருக்கிறதே ஒரு வெள்ளித் தட்டு, அதையாவது அடகு வைக்கப்படாதா, அம்மா?" என்று மொழிந்த வத்ஸலாவின் வாயை இறுகப் பொத்தினாள் வைதேகி. "ஆம்! வத்ஸலாவும் புத்தி தெரிந்த பெண்ணாகி விட்டாள். அவளிடம் சொல்வதில் தவறேதும் இல்லை" என்று தனக்குள் எண்ணிய அவள் அந்தத் தட்டின் கதையைப் பெண்ணுக்கு எடுத்துச் சொன்னாள்.

"என் இணை பிரியாத தோழி, அவள் புத்திர சோகத்தால் தவித்த தவிப்பு கொஞ்ச நஞ்சமில்லை. இப்போதும் அவள் எங்கிருக்கிறாளோ, எப்பாடு பட்டாவது அவளிடம் அதைச் சேர்ப்பிக்க வேண்டியது நம் கடமை. அதை நம் சொத்தாக எண்ணக் கூடாது. பாவம், ஜானகி! என்ன பாடு பட்டாள், இதைக் கொடுக்கும்போது!" என்று துயரம் தோய்ந்த குரலில் கூறினாள்.

பிறகு, ஏதோ நினைத்துக் கொண்டவள் போல பூஜை அறைக்கு விடு விடெனச் சென்றாள். அங்கு சுவாமி பாதத்தில் இருந்த மஞ்சள் ஒன்றை எடுத்துக் கழுத்தில் கட்டிக் கொண்டு திருமாங்கல்யத்தைக் கழற்றத் தொடங்கினாள். பின்னாலேயே வந்த வத்ஸலா துயரம் தாங்காது "அம்மா!" என்று அலறினாள். ஒன்றையும் கவனிக்காத வைதேகி, கண்களில் "பொல பொல"வென்று கண்ணீர் பெருகச் சுவாமியை நமஸ்கரித்து விட்டு வெளி வந்தாள்.

ஆம், வைதேகியின் மாங்கல்ய பலம் வீண் போகவில்லை. ரகுநாதனின் உடம்பு ஆச்சரியப்படும் வகையில் தேறி வந்தது. பூரண குணமடைந்து காரியாலயத்துக்கும் போகத் தொடங்கினான் அவன். ஆனால் இந்த இன்ப நிலையை நீடிக்க விடவில்லை விதி. இரண்டே மாதங்களுக்குப் பிறகு ஒரு நாள் வைதேகி மார்வலி என்று படுத்தாள். அன்று இரவு வத்ஸலாவை அருகில் அழைத்துக் கூறினாள். "கண்ணே, நான் இனிமேல் பிழைக்க மாட்டேன். என் முடிவு நெருங்கி வருகிறது. எனக்குப் பிறகு என் பெட்டியில் இருக்கும் தட்டை எடுத்து வைத்துக் கொள். எப்பாடு பட்டாயினும் அதை உரியவர்களிடம் சேர்ப்பிக்க முயற்சி செய். அதை ஒரு போதும் உன் பொருளாக மதிக்காதே. புத்திரசோகத்தால் கொடுக்கும் சாபம் பொல்லாதது. நான் அதை மட்டும் ஜானகியிடம் சேர்ப்பித்து விட்டிருந்தால் நிம்மதியோடு பிராணனை விடுவேன். எங்கே வத்ஸலா! நான் சொன்னபடியே செய்கிறேன் என்று வாக்குறுதி கொடு, அம்மா!" என்று ஈனஸ்வரத்தில் கூறினாள். கண்களில் கண்ணீர் ஆறாகப் பெருகி வழிந்தோட, "அம்மா நீ சொன்னபடியே செய்கிறேன். ஆனால் என்னை விட்டுப் போய் விடாதே, அம்மா!" என்று அலறினாள் வத்ஸலா. மறு நாள் காலையில் எழுந்திருக்க வைதேகி இல்லை. ரகுநாதன் சிறு குழந்தையைப் போல் விம்மி விம்மி அழுதான்.

✶

காலதேவன் விழுந்தடித்துக் கொண்டு ஓடினான். ஆம்! வத்ஸலாவுக்கு அதற்குள் வயது பத்தொன்பதாகி விட்டது. அறிவும் அடக்கமும் சேர்ந்த அழகியாகத் தோற்றமளித்தாள் அவள். அவளை நல்லதொரு இடத்தில் விவாகம் செய்விக்க அவள் தந்தை ரகுநாதன் செய்த முயற்சிகள் வீணாகவில்லை. சந்திரசேகரன் பெங்களூர் ரிசர்வ் பாங்கியில் வேலையிலிருந்தான். தகப்பனார்



யாழ்ப்பாணம் வண்ணை வைத்தீஸ்வர வித்தியாசாலையில் "கல்கி" அவர்கள் பிரிவைக் குறித்து அமைச்சர் நடேசன் அவர்கள் தலைமையில் அனுதாபக் கூட்டம் ஒன்று நடைபெற்றது. அதில் செனட்டர் கனகநாயகம், முதலியார் முத்துத் தம்பி, வித்தியாசாலை அதிபர், அம்பிகைபாகன் முதலியோர் கலந்து கொண்டனர்.

இல்லாத அவனுக்குத் தாய்மாமன் ஒருவர்தான் விவாக விஷயங்களுக்காக முன் நின்றார். விவாகம் நடந்த ஒரு மாதத்துக்கெல்லாம் கார்த்திகைப் பண்டிகை வந்தது.

வத்ஸலா புக்ககம் சென்றாள். அவள் மாமியார் மிகவும் நல்ல மாதிரி. பண்டிகைக்கு முதல் நாள் மாலை வத்ஸலாவைப் பக்கத்தில் அமர்த்தி அன்புடன் கூறினாள் அவள். "வத்ஸலா! இனிமேல் நீ மட்டும்தான் இங்கு உன் கணவனுடன் இருக்க வேண்டும். இத்தனை நாள் வரை உன் சிறிய மைத்துனன் பட்டணத்தில் ஹோட்டலில் தான் சாப்பிட்டுக்கொண்டிருந்தான். நான் இங்கே உன் அகமுடையானுக்குச் சமைத்துப் போட்டுக் கொண்டு இருந்தேன். நீ பொறுப்பேற்க வந்து விட்டாய். நான் அங்கே போகிறேன். உன்னைப் போல் இன்னொருத்தி அங்கு வரும் வரை நான் அங்கே போகிறேன். உன்னைப் போல் அவனுக்கும் இன்னொருத்தி அங்கு வரும் வரை நான் இருக்க வேண்டாமா? நீ சமர்த்தாகக் குடித்தனம் செய்ய வேண்டும்."

நன்னிலம் தாலுக்காவைச் சேர்ந்த எனங்குடி கிராமத்தில் 13-12-54 அன்று மாலை தஞ்சை ஜில்லா கலெக்டர் ஸ்ரீ ஆர். எம். சுந்தரம் ஐ. ஸி. எஸ். அவர்கள் போர்டு உயர்நிலைப் பள்ளிக்கு அஸ்திவாரக் கல் நாட்டினார். இவ்விழா வெகு சிறப்பாக நடந்தது.

புன்னகை புரிந்தாள் வத்ஸலா, மாமியாரைப் பார்த்து. "அப்படியே செய்கிறேன், மாமி!" என்று மிகுந்த பணிவுடன் பதிலளித்தாள் வத்ஸலா.

மாமியார் தொடர்ந்தாள்: "நீ பன்னிரண்டு வயதிலேயே அம்மாவை இழந்து விட்டாயாம். அப்போது முதல் வீட்டு நிர்வாகம் முழுவதையும் நீ புத்திசாலித்தனமாகக் கவனித்து வருகிறாயென்று பலர் சொல்லக் கேட்டிருக்கிறேன். இருந்தாலும் நான் சொல்ல வேண்டிய புத்திமதியைச் சொல்லித் தீரவேண்டும் அல்லவா? காலம் இருக்கும் நிலையில் மத்தியதர வகுப்புக்காரர்களாகிய நாம் மிகவும் செட்டாகவும் ஜாக்கிரதையாகவும் குடித்தனம் நடத்தினால் தான் பிழைத்தோம். நீ சிறியவள். ஒருவரையும் இலேசில் நம்பி விடாதே. இந்தச் சமயத்தில் எனக்கு ஏற்பட்ட ஒரு அனுபவத்தைக் கூறினால் உனக்கு உபயோகமாக இருக்கும்."

ஆவலுடன் மாமியார் முகத்தை நோக்கினாள் வத்ஸலா. அதில் சிந்தனை ரேகைகளும், சோகத்தின் ரேகைகளும் பின்னிக் கிடந்தன. முற்றத்தின் வெட்ட வெளியை வெறித்துப் பார்த்தபடியே மாமியார் சொல்லலானாள். "ஆம். என் இணை பிரியாத தோழி அவள். அவளைப் பரிபூரணமாக நம்பி ஒரு சாமானைக் கொடுத்தேன். அதை மோசம் செய்து விட்டாள். 'நான் கேட்கும் போது திருப்பிக் கொடுத்துவிடு' என்று கூறியிருந்தேன். நான் கேட்டதே ஒரு வருடம் கழித்துத்தான். இதற்குள் அவள் எந்தக் கண்காணாத தேசத்துக்குப் போய் விட்டாளோ, அவள் தகவலே கிடைக்கவில்லை. எனக்குச் 'சீ' என்று போய் விட்டது. எதற்குச் சொல்ல வருகிறேன் என்றால், நான் அவளை அவ்வளவு தூரம் நம்பி விட்டேன். ஏன்? என் கணவருக்கும் - அதாவது உன் மாமனாருக்குங் கூடத் தெரியாமல் தானே அதை அவளிடம் கொடுத்தேன்? என் முதல் குழந்தை – உன் அகமுடையானுக்குத் தமையனின் நினைவுச் சின்னம் அது. அந்த நான்கு வயதுப் பாலகன் இறந்ததும் அதைத்தான் என் கண்ணெதிரே நடமாடும் கண்ணனாக நினைத்திருந்தேன். இருந்திருந்து அவ்வளவு சிநேகமாகப் பழகுவது போல் நடித்து விட்டுக் கடைசியில் ஒரு ஐம்பது ரூபாய் பெறுமானமுள்ள வெள்ளித் தட்டுக்காக இப்படி மோசம் செய்வாள் என்று நினைக்கவேயில்லை. உலகத்தில் ஒருவரையும் நம்புவதற்கில்லையென்ற பாடம் அதிலிருந்துதான் நான் கற்றுக் கொண்டேன்."

துயரம் பந்து போல் வத்ஸலாவின் தொண்டையில் அடைத்துக் கொண்டது. கண்களில் நீர் நிறைந்து விட்டது. "ஏன் மாமி, நீங்கள் அந்தத் தட்டை உங்கள் தோழி

யிடம் கொடுத்த வுடனே வேறு ஊருக்குப் போய் விட்டீர்களல்லவா?" என்று தட்டுத் தடுமாறிய குரலில் கேட்டாள். மிக்க வியப்பு எய்திய அவள் மாமியார் பரபரப்புடன், "ஆம்! விதி வசத்தால் அப்படிப் போக வேண்டி வந்தது. அவர்களை உனக்குத் தெரியுமா என்ன?" என்று வினவினாள். "மாமி!" என்று விசித்து விசித்து அழுதாள் வத்ஸலா.

"என் தாயார்தான் உங்கள் தோழி வைதேகி. அவள் உங்களை ஏமாற்ற வில்லை, மாமி! அந்தத்தட்டை அவள் தன் பொருளாக மதிக்கவும் இல்லை. நீங்கள் ஊரை விட்டுப் போனவுடன் உங்களைத் தேடினாளாம். உங்களைப் பற்றி ஒரு தகவலும் கிடைக்க வில்லை. இதற்குள் என் தாயாருக்கு விவாகம் நடந்தது. என் பாட்டி இறந்து விட்டாள். பிறகு என் தாயார் திருச்சிக்கு வந்து விட்டாள். உங்களைப் பற்றி நினைக்காத நாளில்லை. உங்கள் சொத்தை உங்களிடம் கொடுத்து விட வேணுமென்று துடித்தாள். அவள் துரதிருஷ்டம், அவள் காலத்தில் அது முடிய வில்லை."

ஒரு நீண்ட பெருமூச்சு வத்ஸலாவின் இதய ஆழத்திலிருந்து வெளிப்பட்டது. அவள் கண்கள் கனவு காண்பவை போல் தோற்றமளித்தன. தாழ்ந்த குரலில் மனக் கண்முன் நின்ற அந்த மறக்க முடியாத சோக நிகழ்ச்சியை உருக்கமாக வெளியிட்டாள்.

"இப்போது நினைத்தாலும் கண் முன் நிழலாடுகிறது. அப்பா 'டைபாய்டி'னால் ரொம்பவும் சிரமப்பட்டார். அம்மா கையில் காலணா இல்லை, மருந்து வாங்குவதற்குக்கூட. ஆனால் அப்போதாவது அந்தத் தட்டை அடமானமாவது வைத்தாளா? இல்லை. யோசனை கூறிய என் வாயை இறுகப் பொத்தினாள். பிறகு அம்மா இறக்கும்போது கழுத்தில் மஞ்சள்தான் கட்டப்பட்டு இருந்தது. அம்மா ரொம்ப உத்தமி."

மௌனமாகக் கண்ணீர்பெருக்கிய வத்ஸலாவைப் பார்த்து அன்புடன் சேர்த்து அணைத்துக் கொண்டாள் ஜானகி. கண்களில் நீர் ததும்ப, "அம்மா வத்ஸலா! உன்னுடைய தாய்க்குப் பதிலாக நீ என்னை மன்னித்து விடு" என்று விம்மலுக்கிடையே சொன்னாள்.

மறு நாள் புனிதமான கார்த்திகைப் பண்டிகை யன்று தன் பெட்டியிலிருந்து அந்த நினைவுச் சின்னத்தை எடுத்து மாமியார் கையில் கொடுத்தாள் வத்ஸலா. "அடுத்த வருஷம் என் பேரனுக்கு வேண்டி யிருக்கும். என் நினைவுச் சின்னமாக உனக்கு ஆசீர்வாதமாகக் கொடுக்கிறேன், பெற்றுக் கொள்" என்று கண்களில் ஆனந்த பாஷ்பம் பொங்கச் சொன்னாள் மாமியார். திருப்பிக் கொடுத்த தட்டைப் பெற்றுக் கொண்ட வத்ஸலாவின் முகம் வெட்கத்தால் சிவந்தது.

# கலையும தமிழும்

கி. ரா. கோபாலன்

தமிழுக்கும் கலைக்கும் இடையே போடப்பட்டிருந்த பெரும் பாலம் இடிந்து கரைந்து விட்டாற் போல் அல்லவா தோன்றுகிறது? தமிழைக் காதலித்த கலை என்ன செய்யும்? கலையைக் காதலித்த தமிழ் என்ன செய்யும்? இக்கரையிலும் அக்கரையிலுமாக நின்று கதறும் அவைகளைச் சேர்த்து வைக்கப் புதுப் பாலம் ஒன்று அமைக்க வேண்டும்.

இடிந்தாலும் பழைய பாலத்தின் அஸ்திவாரமும், அடித் தளமும் அப்படியே இருக்கிறது. 'முடியுமா' என்று மயங்கி நிற்காமல் முயற்சியில் ஈடுபடுவோம். பழைய பாலத்தின் மேல் எழுப்பப்பட்ட புதுப்பாலம் கலையையும் தமிழையும் மறுபடியும் கலந்து உறவாடச் செய்யும்.

கல்கி ஆசிரியரோடுகூட இருந்து குருகுல வாசம் செய்த சிஷ்யர்களோடு மட்டுமல்லாமல் ஏகலைவர்களாக எத்தனை எத்தனையோபேர் இருப்பதாகச் சொல்கிறார்கள். இதை யாரும் மறுக்க முடியாது. சர்வேசுவரனுக்கு அறுபத்து மூன்று பேர்தான் பக்தர்கள் என்று சொல்லிவிட முடியுமா? அப்படித்தான் கல்கி ஆசிரியர் எல்லா எழுத்தாளர்களிடமும் அன்பைக் காட்டி வந்தார்.

கல்கி ஆசிரியர் நீண்ட தொடர்கதைகள் எழுதி வாசகர்களின் மனப் பீடத்தில் நிரந்தரமாக அமர்ந்து விட்டார். சரித்திரப் பெருங் கதைகள் எழுதித் தமிழ் நாட்டின் கலை, நாகரிகம், பண்பாடு இவைகளுக்கு உலகில் உன்னத இடம் தேடிக் கொடுத்து விட்டார். நெருக்கடியான காலங்களிலெல்லாம் ஆணித்தரமான அரசியல் கட்டுரைகள் எழுதி மக்களின் ஆயாசத்தைப் போக்கி நாட்டுக்குப் பெரும் சேவை செய்தார். தமக்கே உரித்தான தனித் தமிழ் நடையில் ஹாஸ்யக் கட்டுரைகளை எழுதி வாசகர்களின் துயரங்களைப் போக்கும் அருமருந்தாகி விட்டார். அவருடைய புது நடை விமர்சனங்களினால் சங்கீதம், நாடகம், சினிமா போன்ற கலைகள் நாட்டில் உன்னத நிலைக்கு வந்து புகழுக்கும், போற்றுதலுக்கும் உரித்தானவைகளாயின. இவ்வளவையும் நம்மால் செய்ய முடியுமா...?

அதோ பேனா இருக்கிறது. ஆசிரியர் கல்கி அவர்களின் திருவுருவம் அதில் தெரிகிறது. பேனாவை எடுப்போம்; எழுதுவோம். எது நமக்கு வராது? கல்கி பிறந்தது இத் தமிழ் நாட்டில். இங்கேதான் நாமும் பிறந்து, அவருடைய பண்பாட்டில் வளர்ந்திருக்கிறோம்.




அன்பார்ந்த ஸ்ரீ சதாசிவம் அவர்களுக்கு,

ஸ்ரீ கல்கி அவர்கள் மறைந்ததால் என் மனம் இன்னும் ஆறாத் துயருறுவதுபோல, என் அறுபத்தைந்து வயதளவில், வேறென்றாலும் துயருமுன்ற தில்லை. இருபத்தைந்து ஆண்டுகளுக்குக் குறையாத அன்புறவு அறுந்து போயிற்றே என்று எண்ணும்பொழுது என் கை எழுதவோ, என் நா பேசவோ செயலற்று விட்டன. நோயும் முதுமையும் அரித்துவிட்ட என் உடலில் மிகுதி யிருந்த வலிமையை யெல்லாம் கல்கியின் பிரிவு உறிஞ்சி விட்டது. ஏழையேன் பாட்டுக்களுக்குச் சிரஞ்சீவிப் பட்டம் தந்து, மகிழ்ந்து ரஸித்த கல்கி தமிழ் நாட்டின் தலைசிறந்த எழுத்தாளர். ஸத்யமூர்த்திக்கு நிகரான இனிய சங்கீதம் போன்ற பேச்சாளர். தற்பெருமையோ, தன்னலமோ சிறிது மில்லாத தாய்மொழித் தொண்டர். நாட்டுக்கும் நல்லோர்க்கும் நன்று செய்வதில் வலிய வந்து முன் நிற்கும் ஊக்கமுள்ளவர். தமிழிசைக்குப் பெரும் பெருந் தலைகளின் எதிர்ப்பு வந்தும், மலையாது பேனா முனையால் தவிடுபொடி செய்த ஆற்றல் மிக்கார். தியாக பூமித் திரைக் கதை முதல் என்னிடம் மட்டற்ற பரிவு மிக்க ரஸிகர் பிரிவென்றால் என் ரத்த பந்தமுள்ள நெருங்கிய சகோதரர் பிரிவுகூட இத்தனை அதிர்ச்சியைக் கொடுக்கவில்லை. "மூன்று மாதங்களுக்கு முன்கூட ஓர் கூட்டத்தில் அன்னதான சிவன் என்பதற்குப் பதிலாக மூன்று நான்கு முறை பாபநாசம் சிவனென்று சொல்லிக் கூட்டம் நகைக்க அசட்டுப் பட்டம் வாங்கினேன்" என்று அடையாற்றில் பேசின பேராதரவாளரை இனி எங்கு காண்பேன்! இறைவன் தான் ஆறுதல் அளிக்க முடியும்.

சென்னை
16-12-54 — பாபநாசம் சிவன்

●

அமரர் 'கல்கி' மறைந்த போதிலும் அவரது ஆத்மாவின் நோக்கினால் 'கல்கி' பத்திரிகை என்றும் சிரஞ்சீவியாக வெளி வரும் என்று பிரார்த்தனை செய்கிறேன். கடவுளும் கண்டிப்பாய் அனுக்கிரகம் செய்வார். 'அமரதாரா' போன்ற பல கதைகள் 'கல்கி'யில் எழுத ஆண்டவன் 'கல்கி' பத்திரிகைக்கு அநேகம் 'கல்கி'களைச் சிருஷ்டி செய்ய வேண்டுமென்று மனதாரப் பிரார்த்திக்கின்றேன்.

திண்டுக்கல்
17—12—54 — சு.ப. வெங்கடசுப்பிரமணியம்.

அன்பார்ந்த நேயர்களுக்கு,

ஆசிரியர் ரா. கி. அவர்களின் மறைவைக் குறித்து அநுதாபம் தெரிவித்தும், 'கல்கி' பத்திரிகை தொடர்ந்து நடப்பதில் ஊக்கம் ஊட்டியும், ஆயிரக் கணக்கான நேயர்கள் கடிதம் எழுதியுள்ளார்கள். இந்தக் கடிதங்கள் அனைத்தையும் இங்கே பிரகரிக்க விருப்பம் என்றாலும், பத்திரிகையின் அமைப்பு முறைக்கு அது சாத்தியமில்லை என்பதை நேயர்கள் ஒப்புக் கொள்ளுவார்கள்.

கல்கி பத்திரிகை யிடத்தும் இந்த ஸ்தாபனத்திடத்தும் நேயர்கள் காட்டும் இந்தப் பரிவுக்கு மிகவும் கடமைப் பட்டிருக்கிறோம்.

கல்கி காரியாலயம், சென்னை—10 — டி. சதாசிவம் (மானேஜிங் டைரக்டர்)

நமது அன்புக்கும் மதிப்புக்கும் உரிய கல்கி ஆசிரியர் அவர்கள் மறைவு, தமிழ் நாட்டுக்கும், தமிழ் மக்களுக்கும், தமிழ் இலக்கியத்துக்கும், தமிழ்ப் பண்பாட்டுக்கும் ஈடு செய்ய முடியாத பெரும் நஷ்டம் என்று சொல்ல வேணும்.

திருநெல்வேலி
10—12—54 — வி. கோமதிநாயகம்

●

சுதேச பாஷைப் பத்திரிகைகளுக்கு—அதிலும் தமிழ்ப் பத்திரிகைகளுக்குத் தமிழ் நாட்டிலேயே மதிப்பில்லாமலிருந்த காலத்தில், தமிழ்ப் பத்திரிகை யுலகில் ஒரு பெரும் புதுமையை உண்டு பண்ணியவர் கல்கி அவர்கள். மேனாட்டுப் பத்திரிகைகளைப் போல் தாய்மொழிப் பத்திரிகைகளும் வெளி வருமா என்று மொழிப் பற்றுடைய அறிஞர்கள் ஆதங்கப்பட்டுக் கொண்டிருந்த காலத்தில், ஒரே போக்கில் போய்க் கொண்டிருந்த தமிழ்ப் பத்திரிகை யுலகில் ஒரு புதுத் திருப்பம் கொடுத்து, இருபத்தேழு ஆண்டுகளுக்கு முன்பே பல நூதன அம்சங்களைப் புகுத்தி, வாசகர்களை விரும்பிப் படிக்கச் செய்தவர் கல்கி. தமிழ்ப் பத்திரிகைகளுக்குப் பல லட்சக் கணக்கான தமிழ் வாசகர்களைப் பெருக்கியவர் கல்கி. 'க்யூ' வரிசையில் நின்று தமிழ்ப் பத்திரிகையை வாங்க வேண்டுமென்ற ஆர்வத்தை எழுப்பியவர் கல்கி. ஆங்கிலப் பத்திரிகைகளை வைத்திருப்பது தான் பெருமை எனப் பெருமிதமாக எண்ணிக் கொண்டிருந்தவர்களின் கரங்களில் தமிழ்ப் பத்திரிகைகளை 'வைத்திருப்பதும் கௌரவம்தான் என்று நினைக்கக் கூடிய உயர்நிலையை ஏற்படுத்தியவர் கல்கி. அரசியல், பொருளாதாரம், சரித்திரம், ஹாஸ்யக் கட்டுரை, சிறு கதை, நாவல், சங்கீத, நாடக சினிமா விமர்சனம் ஆகிய எப்பொருள் பற்றியும் பாமரர் உள்பட எல்லோருக்கும் எளிதில் புரியும்படியாக எழுதும் ஆற்றல் படைத்தவர் கல்கி. தமிழ் மறு மலர்ச்சிச் சகாப்தத்தின் தந்தையான மகா கவி பாரதியாருக்கு மணி மண்டபம் கட்டிய மகா புருஷர் கல்கி. அதன் வாயிலாக, நம் நகரில் எந்த நன்முயற்சிக்கும் எப்பேர்ப்பட்டவரும் தம் உதவியை நாடி வருமாறு செய்த செயல் வீரர் கல்கி. நமது சமுதாயத்திலும், பிற மொழியாளர்களிடையிலும் நம் தமிழ் இலக்கியத்திலும் இந்திய இலக்கியத்திலும் தமிழ் எழுத்தாளர்களுக்கு ஓர் உன்னத ஸ்தானத்தை ஏற்படுத்திக் கொடுத்த



டிஸம்பர் 17 வ. சென்னை தியாகராயநகரில் பல சங்கங்கள் சேர்ந்து 'கல்கி' ஆசிரியரின் நினைவுக் கூட்டம் நடத்தினர். ராமகிருஷ்ண உயர்நிலைப் பள்ளி மண்டபத்தில் நடந்த இந்தக் கூட்டத்தில் ஸ்ரீமான்கள் கே. பாலசுப்ரமணிய அய்யர் எம். எல். ஸி., பெரியசாமித் தூரன், ம. பொ. சிவஞான கிராமணியார், ஆக்கூர் அனந்தாச்சாரியார், சச்சிதானந்தம் பிள்ளை, முருகதாஸ், சின்ன அண்ணாமலை, புத்தனேரி சுப்பிரமணியம் முதலியோர் கலந்து கொண்டு கல்கியின் சிறப்பை எடுத்துக் கூறினர். ஸ்ரீமதி இந்திராணி அவர்கள் உணர்ச்சியுடன் பேசினர்.

---

பேரறிவாளர் கல்கி. இவ்விதம் பல வகையிலும் பெருமை வாய்ந்த ஒப்புயர்வற்ற ஒரு பெரும் எழுத்தாளர், அமரர் 'கல்கி'.

சென்னை—24 நாரண-துரைக்கண்ணன்
11—12—54 ஆசிரியர், 'பிரசண்ட விகடன்'

●

இவ்வளவு எதிர்பாராத விதமாய், இவ்வளவு சீக்கிரத்தில் "கல்கி"யவர்கள் மறைவார் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை. போன வாரம் கல்கி பத்திரிகையில் உடம்பு பரவாயில்லை என்று அறிந்தும் மகிழ்ச்சி கொண்டோம். ஆனால் திடீரென்று முடிவு ஏற்பட்டு விட்டது. முதலில் ரேடியோச் செய்தியை நம்பவே முடியவில்லை...

அண்ணாமலைநகர் சி. ஆர். மயிலேறு
12—12—54

●

ஆகா, நாம் எவ்வளவு துரதிர்ஷ்டசாலிகள்! கல்கியின் மறைவைக் கேட்ட பிறகும் நாம் உயிர் வாழ வேண்டியிருக்கிறதே! கல்கி என்ற பெயர் இந்த உலகம் அழிந்தாலும் கூடத் தமிழருடைய உள்ளங்களில் இருந்து அழியாமல் ஒலித்துக் கொண்டிருக்கும். அவரைக் காலன் நம்மிடமிருந்து பலவந்தமாகப் பிடுங்கிச் சென்றுவிட்டான். என்ன செய்வது! அவரது ஆத்மா சாந்தியடைய நாம் அவர் காட்டிய வழியில் செல்வோமாக.

மாயூரம் வி. ஞானம்

●

ஸ்ரீ சதாசிவம் அவர்களுக்கு,

கல்கி ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் பத்திரிகை உலகம், அரசியல் துறை, இலக்கியத் துறை இவைகளுக்கு மட்டுமல்லாது கர்நாடக சங்கீத உலகுக்கும் தொண்டு புரிந்திருக்கிறார்கள். அவரது ஏடுகள் பாலர்கள் முதல் பால்யர்கள் வரையிலும், பாமரர்கள் முதல் பண்டிதர்கள் வரையிலும் அனைவருக்கும் இன்பம் பயப்பனவாக அமைந்துள்ளன.

கலைகளை ஆழ்ந்து ரசித்து விமர்சனம் தீட்டுவதில் அவர் நிகரற்றவர். சங்கீத சம்பந்தமாக அவர் எழுதும் கட்டுரை விமர்சனங்களில் தனிச் சுவையும், பொருள் ஆழமும், நகைச் சுவையும் மிளிர்ந்து காணப்படுகின்றன. எனது உள்ளார்ந்த ஆழ்ந்த அனுதாபங்கள்.

அண்ணாமலைநகர் சித்தூர்
21-12-54 சுப்பிரமண்ய பிள்ளை

●

கல்கியின் மறைவினால், மகத்தான ஒரு மேதையை நம் நாடு இழந்து விட்டது. இதுவரை, கல்கியின் நினைவு எல்லோருடைய உள்ளத்திலும் அவர் உருவத்துடன் இருந்தது. இனி, எல்லோருடைய உள்ளத்திலும் கல்கியின் கீர்த்தி உருவம் என்றும் நிலைத்திருக்கும்.

ஸ்ரீரங்கம்
22—12—54 பிடில் எம். ஜி. கோபாலகிருஷ்ணையர்

●

"தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று."

இந்தக் கூற்றை உண்மையாகச் செய்தார் நம் கல்கி அவர்கள். அவருடைய புகழை நம் நாடு அன்றி மற்றைய நாடுகளும் அறியும். "சான்றோருக்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு." 'கல்கி' அவர்களின்

வாழ்க்கையில் இதுவும் உண்மை ஆயிற்று. அவருடைய கதைகள் 'உண்ணத் தெவிட்டாத' இன்னமுதாக விளங்கின. அவருடைய மறைவினால் அதிக நஷ்டத்தைப் பெற்றவர்கள் தமிழர்களாகிய நாம்தாம். நம்மனைவரைக் காட்டிலும் தமிழ்த் தாய்தான் பெருத்த நஷ்டத்தை அடைந்தாள்.

விசாகபட்டினம்
6—12—54 அம்புஜா-சௌந்திரா

●

ஸ்ரீமான் சதாசிவம் அவர்களுக்கு,

தமிழ் நாட்டுத் தலை சிறந்த எழுத்தாளரும் கல்கி ஆசிரியருமான ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் நம்மை விட்டுப் பிரிந்ததை நினைக்கத் துக்கம் தாங்க முடியவில்லை.

தஞ்சாவூர்
11—12—54 பாலக்காடு மணி

●

திரு சதாசிவம் அவர்களுக்கு,

கல்கியார் மாண்டாரா ! — இல்லை, இல்லவே இல்லை. தமிழன்பர்களின் இதயங்களில் இன்னும் உயிருடனேதான் குடிகொண்டிருக்கிறார்.

திருச்சி கே. கே. முத்தையா
17—12—54 கடலூர் ஜமீன்தார்

●

அன்புடையீர்,

நண்பர் கல்கி ஆசிரியர் பூத உடம்பு மறைந்த செய்தியை இங்கு அறிந்து திடுக்கிட்டேன். மனம் அளவற்ற வேதனை அடைகிறது......அவருடைய சேவை இமயம் உள்ளவரை உலகில் நின்று நிலவும்.

காசி
14—12—54 கிருபானந்தவாரி

●

ஸ்ரீ சதாசிவம் அவர்களுக்கு,

கல்கியின் மறைவைக் கேட்டுத் தாங்க முடியாத துயருற்றேன்......

அலஹாபாத்
13—12—54 வி. ஜகந்நாத்

●

பிரம்மஸ்ரீ கல்கி அவர்கள் இறந்ததைப் பற்றி நான் அளவிலாத் துக்கத்தை அடைந்திருக்கிறேன்.

திருவாவடுதுறை அகில உலக நாதஸ்வர சக்கரவர்த்தி
23—12—54 டி. என். ராஜரத்தினம் பிள்ளை

●

அன்புள்ள சதாசிவம் அவர்களுக்கு,

எவ்வளவுதான் ஆறுதல் மொழிகள் கூறினாலும், இத்தகைய பெரும் துயரமூற்ற நிலைகளில் போதிய சாந்தியும் ஆறுதலும் அவை அளிப்பதில்லை. ஆகவே ஜகன்மாதாவாகிய தேவி மீனாக்ஷியை நமக்கெல்லாம் ஆறுதலும் ஊக்கமும் அளிக்கும் படியாகப் பிரார்த்தனை செய்து கொள்ளுகிறேன்.

பட்னா எம். எஸ். எம். சர்மா
—12—54 ஆசிரியர், 'ஸர்ச் லைட்'

●

ஸ்ரீ சதாசிவம் அவர்களுக்கு,

ஆசிரியர் கல்கியின் மறைவு நம்மையெல்லாம் ஆறாத் துயரத்தில் ஆழ்த்தி விட்டது. தமிழ் அன்னைக்கு அன்னார் மறைவு ஈடு செய்ய முடியாத மாபெரும் நஷ்டம் ஆகும். வாரம் தவறாமல் கல்கி வாங்கிப் படிக்கும் எங்கள் சாந்தாவுக்கு ரா. கி. யின் மறைவின்பின் இரண்டு வாரங்களாகப் பிரதிகள் கிடைக்கவில்லை. தமிழ்ப் பகுதி

மட்டுமின்றி எங்கள் மலையாளத்திலும் கல்கி நேயர்கள் பலர் இருக்கின்றனர். அவர்களில் கல்கி படிப்பதற்காகத் தமிழ் கற்றவரும் உண்டு. அவர்களில் பலர் பிரதிகள் கிடைக்காமல் எங்கள் சாந்தாவைப் போல் ஏமாற்ற மடைந்திருக்கின்றனர். இந்த ஏமாற்றத்தை இனி தவிர்க்கவே இத்துடன் கல்கி பத்திரிகைக்கு ஒரு வருட சந்தாவை அனுப்பி வைத்திருக்கிறேன்...

சித்தாலம்சேரி 22-12-54 — சி. எச். பரமேச்வரன் (M. A., L. T.,) M. L. C.

●

ஸ்ரீமான் சதாசிவம் அவர்களுக்கு,

நமது அருமை நண்பர் ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் மறைவு குறித்து ரொம்பவும் வருந்துகிறேன். அவர் என்மீது ரொம்ப அன்பு வைத்திருந்தார்......

மாயூரம் 21—12—54 — கான கலாதர மதுரை மணி அய்யர்

●

உயர்திரு சதாசிவம் அவர்களுக்கு,

போதிய திறமை இருக்கும் குடத்திலிட்ட விளக்காக அமுங்கிக் கிடந்த அநேக நாட்டிய சங்கீத கலைஞர்களைக் குன்றின்மேல் வைத்த 'சர்ச் லைட்'டாக ஒளிவீசச் செய்தார் என்பதைக் கலைஞர்கள் என்றும் மறக்க முடியாது.

கோவில்பட்டி 24—12—54 — காருகுறிச்சி ப. அருணாசலம்

●

கல்கி இவ்வுலகை விட்டுப் பிரிந்து விட்டார் என்ற செய்தி கேட்டு மிகவும் வருத்தமடைகிறோம். அவர் வாழ்வெல்லாம் கலைக்காகப் பாடு பட்டார். அவருடைய சின்னமான கல்கி பத்திரிகை மேன்மேலும் அபிவிருத்தி அடைய வேண்டும். சீரும் சிறப்பும் பெற வேண்டும்.

புனாவல் 22-12-54 — தென்னிந்திய சங்க அங்கத்தினர்கள்

●

திருவாளர் சதாசிவம் அவர்களுக்கு,

ஆசிரியர் "கல்கி" அவர்களின் மறைவு தமிழுக்கும், கலையுலகுக்கும் நேர்ந்த மாபெரும் நஷ்டமாகும். ஆயிரக் கணக்கான மைல்களுக்கப்பால் இருக்கும், தமிழன்பர்களாகிய எங்கள் மன மார்ந்த துயரத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம். அவருடைய தொண்டுகளால் சிறப்புற்ற 'கல்கி' வார இதழ் மேன்மேலும் ஓங்கி, அவருடைய நினைவுச் சின்னமாக என்றென்றும் திகழ்வதாக.

ராஜ்கோட் 19—12—54 — படிப்பாளர் கழகம்

●

கல்கி ஆசிரியர் ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் மறைந்த செய்தி கேட்டு நெய்வேலி திடுக்கிட்டது!

நெய்வேலி 6—12—54 — பாபுலிஸர் கல்கி ஏஜண்டு

●

மதிப்பிற்குரிய சதாசிவம் அவர்களுக்கு,

கல்கி ஆசிரியரின் மறைவு அறிவாளிகளுக்கு மட்டுமேயன்றி எங்களைப் போன்ற சிறுவர்களுக்கும் மிக்க துக்கத்தை அளிக்கிறது. 'கல்கி' அவர்களுடைய நெடுந்தொடர்கதையைப் படித்து அனுபவித்த எங்களுக்கு, அன்னாருடைய திடீர் மறைவு சொல்ல முடியாத துயரத்தைத் தருகிறது.

பம்பாய் 18—12—54 — ருக்மிணி

# அவர் ஒரு அவதார புருஷர்

**சாவி**

முப்பது ஆண்டு காலம், இடையறாத இணையற்ற தொண்டு புரிந்தார் ஆசிரியர் கல்கி. முன்னூறு ஆண்டு காலத்தில் செய்ய வேண்டிய காரியங்களை முப்பதே ஆண்டில் மிகத் திறம்படச் செய்து முடித்தார். அவர் செய்த காரியங்கள் மகத்தானவை. ஊழூழி காலம் போற்றத் தக்கவை.

தெய்வத் தமிழ் நாட்டை உய்விக்கப் பாடுபட்ட அவதார புருஷர் அவர்.

இந்தத் தமிழ் கூறும் நல்லுலகில் எத்தனை எத்தனையோ தமிழறிஞர்களும், தெய்வப் புலவர்களும், கவிஞர்களும் தோன்றித் தமிழுக்குப் பெருமையும் புகழும் தேடித் தந்திருக்கிறார்கள். கம்பன் பிறந்த தமிழ் நாட்டில் கவி பாரதி தோன்றினார். தமிழ் சிறப்புற்றது. பாரதிக்குப் பிறகு கல்கி பிறந்தார். தமிழ் மேலும் புகழ் பெற்று ஓங்கியது.

* * *

ஆசிரியர் கல்கி அவர்கள் ஓர் அசாதாரண புருஷர். ஆயிரம் ஆண்டுகளுக்கொரு முறை தோன்றக்கூடிய அரும்பெரும் மனிதர்.

மனிதர்களுக்குள்ளே மகாத்மா ஒப்பற்ற புருஷர். அதைப் போலவே, எழுத்தாளர்களுக்குள்ளே கல்கி ஆசிரியர் ஒரு ராஜரிஷி. தன்னலம் கருதாது, தாய் நாட்டுக்கும், தாய் மொழிக்கும் உழைத்த உத்தம சிலர்.

ஆசிரியர் கல்கியுடன் நெருங்கிப் பழகவும், கலந்து பேசவும், சேர்ந்து பணியாற்றவும் சந்தர்ப்பம் கிடைத்தவர்கள் பாக்கியசாலிகள். அத்தகைய பாக்கியசாலிகளில் நானும் ஒருவன் என்பதை எண்ணிப் பார்க்கும்போது என் தோள்கள் பூரிக்கின்றன.

* * *

ஆசிரியர் கல்கி வெறும் எழுத்தாளர் மட்டும் அல்ல. அவர் உலக அனுபவம் மிக்க ஞானி. அவருக்குத் தெரியாத விஷயம் இல்லை. வைத்தியம் கூடத் தெரியும். ஸிபலால் முதல் பெனிஸிலின் வரை அத்தனை மருந்துகளின் பெயரும் அவருக்கு நன்கு தெரியும். அவ்வளவு பெயர்களையும் நினைவில் வைத்துக் கொண்டு ஞாபகமாகச் சொல்லுவார்.

ஞாபக சக்தியைப் பற்றிச் சொல்லும் போது ஒரு சிறு விஷயம் என் ஞாபகத்துக்கு வருகிறது. ஒரு சமயம் ஆசிரியரைப் பார்த்து, யாரோ "ஆமாம், இத்தனை பெரிய நீண்ட சரித்திரக் கதைகளை எப்படி ஞாபகத்தில் வைத்துக் கொண்டு எழுதுகிறீர்கள்? கதைகளில் வரும் பாத்திரங்களின் பெயரை எவ்வாறு நினைவில் வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?" என்று வியப்புடன் கேட்டார். அதற்கு ஆசிரியர் "இதில் என்ன பெரிய வியப்பு இருக்கிறது? என் ஞாபக சக்தியைப் பற்றி உங்களுக்குத் தெரியாது. ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னால் நான் சின்னஞ் சிறு குழந்தையா யிருந்தபோது என் பெற்றோர் எனக்குப் பெயர் சூட்டினார்கள். அந்தப் பெயரை நான் இன்னமும் ஞாபகத்தில் வைத்துக் கொண்டிருக்கிறேன், தெரியுமா?" என்று வேடிக்கையாகப் பதில் சொன்னார். இந்த உயர்ந்த ஹாஸ்யத்தை என்னால் எப்போதும் மறக்க முடியாது!

* * *

எழுத்தாளர்களுக்குள்ளே ஆசிரியர் கல்கி ஏக சக்ராதிபதி. அவர் எழுத்துக்கு ஒப்புமில்லை உயர்வுமில்லை. கல்கி ஆசிரியர் எழுத்துக்காக உயிர் வாழ்ந்தவர். வாழ்க்கைக்காக எழுத்து என்பது அவரிடம் இல்லை.

தமிழில் எழுதலாம், எளிய நடையில் எழுதலாம், ஹாஸ்யமாக எழுதலாம்; அரசியலைப் பற்றி எழுதலாம்; சங்கீதத்தைப் பற்றி எழுதலாம்; சிற்பங்களைப் பற்றி எழுதலாம்; விஞ்ஞானம் ஆத்ம ஞானம் முதலிய சகல ஞானங்களைப்பற்றியும் புரியும் படி லாகவமாக எழுதலாம்; கற்றவரும் மற்றவரும் படித்து ரஸிக்கும் முறையில் எழுதலாம் என்று வழிகாட்டியவர் கல்கி.

அவருடைய தமிழ்நடை மத்தகஜத்தின் கம்பீர நடையைப் போன்றது. ஜீவநதியின் நீரோட்டத்துக்கு ஒப்பானது. சிவகாமியின் நடனத்துக்கு இணையானது.

கல்கியின் கதைகளையோ, கட்டுரைகளையோ, சங்கீத விமரிசனங்களையோ வாசகர்கள் படிக்க ஆரம்பித்து விட்டால் அவ்வளவுதான்; விஷயத்தில் இரண்டறக் கலந்து விடுவார்கள். படிக்கும்போது தங்களையும் சுற்றுப்புறச் சூழ்நிலையையும் மறந்து விடுவார்கள். படிக்கும் விஷயத்துக்கு உள்ளத்தைப் பறிகொடுத்து விடுவார்கள்.

கல்கி அவர்களும் அப்படித்தான். எந்த விஷயத்தைக் குறித்து எழுத ஆரம்பித்தாலும் சரி; அதன் நுனிப் புல்லை மேயும் வழக்கம் அவரிடம் கிடையாது. விஷயத்தை ஆர அமர யோசிப்பார். நன்றாக ஆராய்ந்து அலசிப் பார்ப்பார். பிறகு எழுத உட்காருவார். உட்கார்ந்தால் அவ்வளவு தான்; தம்மையும் சுற்றுப்புறச் சூழ்நிலையையும் மறந்து விடுவார். எதிரில் யானைகளைக் கொண்டுபோய் நிறுத்தினாலும் அவர் கண்ணுக்குத் தெரியாது. அவ்வளவு தூரம் விஷயத்தில் லயித்து எழுதுகோலுடன் இணைந்து ஐக்கியமாகி விடுவார்.

இப்படியெல்லாம் கல்கி ஆசிரியர் அவர்கள் எழுதித் தமிழ் நாட்டையும் தமிழர்களின் பண்பாட்டையும் மேம்படுத்தி யிருக்கிறார்.

மாமல்லபுரத்துச் சிற்பங்களைப் போலவும், அஜந்தாவின் அழியாத வர்ண ஓவியங்களைப் போலவும் ஆசிரியர் கல்கியின் சிருஷ்டிகள் அழியாப் புகழ் பெற்றவை.

Printed and Published by T. Sadasivam at the "Kalki" Press,
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras-10.

# PIONEERS IN TRANSPORT













அன்றாடத் தேவைகளை
யும் மற்றும் வருங்காலத்
தேவைகளையும் பரிசீலித்து
திருப்தி அளிக்கும் வகையில்
புதுப்புது முறைகளைக் கையாண்
டதால் நாங்கள் இன்று போக்கு
வரத்து சாதனங்களை அமைப்
பதில் முன்னணியில் நிற்கிறோம்.
எங்கள் மிகச் சிறந்த அனுபவ
மும், வேலைத்திறனும், திருப்தி
கரமான சேவை அளிக்கவே
பயன்படுத்தப் படுகிறது.







## Simpson & Co Ltd
MADRAS-2.

கிளைகள் :
பெங்களூர்-உதகமண்டலம்-திருச்சி-செகந்திராபாத் (டெக்கான்)

REGISTERED No. M. 4392
*Registered as newspaper in Ceylon*



## எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் நடனம் ஆடியிருப்பேன்...

திரை விழும்முன் ஜனங்கள் கைகொட்டி ஆர்பரித்ததைக் கேட்டதும் என் மனம் என்றுமில்லாத சந்தோஷத்தால் பூரித்தது. முதற் பரிசான தங்கப் பதக்கத்தை சபா அத்யக்ஷர் எனக்கு அளித்த பொழுது நான் மெய்மறந்து போனேன். எனது நடன ஆசிரியர் பெருமிதத்துடன், "இரண்டு வருடங்களுக்குமுன் என்னிடம் நடனம் கற்றுக் கொள்ள வந்த நோய்ஞ்சலான பெண் இவள்தான் என்று இப்பொழுது யார் கூறுவார்கள்" என்று சொன்னார். ஆம், இரண்டு வருடங்களுக்கு முன் கால் மணி நேரம் கூட நடனமாட எனக்கு சக்தியில்லாமல் இருந்தது. என் தாய் இது விஷயமாக எங்கள் டாக்டரிடம் கேட்டாள். அவர் என்னைப் பரிசோதித்து, இவ்வாறு கூறினார்: "கவலைப்பட ஒன்றுமில்லை. விடமின்கள், புரதசத்துக்கள், மாவு சத்துக்கள், தாதுப்பொருள்கள், மேலும் முக்கியமாக சக்தியைத்தரும் சுத்தமான கொழுப்புகள் சேர்ந்த சமநிலை உணவுதான் அவளுக்குத் தேவை."

மறுநாள் என் தாய் கடைக்குச் சென்று உண்மையிலேயே சிறந்த சமையல் கொழுப்பு தனக்கு வேண்டுமென்று கேட்டாள். உடனே கடைக்காரர் ஒரு டால்டா வனஸ்பதி டின்னை எடுத்துக் கொடுத்தார். டால்டாவில் தயாரித்த சமையல் சாப்பிட்டபின்தான் எனக்கு சாப்பாட்டில் ஆசை பிறந்தது. டால்டா வனஸ்பதி எல்லா உணவின் இயற்கை ருசியையும் பரிமளிக்கச் செய்கிறது. வெகு சீக்கிரமே உடம்பில் தென்பு ஏற்பட்டு மணிக்கணக்காக நடனம் கற்றுக் கொள்ள முடிந்தது. சக்தி அளிக்க டால்டா வனஸ்பதியைப் போல் சிறந்த வஸ்து வேறெதுவுமில்லை. இப்பொழுது டால்டா வனஸ்பதியில் விடமின் 'ஏ', 'டி', சேர்ந்திருக்கிறது. மேலும் அது காற்றுப்புகாத சீல்செய்த டின்னில் கிடைப்பதால் எப்பொழுதும் புதுமணம் மாறாமலும், சுத்தமாகவும், ஊட்டமளிப்பதாகவும் இருக்கிறது. அது மிகவும் சிக்கனமானதும்கூட.

உடல் வளர்ச்சிக்கு உதவும்
உணவுகளின் முக்கியத்துவம்.

இலவச ஆலோசனைகளுக்கு இன்றே எழுதுங்கள்:

தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்
தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1

10, 5, 2, 1 பவுண்டு டின்களில் கிடைக்கிறது.




மர அடையாளமுள்ள டின்னைப் பார்த்து வாங்குங்கள்

# டால்டா வனஸ்பதி

சிறந்த சமையல் — குறைந்த செலவு

HVM. 216-50 TM